உ

குருபாதம்.

தவத்திரு சோமசுந்திரத்தம்பிரான் சுவாமிகள்
தருமை ஆதீன சமயப்பிரசார நிலையம்
சென்னை.

---

## வாழ்த்துரை

'தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசக மென்றுணர்' —ஔவையார்

திருவள்ளுவர் திருக்குறள் பொது மறை. திருஞான சம்பந்தர் தேவாரம் சிறப்பு மறை. இரண்டற்கும் பொருள் முடிபு ஒன்றே. இஃது எல்லோருக்கும் எளிதில் விளங்கக் கூடியதன்று. எளியவர்களும் இரண்டற்கும் கருத்து ஒன்றே என்பதை தெளிய விளக்குகிறது இந்நூல்.

மற்றொரு வகையில் நோக்கும்போது திருக்குறள் அறிவுநூல். தேவாரம் அருள்நூல். அருளில் அறிவு அடங்கும். அறிவில் அருள் அடங்கா. அந்நிலையில் அருளியலைத் தெளிவிக்கும். திருஞானசம்பந்தர் தேவாரத்தில் அறிவியலைத் தெளிவிக்கும் திருக்குறள் கருத்துக்கள் அமைந்துகிடக்கும் பான்மையினைத் தமக்கே உரிய விரிவுரைப் பாணியில்—பேச்சு நடையிலேயே, எழுத்து நடையையும் உருவாக்கியுள்ளார் இந் நூலாசிரியர்.

அருளில் அறிவை இணைத்துக் காட்டும் ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கதாகும். கருத்தொற்றுமையில் நாட்டமுள்ளவர்களுக்கு இந்நூல் ஒரு வழிகாட்டியாக உள்ளது.

அருளையும் அன்பையும் இணைத்து இந்நூலை உருவாக்க ஊக்கமளித்தும் நூலை வெளியிடவும் உதவிய திரு. சென்னியப்பருடைய வண்மை போற்றற்குரியது.

இந்நூலாசிரியரும் நூலும் நெடிது இனிது வாழவும் இந்நூற் கருத்து மாணவர் உள்ளத்தே மலரவும் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கர் திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

சென்னை.<br>10-4-'66

அன்புள்ள,<br>சோமசுந்தரத்தம்பிரான்

உ

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான்

# உயர்திரு ச. தண்டபாணி தேசிகர் அவர்களது அணிந்துரை

சிவானுபவத்தைத் தெளிவிப்பன திருமுறை. உலகானுபவத்தை யுணர்த்துவது திருக்குறள். முன்னது சிவநிறைந்த சிந்தையிலிருந்து விரிந்தெழுந்த அமுதக்கடல்; பின்னது ஒழுக்கமும் - குறிக்கோளும் நிறைந்த மனத்திலிருந்து சுரந்தெழுந்த பாற்கடல். பாலையும் - அமுதத்தையும் தனித்தனியே உண்ணும்போது உண்டாகாத தனியினிமையைக் கலந்துண்ணும்போது உண்டாகிறது. அதை நுகர்வதே எங்குமிலாத தோரானந்தம். அதனை நுகர்ந்தவர் நாவலர் திரு நடேசமுதலியார் அவர்கள். அதன் விளைவாய இன்பத்தை நம்பாலதாக்குகின்றார் இக்கட்டுறை நூலால். இது செந்தமிழ்க்குச் செய்யும் பெரும்பணி.

இந்நூலை நடு நின்று முற்றும் கற்றேன். திருக்குறட் கண்ணாடியை அணிந்துகொண்டு பலநோக்கில் அதன் உரை நயங்களைப்பிற இலக்கியத்துணைகொண்டு நுணுகி நோக்கியபின் தெளிந்த சாத்திர ஒளியைக்கொண்டு திருமுறைச் செம்பொருளைக் காண்கின்றார் ஆசிரியர்.

பார்க்கும் பொருளின் வடிவும் நிறமும் கண்ணாடியினது ஆதல் போலத் திருக்குறளும் திருமுறையாகிறது எனலாம்.

ஓர் அருமை! ஆசிரியர் மனத்தை விட்டகலாத கம்பன் இரண்டோரிடங்களில்தான் தலைநீட்டுகிறான். ஆகவே இந்நூல் முழுதும் சிவமயமாகவே திகழ்கிறது.

எழுத்தோட்டமும் கருத்துச்செறிவும், கட்டுரை வன்மையும், பகிர்ந்து கொடுத்தும் பண்பும் என்மனத்தைக் கவர்ந்த அமைப்புகள். என்னையும் இரண்டுமணிநேரம் எதனையும் தொடாமற் கருத்தூன்றிப் படிக்க வைத்துவிட்டது இந்நூல்.

சுவை கண்டபூனை உறியைத்தாவுவது போல உரைக்கின்றேன். இம்முறையில் இணைத்து இணைத்து எல்லா இலக்கியங்களையும் ஆய்ந்து சிறந்த ஆய்வு முறையில் தருவார்களாயின் திருமுறைகளின் உட்பொருளைக்கண்டு உலகம் உவக்கும் : உய்யும்.

அறிஞர் பெருமக்கள் இத்தமிழ் விருந்தை ஏற்றுச் சுவைத்து மகிழ்வார்களாக.

செந்தமிழ்க்கந்தன் திருவருள் என்றும் இவர்கள் பாலதாகுக.

இங்ஙனம்,

ச. தண்டபாணி தேசிகர்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துணைத் தமிழ்ப்

பேராசிரியர். திருமுறைச்செல்வர்

## உயர்திரு க. வெள்ளை வாரணனார் அவர்கள்

## முன்னுரை.

சொல்லின் செல்வர் புலவர் திரு. அ. நடேசமுதலியார் அவர்களைத் தமிழுலகம் நன்குணரும். இவ்விருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் செந்தமிழும் சிவநெறியும் வளர்த்த சிவஞானச் செல்வர் திருப்பாதிரிப்புலியூர் அருள்மிகு ஞானியாரடிகளாவர். அருள்மிகு அடிகளார் அவர்களின் அன்புக் குரிய மாணவராகவும் தமிழ்ச்சான்றோர்களின் நன்மதிப்புக்குரிய பெரும்புலவராகவும் விளங்கும் திரு. முதலியாரவர்கள், தமிழ் நூல்களை ஆழ்ந்து பயின்றவர்கள் என்பதும், செந்தமிழ்க்காப்பியங்களின் சுவை நலங்களில் தாம் திளைத்து மகிழ்தலேயன்றித் தாம் கண்டுணர்ந்த சுவை நலங்களைப் புலவர்களும் பொதுமக்களும் விரும்பிக்கேட்டு மகிழுமாறு விரித்துரைக்கும் செந்தமிழ்ப் பெருநாவலர் என்பதும் அறிஞர் பலரும் நன்கறிந்தனவே.

திரு. முதலியாரவர்கள், திருக்குறள், கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய சிறந்த தமிழ்நூல்களைத் தமிழகத்திற் பல இடங்களிலும் பலர்க்கும் பாடஞ்சொல்லியும் பல பேரவைகளிற் சொற்பொழிவு வாயிலாக விளக்கியும் தமிழ்வளர்த்தலையே தமது மகிழ்ச்சிக்குரிய பொழுது போக்காகக் கொண்ட நல்லிசைப் புலவர் என்பதனை நாடறியும். அண்ணாமலைப்பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளராகத் தமிழ்ப்பணிபுரியும் இவர்கள், திருக்குறள் கடவுள் வாழ்த்தின் பொருள்நலங்களை விளக்கும் முறையில் இந்நூலை வனப்புற இயற்றியுள்ளார்கள் சமயக் கணக்கர் மதிவழிகூறாது உலகியல் கூறிய தெய்வப்புலவர், திருவள்ளுவர், தம் நூலின்வாயிலாக உண்மைப்பொருள் இது

வெனத்தெரிவித்த சிறப்புடையது, கடவுள் வாழ்த்தாகிய முதலதிகாரமாகும். இவ்வதிகாரத்திலுள்ள பத்துக்குறள் வெண்பாக்களுக்கும் எழுத்தின்திறனறிந்து இன்சொற் பொருளின் அழுத்தந்தனை நன்குணர்ந்து தெளிவாகப் பொருள் கண்டு தெளியும் முறையில் திரு. முதலியாரவர்கள் எழுதியுள்ள பத்துக் கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

திருக்குறள்கடவுள் வாழ்த்திலுள்ள சமய நுண்பொருள் களைத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் அருளிய தேவாரத் திரு முறைகளுடன் ஒப்பு நோக்கி விளக்கும் முறையில் ஆசிரியர் இந்நூலை இயற்றியுள்ளார். திருவள்ளுவர் அருளிய சமய நுண் பொருள்கள் தேவாரத்திருமுறைகளில் தெளிவாக விளக்கப் பெற்றிருத்தலை எடுத்துக் காட்டுமுகமாகத் தேவர் குறளும் மூவர் தமிழும் பொருளால் ஒன்றே என்னும் முடிபினை இந்நூல் நன்கு விரித்து விளக்குகின்றது.

எத்திறத்தார் கண்ணும் இகலின்றி அன்பினுல் ஒத்துப் பழகும் பண்பினை இயல்பாகக்கொண்டுள்ள புலவர் திரு. அ. நடேசமுதலியாரவர்கள், நவில் தோறும் நூல்நயங்கண்டு மகிழும் தம் புலமை நலம் விளங்கவும் இத்தகைய புலமை நலத் தினைத் தம் நூலைப்படிக்கு மற்றவர்களும் பெற்று மகிழவும் தெளிவும் இனிமையும் பொருந்திய செந்தமிழ் நடையில் இந் நூலை அழகுற அமைத்துள்ளார்கள். அறிவுக்கு நல்விருந் தாகிய இதனைத் தமிழன்பர்களும் மாணவர்களும் போற்றிப் பயன் கொள்ளுதல் வேண்டும் எனது வேண்டுகோளாகும்.

இங்ஙனம்,

க. வெள்ளைவாரணன்

திருவருள் துணை

# முன்னுரை

திருக்குறளைப் பொதுமறை என்றும் தெய்வப் பனுவல்களைத் திருமுறை என்றும் நாம் வழங்கி வருகிறோம். பொதுமறையின் பயிலும் போது திருமுறையில் உள்ளம் தோய்வு பெறுவதும், திருமுறையிற் பயிலும் போது பொதுமறையில் உள்ளம் நாடுவதும் நூல் பயில் இயல்பினர்க்கு இயல்பு. அம்முறையில் உருவான சிறுமுயற்சியே இந்நூல்.

நன்மக்கள், அறிவுவழி நின்றும், அருள்வழி நின்றும் சமுதாயத் தொண்டினைச் செயலாலும், சொல்லாலும், எக்காலத்தும் செய்து வந்தனர், வருகின்றனர். அவ்விருதிறத்தார்க்கும், சமுதாயம் நல்வழிப்பட்டு, உய்திபெற வேண்டும் என்பதே நோக்கம், குறிக்கோள். அவர்களுள் முதன்மையான, அறிவு வழிநின்ற திருவள்ளுவரும், அருள்வழி நின்ற ஞானசம்பந்தரும் ஒரு பொருள் நுதலிய இரு பெருங் குரவர்கள் என்பதனை, அவர்களுடைய திருமொழி கொண்டே தெளிய முயற்சித்துள்ளேன்.

திருக்குறளில், முதலதிகாரப் பத்தினையும், திருமுறையில், முதல் மூன்று திருமுறைகளில், பத்துத் திருப்பாசுரங்களையும் கொண்டு விளக்கம் செய்து ஒருமைப்பாடு காட்ட முயன்றுள்ளேன்.

சாதி, சமயம் மொழி, நாடு, காலம், கடந்து அனைத்துக்கும் பொதுவாய் விளங்கும் பொதுமறைப் பொருளை, சைவ சமயப் பேருண்மை விளக்கும் திருமுறையோடு ஒப்பிட்டுக் காட்டத் துணிந்தது அனுபவமும், அறிவும், ஒன்றுதான் என்றதனை வலியுறுத்தவும், அருளாளர்களுடைய அனுபவம், புறம் போகாது என்பதனைத் தெளிவு செய்யவுமே ஆகும்.

சைவ சமயத் தெய்வப் பனுவலோடு திருக்குறளை ஒப்பிட வரும்போது, கடவுளுண்மை காட்டும் கடவுள் வாழ்த்து ஒன்றே துணையாகவும், திருமுறையில், முன்னுள்ள முதல்வராம் ஞானசம்பந்தர் திருவாக்கே முதன்மையாகவும் கொண்டு விளக்கம் செய்துள்ளேன்.

பத்துக் குறளுக்கும் பத்துப் பாசுரங்கட்கும், ஓரளவு தொடர்பு பட்ட விரிவுரையாகவும் இந்நூல் விளங்கும் என்பது என் கருத்து. கருத்தொற்றுமை என்ற ஆய்வின் பாற்படும் இந்நூல்.

திருக்குறட் பற்றும், திருமுறைப் பற்றும் உடையார்க்கு இம்முயற்சி சிறந்த சுவைப்பயனை தரும் என்று எண்ணுகிறேன். சில சொற்கள் நீண்ட நினைவினையும் பொருள் விளக்கத்தினையும் அளிப்பன என்பதனை அறிஞர்களும், அன்பர்களும் மறுக்க மாட்டார்கள் அல்லவா ?

எல்லாம் வல்ல முழு முதற் பொருளாய முருகப் பெருமான், இந்நூலைப் படித்துச் சுவைப்பார்க்குச் செந்தமிழ் இன்பப் பயனை அளிப்பானாக.

என்பால் அன்பு கொண்டு அருள் பாலித்து திருநோக்கஞ் செய்து இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கி உதவிய தர்மபுர ஆதீனம் சென்னைச் சமயப் பிரசார நிலையம் தவத்திரு சோம சுந்திர தம்பிரான் சுவாமிகளுக்கு எனது பணிவான வணக்கம் உரித்தாகுக.

இந்நூலை, என்பால் வைத்த அன்பின் பெருக்கால், பார்த்துக், கருத்துரையும் உதவிய, நல்லிசைப் புலவர் பெருமக்களாய, மகாவித்துவான், உயர்திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர் கட்கும், திருமுறைச் செல்வர், உயர்திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கட்கும், என் மனங்கனிந்த நன்றி.

இம் முயற்சியை நூல்வடிவாக அமைத்துத். தந்த என் அரும்பெறல் துணைவர், உயர்திரு. S. சென்னியப்ப முதலியார் அவர்கட்கு என்றும் மறவா நன்றியுடையேன்.

அழகு தவழ அச்சிட்டுதவிய சூப்பர் பவர் பிரஸ் அச்சகத் தாருக்கும், குறிப்பாக திருவாளர். S. வெங்கட்டராமன் அவர் களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

திருவருளே துணை.

அ. நடேச முதலியார்
புலவர்
அண்ணாமலை பலகலை கழகம்
சிதம்பரம்

# திருமுறைகளில் திருக்குறட் கருத்துக்கள்

---

சமய நூல்கள் சாத்திரம் தோத்திரம் என இருவகைப் படும். சாத்திரங்கள் அறிவுக்கண்கொண்டு கடவுள் உண் டென்று காட்டி, அப்பொருளை அடைவதற்குரிய வழிவகை களைத் தெளிவு செய்வன. தோத்திரங்கள் என்பன அன் பினுல் கடவுளைக் கண்டனுபவித்து அனுபவத்திறனை அனுபவித்தவாறே கூறுவன. இவ்விரண்டும் சைவ சமயத்திற்கு இருகண்போல் விளங்கி, கடவுள் உண்மையை அறிவதற்கும் அன்பு செய்து அடைவதற்கும் வழி செய்கின்றன. இத்திறனை நன்கறிந்த சமயச் சான் ரேர் தோத்திரங்களைத் திருமுறைகள் என்றும், சாத்திரங் களை அறிவுநூல் என்றும் கூறிப் பாகுபாடு செய்தனர், அறிவுநூல் இருவகைப்படும். பொதுநூல் என்றும், சிறப் புநூல் என்றும். அவற்றுள் சிவஞான போதம் முதலிய சந்தான பரம்பரை மெய்கண்ட சுவாமிகள் போன்ற வர்கள் செய்தவை சிறப்பு நூல்கள். அவை சைவ சமயச் சார்புடையனவாய், அறிவான் மெய்ப்பொருளை உண்மைப்படுத்தி, அதற்குரிய வழிவகைகளைச் செய்வன. திருக்குறள் அங்ஙனமன்றி, உலகியல் கூறிப் பொருளிது என்று தெரிக்கும் பொது நூலாய் அமைந்து அனைத்துவித சமய உண்மைகளையும் உள்ளடக்கி உண்மை விளக் குவது.

" ஓது சமயங்கள் பொருளுணரும் நூல்கள்
ஒன்றோ டொன்றொவ்வாமல் உளபலவும் அவற்றுள்
யாது சமயம் பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்லது எனும்பிணக்க தன்றி
நீதியினால் அவையெல்லாம் ஒரிடத்தில் காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதலினால் இவை யெல்லாம் அருமறை ஆகமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீ ழடங்கும்.

இந்தச் சிவஞான சித்தியார் திருவிருத்தத்தால், சமயநூல்கள் ஒன்றோடொன்று ஒவ்வாநிலையின. பொருளுணரும் நூல்களும் ஒன்றோ டொன்று ஒவ்வாப் பொருளன என்று கூறி அவற்றுள் மறையும், ஆகமமும் அனைத்து வித சமய உண்மைகளையும் தம்மகத்தே கொண்டன என்று உணர்கிறோம்.

சித்தியார் சமயநூல். ஆகையால் மறையையும் ஆகமத்தையும் காட்டி, பொது நூலாக மறையையும், சிறப்பாக ஆகமத்தையும் தெளிவு செய்து செல்கிறது. ஆனால் பொருளுணரும் நூல்கள் கூறும் வேற்றுமைகள் அனைத்தையும் தன்னகத்தே அடக்கி, அனைத்தையும் விளங்கச் செய்யும் ஒரு பொது நூல் உண்டெனின் அந்நூல் திருக்குறளே ஆகும். இதனை,

" எப்பா லவரும் இயைபவே - வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி "

என்ற பண்டைய புலவர் கண்ட உண்மையாலும் தெளியலாம்.

அன்பு வழி நின்று, அனுபவத்தால் உண்மைப் பொருளைக் கண்ட, காட்டிய சமயச் சான்றோர்களுடைய

பொருள் அனுபவமும், அறிவு வழிநின்று உண்மைப் பொருளைக் கண்டு காட்டிய நல்லறிஞர் அனுபவமும் ஒன்றுகத் தானிருக்கும் என்பதை நாமறிதல் வேண்டும். ஆகவே சமயச் சான்றோரில் சமய குரவர்களாய் வந்தவர் களில் திருஞான சம்பந்தப் பெருமான் முதல்வராய் விளங்குபவர். திருமுறைகளை வகுத்த சான்றோர்களும், ஞானப்பிள்ளை யாருடைய அருட்பாடல்களையே முதல் மூன்று திருமுறைகளாக அமைத்துள்ளமை காண்கிறோம். இதற்குப் பல காரணங்கள் காட்டலாமாயினும், உலகியல் அறிவு பெற முடியாத இளமைப் பருவமாய மூன்ருண்டி லேயே, திருவருளால் பொருளனுபவம் முதிர்ந்து வழியும் அருட்பாடல்கள், ஞானப்பிள்ளையாருடைய தாகலின், உண்மைப் பொருளை அறிதற்கும், அனுபவித்தற்கும், அவர்களுடைய திருப் பாடல்களே முதல் நிற்பன என்று காட்டினுர்கள் என்று கொள்ளலாம். அங்ஙனமாயின் சம்பந்தப் பெருமானுடைய சிவானுபவமாய முதல் மூன்று திருமுறைகளில் காணப்படும் உண்மைகள் அறிஞர் பெருமாஞயதிருவள்ளுவர் காட்டும் உண்மைகளோடு ஒப்பமுடிந்தன வாகவே விளங்கும், விளங்கவேண்டும் என நாமறியலாம். இவ்வாறு ஒப்பு நோக்குவது நூலறி விற்காக மட்டும் அன்று, பொளுண்மை உறுதிசெய் வதற்கும், பல் வேறுபட்ட கருத்துக்களுள் உண்மை எது என்று தெளிவு பெறுதற்கும் உறுதுணையாகும். அதனிலும் அன் பின் வழிநின்று காணும் அனுபவப் பொருளும், அறிவின் வழிநின்று காட்டும் தெளிவுப் பொருளும் ஒன்ருயின் அதுவே மெய்ப்பொருள் என்று தெளியவும் கூடும். ஆகையால் திருவள்ளுவர் தாம் செய்த திருக்குறள் என்னும் உலகப் பொது மறையில், கடவுளைப்பற்றிக் கூறும் கடவுள் வாழ்த்தெனும் பகுதியில் அறிவுத் தெளிவால் காட்டிய உண்மைகளை, சமயாசாரி யருள் முதல்வராய் அறிவு நலம் பெறுவதற்கு முன்னே

அனுபவ நலன் திருவருளால் பெற்ற ஞானப் பிள்ளையார் காட்டும் அனுபவப் பொருளும் ஒன்றேயாய் நிற்பதனை நாமறிந்தால் நமக்கும் பொருள் தெளிவும் அன்பு நெகிழ்வும் உண்டாம் என்று கருதி முதல் மூன்று திருமுறைகளில், திருக்குறள் கடவுள் வாழ்த்து முழுதும் பொருளாலும் தொடராலும் இடம் பெற்றுள்ளமையைச் சிறிது சிந்திக்கலாம்.

நிற்க. திருக்குறள் ஒரு ஒழுங்கு முறை செய்யப் பட்டது. மூன்று பாலாய், நூற்று முப்பத்துமூன்று அதிகாரங்களாய், அதிகாரங்கள் தோறும் பத்துப் பத்துத் திருக்குறள் என்ற வரையறை உடையதாய் ஒவ்வொரு அதிகாரமும், ஒரு பொருள் நுவல்வதாய் அமைக்கப்பட்ட ஒழுங்கு முறையினை உடையதாய் இஃது ஆசிரிய ருடையதே என்ற நிலையும் பெற்று விளங்குவது.

மேலும் திருவள்ளுவர் அறிவின் அனுபவங்களை உலகுக்கு உணர்த்த வேண்டும் என்ற நோக்கோடு திட்ட மிட்டுப் பலகால் சிந்தித்துச் செப்பனிட்டுச் செய்த நூல் என்று திருக்குறளை நோக்கும் போதே தெற்றென விளங்கு கிறது. ஆகையால் அது தொகை வகை விரிபெற்று ஒழுங்கு நிலை குறையாது, பொருளழகும், மொழியழகும் பெற்று விளங்கச் சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் பெருமை அறிவு நூலாய்த் திகழ்கிறது.

ஆனால் அருளாளர்கள் அருளிய அன்பு நூலாய்க் காணப்படும் திருமுறைகளில் பல அங்ஙனம் நூலாக யாக்கப்பட வேண்டும் என்ற கருத்தோடு பாடப்பட்டன அல்ல. அருளாளர்கள், தங்கள் அனுபவங்களை அனு பவித்தவாறே அனுபவ நிலையிலிருந்து வெளியிடுகிறார்கள். அதனைத் தொகுத்தும் வகுத்தும் பின்வந்தவர்கள் பயன் படுமாறு நூலாகச் செப்பனிடுகிறார்கள். மேலும் மூவர்

முதலிகளாய சமய குரவர்களும், அவர்களுள் ஞான சம்பந்தப் பிள்ளையாரும் தாங்கள் நூல் செய்ய வேண்டும் என்ற விருப்பமோ எண்ணமோ உடையவர்கள் அல்லர். அவர்கள் தங்கள் அனுபவங்களை, ஆண்டவனை அனுப விக்கும் முறைகளை, அங்ஙனமே இறைவனையே முன்னிலைப்படுத்தியும், மக்களை முன்னிலைப் படுத்தியும், தம் மனத்தையே முன்னிலைப் படுத்தியிம் கூறியுள்ளனர். அன்றியும் அனுபவ வெளிப்பாடும், அன்பு வெளிப் பாடுமே அவர்கள் அருளிப் பாட்டின் குறிக்கோளே தவிர, நூல் செய்யவேண்டும், ஒழுங்குமுறை வேண்டும் என்ற எண்ணம் அவர்கட்குக் கிடையாது. ஆனால் ஒன்று காண்கிறோம்.

அவர்கள் தமிழை இசையோடு பாடி அனுபவங்களை வெளியிட்ட ஒரு ஒழுங்கு முறை யினை மாத்திரம் அறிய முடிகிறது. அவ்வாறு, அவர்கள் சென்ற இடந்தோறும் அருளிய அருட்பாடல்களை பின் வந்த சமயச் சான்றோர் இசை முறை தழுவி, பண்முறை என்றும், இடமுறை தழுவி தலமுறை என்றும், பிரித்து வரிசைப் படுத்திச் செப்பனிட்டு நம்மனோர்க்கு நூல் வடிவாகச் செய்து உதவியுள்ளனர். அந்த உதவியே இன்று அப்பெரியார் களுடைய கருத்துக்களை அறியவும், அனுபவிக்கவும் நமக்கு உதவியாகிறது.

ஆகையால், நாம் திருக்குறளிற் காணும் ஒழுங்கு முறைக் கருத்துக்களை, திருமுறைகளில் அங்ஙனமே ஒழுகலாறுகக் காண முடியாது. அறிவு நூலில் காணப் படும் செப்பனிட்ட கருத்துக்கள் அனுபவ நூலில், அவர் கள் கூறுமிடங்கள் தோறும் சென்றுதான் காண வேண்டும்.

இங்கே மற்றொன்றும் அறிய வேண்டியது. சைவ சமய உண்மைகளை அளவை முறையால் விளக்க வந்த

ஒழுங்கு முறை பிறழாப் சாத்திரங்கள் அனைத்தும் அனுபவ அருளிப் பாடல்களில், ஆங்காங்கே காணப் படும் அனுபவ உண்மைகளைத், தொகுத்தும் வகுத்தும் விரித்தும் ஒழுங்கு முறை செய்து, தம்மறிவானும், அனுப வத்தானும், திருவருட்டுணையானும் அளவை நூலாகச் சாத்திரங்களாகச் செம்பனிட்டுள்ளார்கள் என்பதனையும் நாம் காண்கிறோம். ஆகையால் திருக்குறளில் காணப் படும் கடவுளைப் பற்றிய கருத்துக்கள், ஞானப் பிள்ளையா ருடைய முதல் மூன்று திருமுறைகளில் ஆங்காங்கே, அனுபவ வாயிலாக வெளிவருவதனை இனி நாம் காண் போம்.

திருவள்ளுவர், கடவுள் வாழ்த்தில் அளவை நூல் முறைப்படி வரிசை செய்து, பொருள், பொருளிலக்கணம், பொருளை அடைவதற்குரிய வழி, அடைந்தாற் பெறும் பயன், என்ற முறையில் செப்பனிட்டுள்ளார். அந்த முறைவைப்பையும், பொருளை எடுத்து மொழியும் அழகினையும் உள்ளவாறுணர்ந்த பேரறிஞராகிய பரிமேலழகர், தம் உரையில் மிகத் திறம்பட எடுத்துக் காட்டியுள்ளார். பொய்யில் புலவர் பெருமானுடைய பொருளுரையில் முதற் குறள் கடவுள் உண்டென்று கூறுகிறது. இதற்கு அவர் எடுத்துக் காட்டினுற் பொருள் உண்டென்று காட்ட முயற்சிக்கிறுர். அங்ஙனம் காட்ட முற்படும் போது உவமையால் காட்டுவது புலவர் வழக்கு. ஆனுல் தனக்குவமை யில்லாத தனிப்பொருட்கு எங்ஙனம் உவமை காட்டுவது! முடியாது, அங்ஙனம் உவமை காட்டவும் கூடாது. ஆனுல் பொருள் உண் டென்று காட்டவேண்டும், அதற்கு ஆசிரியர் ஒரு உண்மையினை அறிஞர்களை உணரும்படிச் செய்து, அதன் வழியாகத் தனிப் பொருள் உண்மையினை உண்மைப்படுத்துகிறுர். அது தான்.

'அகர முதல எழுத்தெல்லாம்' என்பது. அங்ஙனம், அகரம் முன்னுக முதலாக நின்று தானும் ஓரெழுத்தாய், அனைத் தெழுக்களும் ஒலிப்பதற்கு முதற் காரணமாய் இருந்தும், அனைத்துவித எழுத்துக்களின் ஒலியோடும் கலந்தும் விளங்குவதை அவரவர் அறிவுத் தரத்திற்கேற்ப அறிந்து கொள்ளும்படிப் பொருளழகும் ஆழமும் நுட்பமும் பொருந்தும்படி,

'அகரமுதல எழுத்தெல்லாம்' என்று கூறுகிறார். எழுத்து என்பது ஒலியையும் குறித்து, அவ்வொலியை நினைவூட்டும் வரிவடிவையும் குறிப்பதையும் நாமறிய வைப்பது போல, அகர முதல என்றதனோடமையாது, 'எழுத்தெல்லாம்' என்று முடிப்பதனால் ஒலி எழுத்தும் வரிவடிவும் இரண்டும் குறிப்பிடப்படு வதை உணரவைக்கிறார். இந்தப் பொருள் நயம் விளக்கம் பெறவேண்டி நிற்பதொன்று. அஃதாவது ஒலி நுட்பமானது. அந்நுட்ப ஒலியை நினைவூட்டும் வரிவடிவம் பருமையானது. வரி வடிவமே எழுத்தென்பதன்று. ஆனால் அவ்வரிவடிவமே அவ்வொலி வடிவை நினைவூட்டி விடுவதால் அவ்வரி வடிவை ஒலியாகவே பழக்கத்தால் நினைக்கிறோம், ஒலிக்கிறோம். வரிவடிவம் வேறு, ஒலிவேறு என்ற எண்ணமே நமக்கெழுவதில்லை. அவ்வெழுத்தின் வடிவம் கண்ட மாத்திரத்தில் ஒலிக்கச் செய்கிறோம். பிறர்க்கும் அவ்வரி வடிவைக் காட்டி, அதனால் உணர்த்தப்படும் ஒலியைக் கூறி, அவ்வொலி யாகவே அறிவுறுத்துகிறோம். ஆகை யால் இந்த உண்மையை நமக்குக் காட்டுவார் போன்று, இறைவனுடைய நுண்ணிய எங்கும் நிறைந்த தன்மையையும் அவன் அறிவுக்கறிவாகி விளங்கும் தன்மையையும் நினைவூட்டுவது பருப்பொருளாகிய இவ்வுலகமே என்று காட்டுகிறார்.

இவ்வுலகமே இறைவனன்று. இறைவனை, அவனது ஆற்றலை, அவனது அளவற்ற செயல் திறத்தை, நினை

லூட்டுவது என்பதும்: அவ்வரிவடிவே ஒலிவடிவாய் நினைவின் மிகுதியாலும், பழக்கத்தாலும் பயன்பட்டு வரு வதுபோன்று, இவ்வுலகமே கருதப்படுவது என்ற உண்மையையும் தெளிவிப்பவர் போன்று, 'அகர முதல எழுத்தெல்லாம்' என்றருளுகிறார்.

'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற எடுத்துக் காட்டில் மேலும் ஒரு சுவை காணலாம். அதாவது நுட்பமாகிய அகர ஒலி, எல்லா எழுத்துக்களிலும் கலந் துள்ளது. தனியாகவும் ஒலிக்கிறது. அன்றியும் ஒலிக் காத போதும் ஒலி தோன்றுவதற்கு முன்னும் உள்ளது. அதனைத் தான் திருவள்ளுவர் 'அகர முதல' என்றும், அகர முதல எழுத்தெல்லாம் என்றும் கூறுகிறார். ஒலிக்கும் முன்னாக இருப்பது அகரம் என்றும், ஒலியாய் முதலில் வருவது அகரம் என்றும் பொருள்படும்படி 'அகர முதல' என்பது உள்ளதை அறியலாம். அதன் பின் எல்லா எழுத்திலும், அகர முதல என்று பொருள் கொள்ள வைக்கிறார். இதனால் இறைவன் அருவப் பொருள் என்று கொள்ளவைக்கிறார். இதனால் இறைவன் அருவமாய் முன்னும், உருவமாய்த்தனித்தும், அருஉருவ மாய் அனைத்துயிரிலும், உலகத்திலும் கலந்தும் உள்ள தன்மையை அறிய வைக்கிறார்.

அல்லாமலும், இறைவனது தன்மையைத் தானே யாய், அவையேயாய்த் தானே அவை யேயாய் நிற்கும் நிலை காட்டுவர் சான்றோர். அம்முறையும் திருக்குறளில் 'அகர முதல் எழுத்தெல்லாம்' என்ற பகுதியில் காட்டப் படுகிறது.

அகரம் தனித்து நிற்கும்போது தானேயாய் நிற்கும் நிலையும், மற்றை எழுத்துக்களோடு கலந்து, தன்னியல் அறிய முடியாது நிற்கும் போது அவையேயாய், அனைத்

தெழுத்துக்களையும் இயக்கும் நிலையில் அவையேதானே யாய் நிற்கும் நிலையினையும் வெளிப்படுத்துகிறார். அல்லாமலும் நுட்பமாகிய ஒலி வடிவத்தினின்றும் (நாதம்) பருமையாகிய பொருள் அனைத்தும் தோன்று கின்றன என்ற உண்மையையும் ஒலியாகிய அகரத்தைக் குறிப்பிட்டுப்பின் உலகமாகிய பருப் பொருளினைக் காட்டுவதாலும் அறிகிறோம் (சப்தப்பிரபஞ்சம்-- அர்த்தப் பிரபஞ்சம்) (நாதம்-பிந்து) இவ்வாறே ஒரு எடுத்துக் காட்டாய ஒலியாகிய அகரம் தானும் தனித்து ஒலித்து, அனைத்துவித ஒலிகளுக்கும், காரணமாய் நின்று, அனைத் துவித ஒலியெழுத்துக்க ளோடும் கலந்தும் ஒலித்து நிற்கிறது. தனி அகர ஒலி செவிப்புலனால் அறியற்பாலது. மற்றைத் திரிபொலிகளோடு-கலந்து ஒலிக்கும் அகர ஒலி, செவிப்புலனாலும் அறிய முடியாது, நுண்ணுணர்வால், மற்றை ஒலிகளோடு கலந்துள்ளமை தெளியக்கூடியது. அனைத்தொலிகளும் ஒலிக்காத போதும், அகர ஒலி அழி யாமல் உள்ளே ஒடுங்கி நிற்பது என்ற உண்மையை ஒலி நூலார் கூறும் உண்மைகளால் நாம் அறியலாம். ஆனால் அகரம் என்று வரிவடிவில் எழுதப்படும், அகரம், மற்றை வரிவடிவ எழுத்துக்களுக்கு இடத்தால் முன்னிற்குமே யன்றி, மற்றை வரிவடிவங்களோடு கலந்து காட்சி அளிப்பதில்லை. நுண்மையில் காணும் சிறப்பியல்புகள் பருப்பொருளில் காணமுடியாது. ஆனால், பருப்பொருள் நுண்பொருளை அறிவதற்குத் துணைசெய்யும் சாதனமாகும் என்பதை மறுக்க முடியாது. வரிவடிவம் இல்லையேல் எழுத்துக்களை வழிவழிச்சேர்த்துச் சொல்லாக்கிப் பொருள் உணர்ச்சியைப் பல்லாயிரம் ஆண்டுகட்குப் பின்வரும் சமுதாயமும் அனுபவிக்கும்படிச் சான்றோர்கள் செய்த நூல்கள் நமக்கு யாங்ஙனம் கிடைக்கும்? எனவே வரி வடிவம் நமக்கு நுண்வடிவை நினைப்பூட்டுவது மட்டுமன்று நுண்ணுணர்வை வழிவழியாக வளர்க்கும் சாதனமும்

ஆகும். உவமை, உவமையிலியாகிய ஒரு பொருளுக்கு எந்த அளவு பொருந்துமோ, அந்த அளவு வரை பொருந் தும்படியும், அதற்கு மேல் அனுபவத்தால் அறியும்படியும், அமைக்கும் ஆற்றல் மிகுந்த அறிவுடையார் திருவள்ளுவர் என்பதனைப் பின்வரும் குறளாலும் சுட்டிச் செல்கிருர்.

‘ தனக்குவமை இல்லாதான் ’ என்ற குறளில் இறை வன் தனக்குவமை இல்லாதவன் என்பதனுல் முன்காட்டிய உவமை ஓரளவு பொருந்துவதே யன்றி, முற்றுவமை யாக, ஆகாது என்பதனை அறியலாம். அல்லாமலும் அந்த முதற் குறளிலும் உவமையாக அகரத்தைக் கூருது எடுத்துக் காட்டாகவே அமைக்கிருர் அறிஞர் பெருமான். இந்நுட்பத்தினை முற்றும் உணர்ந்த பரிமேழகர் அவ் வுவமைச் சிறப்பினை விளக்க வந்தபோது, ‘ தலைமை பற்றி வந்த எடுத்துக் காட்டுவமை’ என்று கூறிச் சிறப்பிக் கிருர். இத்தனையும் வள்ளுவர் அறிவுத் துறையில் நின்று காணும் காட்சி. இந்த அறிவினுல் கண்ட உண்மையை அனுபவ வாயிலாக உணர்த்த வந்த ஞானசம்பந்தப் பிள்ளையார் எங்ஙனம் காட்டுகிருர் என்பதனை இனிக் காண்போம்.

ஞான சம்பந்தப் பிள்ளையார் காலத்தால் தோன்றிய பெரியார். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சி மனித அறிவிற்கெட்ட முடியாததாய் நிகழும். அந் நிகழ்ச்சி மக்களுள்ளத்தில் ஒரு புதிய திருப்பத்தினையும், தெய்வ உண்மையினையும் உண்மைப்படுத்தும். ஞான சம்பந்தப் பிள்ளையாரின் அவதாரமும் அங்ஙனமே ஒரு புதிய நிகழ்ச்சியாய், மக்கள் உள்ளத்தில் ஒரு புதிய திருப் பத்தினையும், தெய்வ உண்மையினையும் வலுப்படுத்திற்று. மூன்ருண்டு நிறைந்த குழந்தை செந்தமிழில் தேனிசை வடித்துப்பாடும் இயல்பினை அறிந்த, கண்ட மக்கள் தெய்வ நிந்தனை செய்துழல், சமணரொடு தேரரை

நம்பாதவராயும், மறுப்பவராயும் திரும்பினர். அன்றியும், பிள்ளையாருடைய பாட்டினையும் பொருளினையும் போற்றிய தோடு, அப்பாட்டுக்கள் அனைத்தும் அருளிப்பாடல் களாகவே கொண்டனர், கேட்டனர். அப்பாடல்களும் அப்படித்தானே. அந்நிலையில் ஞானப்பிள்ளையார் அடி யார் குழாத்தொடும், திருப்பதிகள் தோறும் சென்று தம் அனுபவப் பொருளாய் உள்ள இறைவனை, அவ்வத் திருப்பதிகளில் காண்பதாக வைத்துப் பாடி அருளினார். அங்ஙனமாக, திருவாப்பனூர் என்னும் திருப்பதிக்கு எழுந்தருளின போது, பிள்ளையார் பாடியருளிய ஒரு திருப்பாசுரம் கீழே வருகிறது.

'' தகர மணியருவித் தடமால் வரைசிலையா
நகர மொருமூன்றும் நலங்குன்ற வென்று கந்தான்
அகர முதலானை அணியாப்ப னூரானை
பகரு மனமுடையார் வினைப்பற் றறுப்பாரே ''

[திருமுறை 1 ; பதிகம் 88 ; செய் 5]

எப்பொழுதும் இறையனுபவத்திலேயே இருக்கும் பிள்ளையாருடைய இத்திருப்பாடலில் இறைவனுடைய இருபெரு நிலைகள் வெளிப்படுகின்றன. ஒன்று, அளவில் ஆற்றலு டைமை. மற்றொன்று அனைத்துக்கும் முதலாந் தன்மை. அளவிலாற்றலை ஒரு செயலாய்க்காட்டுகிறார். அனைத்துமாந் தன்மையை ஒரு உவமையால் சுட்டுகிறார். இறைவன் ஆற்றலை வெளிப்படுத்த செயலே காட்டப்பட வேண்டும். செயல்தான் ஒருவனுடைய உண்மை யாற்றலை வெளிப்படுத்தும் கட்டளைக்கல். திருவள்ளுவரும் கூட,

'' பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல் ''

என்றே கூறுகிருர் அல்லவா ? அளவிலா ஆற்றலுடை யான் என்பதை அளவிலா ஆற்றலுடையாரை வென்ற திறத்தால் காட்டுகிருர். அதற்கு மலையை வில்லாக வளைத்து மதிலை எரித்த செய்தியைப் பல நுட்ப உணர் வோடு பொருள் கொள்ளும்படிக் காட்டியுள்ளார். மலையை வளைத்து என்ன? அம்மலை சிலையாக வளைந்ததுதான் என்ன பயன் ? எத்தனையோ பிற செயல்கள் நிகழ்ந்தன. அவையனைத்தும் இறைவனுடைய அளவிலாற்றலையே உண்மைப் படுத்துவன.

மேருவை வில்லா வளைத்தது. வாசுகியை நாணுக் கட்டினது, பூமியைத் தேராகக்கொண்டது. பிரமனைச் சாரதியாக்கினது, வேதங்கள் குதிரை யானது, திருமால் அம்பானது. இவையும் பிறவும் இறைவனது ஆற்றலை உணர்த்தின. ஆனுல் அவை யனைத்தும் அவனது செயலுக்குத் துணையாயின அல்ல. எங்ஙனமெனில், இத்தனை அருஞ்செயலையும் செய்து காட்டினுனே யன்றி அவற்றின் துணை கொண்டு நகரமொரு மூன்றும் வென்ருனில்லை. தன் நினைவாலேயே அழியவேண்டும் என்ற போதே அழியும்படிச் செய்தான், என்பதனைப் பிள்ளையார், நலங் குன்ற வென்றுகந்தான்' எனக்குறித் தருளினுர். அதனுல் அவன் இச்சையானே, ஆக்கலும் நிலைத்தலும், அழித்தலும் நிகழ்கின்றன என்பது போதரும். அன்றியும் அவன் அனைத்துக்கும் துணையாய், முதலாய் நிற்பதன்றி, அவனுக்கு முதலும் துணையும் இல்லை என்பதும் விளங்கும். அவனே முதற் பொருள்; அவன் முதலாய், அவன் துணையாய் அனைத்துப் பொருளும் தோன்றி நின்றமைவன என்பதும் விளங்கா நிற்கும். இந்த உண்மையினை ஒரு எடுத்துக் காட்டால் விளக்க வேண்டும் என்று பிள்ளைப் பெருமான் நினையும் போது திருவருள் வசத்தால் ஒரு உவமை வெளிவருகிறது. அது தான்,

'அகர முதலானை' என்பது. அகரம் எவ்வாறு அனைத்தொலிக்கும் முன்னதாய், தானே முதலாய், அதன் திரிபாகவும் அதன் துணைகொண்டும், அனைத் தொலி எழுத்துக்களும் தோன்றி நிற்கின்றனவோ, அதுபோல, என்பதனை 'அகர முதலானை' என்ற ருளிச் செய்கிருர். இக்கருத்தும், இவ்வுண்மையும் ஞானப் பிள்ளையாருக்குப் பன்னூருண்டுகள் முன் விளங்கிய அறிவுப் பெரியராய, திருவள்ளுவர் உள்ளத்திலும் தோன்றி.

'அகர முதல எழுத்தெல்லாம்' என்றமைந்தது என்று கொள்வதில் இழுக்கென்னை? அறிவுத் துணையாம், திரு வள்ளுவர் கூற்றும், அன்புத் துணையாம் ஞானப் பிள்ளை யார் அனுபவத் திருமொழியும் ஒரு பேருண்மையை விளக்கிச் சொல்லாலும், பொருளாலும் நமக்குத் துணையாய் நின்று கடவுள் உண்மை யைக்காட்டா நின்றமை, கருத்துக் கருவூலமாக அமையும்.

நிற்க. இனி அடிகள் 'அகர முதலானை' என்ற தனேடு அமையாது 'அணியாப்ப னூரானை' என்றதும் நமக்கு ஒரு உறுதுணையாய் அமையும். யாங்ஙனமெனில் முதலாய் நிற்கும் அகரவொலி எங்ஙனம் செவிப்புலனுகும் ஒலிகள் அனைத்துக்கும் முதலாய் நின்று தான் செவிப் புலனுகாமல் நிற்கிறதோ, அங்ஙனமே இறைவனும் கட் புலனுக்கும், கருத்துப் புலனுக்கும் புலப்படானுய் நின்று, அனைத்து உலகத்துக்கும் முதல்வனுய் விளங்குகிருன். ஆனுல் அவனைக் காண்பதும், கருதுவதும் எப்படி என்பாரை விளித்து ஆப்பனூரில் திருக்கோயில் கொண் டருளும் இறைவனைக் காட்டி, இக்குறியில் அவன் உளான் வழிபடுங்கள் என்று காட்டுகிருர். இந்த விளக்கம் மிகமிக உயர்ந்ததாய் உள்ளது. இதனைத் திருவள்ளுவர் உலகத் தைக் காட்டி முதல்வனை உணர்த்தியது போன்று அடிகள் அணியாப்பனூரானைக் காட்டி இவனே அகர முதலானுன்

என்று காட்டுகிறார். உலகம் அவன் அருளால் மலர்ந்து காட்சியளிப்பது போலவே, அவனருளால் அணியாப் பனாரில், திருக்கோயிலில் உருவத் திருமேனியிலும் விளங்குகிறான் எனக் காட்டுகிறார். இங்கே சமய உண்மையும் புலப்படுத்தவாறு தோன்றுகிறது. அறிவும் அருளுமாய இறைவன் அம்மையும் அப்பனுமாகி அருளு கிறான் என்ற உண்மையை, காட்சிக்கும் கருத்துகும் அப்பாற்பட்ட இறைவன், உயிர்களின் நன்மைக்காக, உருவத் திருமேனியில் வீற்றிருந்தருளுகிறான் என்ற உண்மையினை, ''அணியாப்பனாரான், அகர முதலான்'' என்பதனால் விளக்கித் திருவள்ளுவர் கருத்தினைப் புலப் படுத்தியவாறு காண்கிறோம்.

இவ்வாறு முதல்வனை, உலகினைக் கொண்டும் உலகில் கோயில் கொண்டருளும் உருவத்திருமேனி கொண்டும் அறிவினால் தெளிந்தும், அன்பினால் உருகியும் வழிபடும் ஆன்ற அன்பினர்க்கு இறைவன் அருள் பாலிக்கும் முறை யினைக் குறிப்பிடுகிறார் அடிகள்.

மனம் நினைவுக்கும் பகர்தல் சொல்லுக்குமாக்கி, அணியாப்பனாரானை அகர முதலானை மனத்தால் நினைந்து தெளிந்து அன்பால் உருகிக் கசிந்து அரற்றும் ஆன்றோர் என முன் கூறிய நிலையினை விளக்கியவாறுகாணலாம்.

''அகர முதலானை அணியாப்ப னாரானைப்
பகரும் மனமுடையார்'' என்ற பகுதியில்

மனம் அந்தக்கரணம் நான்கில் முன்னது. அது நினைந்து புத்தியில் பொருந்தி, '' நான் அறிகிறேன் என்ற தெளியும் சித்தத்தினர் அன்பால் உருகி அரற்றுவர் எனக் குறித்தவாறு காண்க.

பகர்தல் பலரும் அறியக் கூறுதல், நினைந்து சொல்ல வேண்டும். உள்ளத்தாற் பொய்யாது ஒழுகல் வேண்டும் அன்றோ. அங்ஙனம் தெளிந்து ஆற்றாமையால் உள்ளங்க சிந்து கசிந்து பகருவார், என்றதனால் மனமும் சொல்லும் ஒருவழிப் பட்டமை காட்டிய வாறும். மனமும் சொல்லும் அவன் வழிப்பட்ட மாத்திரத்தே செயலும் இறைவனடித் தொண்டாகவே அமையும் என்பதும் பெறப்படும்.

இப்படியாகத் திரிகரணங்களும் இறைவனுக்கே ஆட்பட்டபோது அவரைப் பற்றி நிற்கும் பற்றுக்களும் நீங்கிவிடும். அங்ஙனம் பற்றுக்கள் அறுபட்டவுடனே திருவருட் பதிவும் சிவஞானமும், திருவடிப் பேறும் முறை யானே வந்து கைகூடும் என்பதனைச் சாதன முகத்தான் பிள்ளையார் அருளுகிறார்கள்.

> ''அகர முதலானை அணியாப்ப னூரானைப்
>
> பகரு மனமுடையார் வினைப்பற் றறுப்பாரே''

என்று பல்கால் பாடிப் பாடிப் பயன் துய்க்குமாறு அருளிச் செய்கிறார்கள்.

இன்னும், வினையும், பற்றும் அறுப்பார் எனக்கொண்டு ஆகாமிய சஞ்சித வினைகளையும், பற்றி நின்ற பிராரத்த வினையையும் அறுப்பர் எனப் பொருள் அறிதலும் சாத்திர நுட்பம் அறிந்தார்க்குப் பொருந்துவதாய உண்மையையும் காணலம். இங்ஙனம் தானே முதலாய இறைவன் தண்ணளியால், தடத்த உருவங்கொண்டு உயிர்க்கருளும் பெருமை யினை, திருவருள் வலத்தால் அருளிய ஞானசம் பந்தப் பிள்ளையார், திருக்குறளில் முன்னதாக வைத் தோதிய 'அகர முதல' என்பதனை முதல் திருமுறையில் எடுத்து நமக்கு அருளிச் செய்து, நம்மனோர் மலையாமைப் பொருட்டு அறிவின் முடிவும், அனுபவ முடிவும் ஒன்றென

உண்மைப் படுத்தியமையை நாமும் கடைப்பிடித்து வாழ்வோமாக என்று கூறி, திருப்பாசுரம் முற்றையும் கீழே காட்டி முடிக்கின்றேன்.

திருச்சிற்றம்பலம்.

" தகர மணியருவித் தடமால் வரைசிலையா
நகர மொருமூன்றும் நலங்குன்ற வென்றுகந்தான்
அகர முதலானை அணியாப்ப னூரானைப்
பகரு மனமுலடயார் வினைப்பற் றறுப்பாரே "

திருச்சிற்றம்பலம்.

[திருமுறை 1. பதிகம் 88 ; செய் 5]

" அகர முதல் எழுத்தெல்லாம்
ஆதி பகவன் முதற்றே உலகு "

திருவள்ளுவர்.

அதிகாரம் 1—குறள்—1.

# 2

மக்கள் உயர் பிறவி எடுத்தவர்கள் என்று பேசப்படுகிறது. உயர்வு பிறவியினுலேயா! அல்லது அப்பிறவியில் நிகழும் உயர்ந்த செயல்களாலேயா? என்பதனைப் பல திறத்தாலும் ஆராய்ந்து முடிவுகண்ட மூதறிஞர், பிறப்பினுல் உயர்வு என்பதொன்றில்லை. அப்பிறப்பு செயலால் உயர்வடைகிறது என்ற முடிவிற்கு வந்தனர். அறிஞரிற் பெரியராய திருவள்ளுவர்,

> ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யான்''

என வரையறுத்துக் கூறுவார் ஆயினுர்.

அங்ஙனம் தொழிலால் உயர்வுடையன் மனிதன் என்றுல் உயர் தொழில்தான் யாதோ என்ற வினுவருமன்றே? அதற்கு விடைவேண்டும். தொழிலனைத்தும் ஒரு சமம் என்ற கொள்கையும் உண்டல்லவா? ஆகையால் மனிதனுடைய செயல் உயர்வுக்குரியது என்றும், தாழ்வுக்குரியது என்றும் இருதிறன் உள்ளது. அதனுள் உயர்வுக்குரிய செயல் யாதென்று அறிதல் வேண்டும். தன்னை மனிதன் உயர்ந்தவன் என்று நினையும்போது உயர்ந்த செயலைச் செய்யக் கடமைப் பட்டுள்ளான். தன்னை மனிதன் தாழ்ந்தவன் என்று நினையும்போது தாழ்வுக்குரிய செயலைச் செய்து விடுகிருன். ஏன், அங்ஙனம் தாழ் செயலைச் செய்கிருன்? என்று நீண்டு சிந்தித்தால் பிறரெல்லாம் சூழ்நிலை என்றும் முடியாமை என்றும் வாய்ப்பின்மை என்றும் பல்லாற்ருனும் வழிகாண முயல்

வர். உண்மை வேறு. அவன் அறிவு நிலை வளர்ச்சி பெருமையே என்பது தான் உண்மை. அறிவு தக்கது தகாதது என்பதனை விளக்கிக் காட்டுவது. தக்கது இன்னது என்று உண்மையாக உணர்ந்து வருவானானால் அவன் தகாதது செய்து தாழ்வடையக் கருதான். தக்கதே செய்து உயர்வடைவான்.

"தக்கது இன்னது தகாதது இன்னது என்று
ஒக்க உன்னல ராயின் உயர்ந்துள மக்களும் விலங்கே"

என்ற கவியரசன் பாட்டு உண்மையல்லவா? ஆகையால் தக்கதே ஓர்ந்து செயல் மனிதப் பிறவியை உயர்ந்த தாக்குகிறது.

எனவே, மனிதன் அறிவினால் தக்கதை உணரும் போதும் உணர்ந்து செயல்படும்போதும் உயர்ந்தானாய் விடுகிறான் என்பது கிடைத்தது. அறிவு இருவகைப்படும் ஒன்று தன்னறிவு, மற்றொன்று நூலறிவு. தன்னறிவு விளங்கவும் நல்வழிப் படவும், உண்மை காணவும் நூலறிவு வேண்டும். தன்னறிவு அறியாமையோடு கலந்து, தானே அறியும் ஆற்றலிலது. ஆகையால் அறிவு விளங்கப்பெற்ற நல்லறிஞர் காட்டக் காணும் அறிவே விளக்கம் பெறுகிறது. இதனையே வள்ளுவர் "இலங்கு நூல் கற்றார்" எனக் கூறுவர்.

இலங்கு நூல் என்பதுதான் என்ன? அறிவை விளங்கச் செய்து, தானும் விளங்கும் நூல் எனப் பொருள்படும், ஒளி எப்படிப் பொருளையும் விளங்கச் செய்து தானும் ஒளியாய் விளங்குகிறதோ அப்படி என்றறிக. ஆகவே நூல் என்பது தன்னெண்ணங்களை ஒழுங்கு செய்து யாத்துக் கொடுத்த நூலாசிரியனையே உணர்த்தும். அதனால்தான் சான்றோர், நூலினை நூலாசிரியன் பெயராலேயும் வழங்கலும் ஆயினர். 'திருவள்ளுவர் படித்தான்' என்றால்

திருவள்ளுவர் செய்த நூலினைப் படித்தான் என்று தானே பொருள் படுகிறது. ஆகவே இலங்கு நூல் என்பது நூல் செய்த புலவனின் விளக்கம், நமக்கும் உதவி செய்கிறது என்றே பொருள்படும். எனவே சான்ரோருல் அறிவு விளங்கப்பெறல் வேண்டும் என்பதும் பெறப்படுகிறது. இங்ஙனம் கல்வி அறிவானது நம்மறிவை விளங்கச் செய்து நம்மையும் விளக்கமுடைய தாக்குகிறது, என்ற முடிவுக்கு வருகிறோம். நம் அறிவு விளக்கம் பொருளை அறியத் துணை செய்யவேண்டும்.

பொருள் தானும் இரண்டு வகைப்படும் பருப்பொருளும், நுண் பொருளும் என. பருப்பொருள் என்பது காணப்படும் பொருள். நுண் பொருள் என்பது கருத்தினால் உணரப்படும் பொருள். இவ்விருவகைப் பொருளையும் அறியும் அறிவு வேண்டும். அன்றியும் செயல் வகையும் இருவகை. அவையும் செய்யத் தக்கன செய்யத் தகாதன எனப்படும். செய்யத் தக்கனவற்றை அறிதலும் செய்யத் தகாதனவற்றை ஒழிதலும் அறிவின் விளக்கமாகக் கொள்ளல் வேண்டும். மேலும், அறிவு செயல்படும் போது, பருப்பொருளின் தன்மையையும் நுண் பொருளின் தன்மையையும் அறியும். அறிவு செயல் படும்பொழுது தக்கன செய்தலினால் வரும் நன்மையையும், தகாதன செய்தலினால் வரும் கேட்டினையும் அறிகிறது. அறிவு தொழிற் படுங்கால் உயிரின் இயல்புக்கேற்ப நிலை பேறுடைய அழியாத பொருளை அறியவும், தக்கனவற்றைச் செய்து, இன்பப் பேற்றை அடையவும், முயற்சிப்பதும், செய்து பயனடைவதுமே அறிவின் செயலாகும். அங்ஙனம் நிலைத்த பொருளை அறிவதும் நன்மை பெறக்கூடிய செயலைச் செய்வதும், அறிவும் அறிவின் செயலுமாகவே நம்மனோர் கண்டனர். அறிஞர் பெருமானாய திருவள்ளுவனர்

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு'' என்றும்
எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்றும் கூறும் இருகுறளினுல் காணப்படும்பருப் பொருளி னும், கேட்கப்படும் நுண் பொருளினும் நிலைத்த பொருளை, அழியாத பொருளைக் காண்பதே அறிவெனப்படும் எனக் கூறிப் போந்தனர். அங்ஙனமே, '' உள்ளுவ வெல்லாம் உயர்வுள்ளல்'' என்றும் அறத்தான் வருவதே இன்பம் என்றும் செயற்பாட்டினுல் வரும் இன்பத்தினையும் வலி யுறுத்தினுர்.

எனவே, கல்வியறிவு மனிதனுக்குத் தன்னறிவை விளங்கச் செய்து, உண்மைப் பொருளைக் காட்டி உயர் வடையவும், நன்மைகளைச் செய்து இன்பமடையவும் துணை நிற்பதோர் சிறந்த கருவி என்பதனை அறிகிறேம்.

அப்படியாயின் உண்மைப் பொருள் எது ? உயர் பேரின்பம் எது ? என்ற வினுவில் நாம் சிக்கி, மேலெழுந்த வாரியாகத் தடுமாருமல் திருவள்ளுவரே கருணையால் காட்டும் இயல்பினை நாம் அறிய வேண்டும்.

''பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு''

என்ற குறளில், நிலையாமையும் துன்பமும் உடையது என்று ஒன்றனைக் காட்டி. நிலைத்ததும் பேரின்பமானதும் ஒன்று உண்டு என்பதனை உணர்த்தி அறிவின் தெளி வால், இதனை இதனை அறியாது விலக்கி, இதனை இதனை அறிந்து குறிக்கோளை அடைக என்று அறிவுறுத்துகிருர்.

பிறப்பு நிலையாமை உடையது. அதனை நிலையுத லுடையதாக் கருதுவது பேதமை, பிறப்பின் நிலையா மையை உணர்ந்தால் பிறப்பே துன்பம் என்ற உண்மை புலப்படும். தோன்றும் பொருளனைத்தும் தோன்றியவாறே நிலையா. மாற்ற மடையும், மறையும். ஆகையால் பிறந்த மனிதனும் வளர்ந்து முதிர்ந்து மறைந்துபோவான். ஆகை யால் தோற்ற முண்டேல் இறப்புண்டு. இறப்புண்டேல் மீளவும் பிறப்புண்டு. ஆகையால் பிறந்திறந்துழலுவது பெருந்துன்பம் என அறிதலே அறிவு. பிறந்தவன் வாழும் போது இறப்பினை நினையாது, நிலைத்ததாகவே மயங்கிக் கடமைகளையும் குறிக்கோளையும் மறந்து, அல்லாந்து போகிருன். ஆகையால் பிறவியே துன்பமாய் விடுகிறது. இதனை வள்ளுவப் பெருந்தகை.

''பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணுப் பிறப்பு''

என்று கூறுவதிலிருந்து தெளியலாம். எனவே பிறந் தோர் உறுவது பெருகிய துன்பமே என அறிந்து பிறவார் உறுவது பெரும் பேரின்பம் எனத்தெளிவது அறிவின் சிறப்பாகும். நிலைத்த உண்மையான இன்பப் பொருளை அறிவதே அறிவின் தெளி செயல் என அறிகிருேம்.

இது காறும் கூறியவாற்ருல் அறிவு அறியாமை யோடு கலந்து நிற்பது, பிறர் அறிவிக்க அறிவது. அந்த அறிவு தெளிவு பெறுதற்குத் துணை செய்வது கல்வியறிவு. அக்கல்வி யறிவு, நன்மை பயக்கும் உண்மைப் பொருளை அறியத் துணை செய்யவேண்டும். நிலைத்த உண்மையான அழியா இன்பத்தினை அறிவதே உண்மை யறிவாம் என் பது போதரும்.

“ பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு”

என்ற குறள், துன்பத்துக்குக் காரணமான அறியாமையால் வரும் பிறப்பு நீங்க இன்பமாய சிறப்பினை நல்கும் உண்மைப் பொருளைக் காண்பதே உண்மை அறிவாம் என்பது குறட்பயனாகக் கொள்க. இனி, எந்தப் பொருளும் பயன் கொடுக்காமற் போனால் அந்தப் பொருள் பொருளெனப்படாது. செல்வம், ஒருவனுக்கு உணவும் உடையும் இடமும் தந்து நன்மதிப்பையும் நல்காமற் போனால் அவன் பொருளுடையான் ஆகவே மாட்டான். நாலடியில்,

“ உண்ணான் ஒளிநிறு அன் ஓங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்-கொன்னே
வழங்கான் பொருள் காத்திருப்பானேல் அ ஆ
இழந்தான் என் றெண்ணப் படும்”

என்று ஒரு செய்யுள் உள்ளது. அச் செய்யுள், பொருளை உடையனே யாயினும், பொருட்பயனை அடையானாயின். அவன் பொருளை இழந்தானே யாவன் என்று கூறுகிறது, அது போலவே கல்வியுடைமையும், அக்கல்வியால்விளங் கப்பெற்ற அறிவுடைமையும் பயனை அளியாவாயின், அப் பயனை அடையானாயின், அவன் கல்வி யறிவு உடையன் ஆகான், அறிவுடையனும் ஆகான். பொருட்பேறு பயனை அளிக்க வேண்டும். பெற்றவனும் பயனைத் துய்க்கவே வேண்டும்.

நிற்க, அறிவும் கல்வியும் எப்பயனை அளிக்கவல்லன என்பது இனிவரும் வினா. முன் கூறிப் போந்த வாற்றால் அறிவும் கல்வியும் உண்மைப் பொருளை அறியவும், உண்மை இன்பத்தை அடையவும் துணைசெய்ய வேண்டு

வன. உண்மைப் பொருள்தான் யாதோ ? எனின் பலர் பலவாறு கூறுவர். அனைவரும் ஏற்கக் கூடிய ஒன்றைக் கூறுவது தானே திருவள்ளுவர் சிறப்பு. அதனால் தானே, திருக் குறளுக்குப் பொதுமறை என்றும் பொருள் மொழி என்றும் பெயர் வருவதாயிற்று. ஆகையால் உண்மைப் பொருளை வள்ளுவர் பெருமான் மெய்ப் பொருள்என்றும், செம்பொருள் என்றும் கூறுகிறார். அவ் வாறு கூறுவது முன்னே காட்டப் பெற்றுள்ளது. அப் பொருளைக் காணுமாறு கூட வள்ளுவரே காட்டியுள்ளார்.

'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி''

என்பதனால் கற்றதன் பயன் மெய்ப்பொருள் காணல் என் பதனை வலியுறுத்திய வாற்றையும் காண்கிறோம். ஆகை யால் அறிவு விளக்கமாம் பயனை நல்கும் கல்வியின் பயன் தொடக்கம் என்ன ? என்பதனை ஆசிரியர் கடவுள் வாழ்த் தில் இரண்டாவது குறளில் தெளிவிப்பான் தொடங்கு கிறார்.

முதற் குறளில் கடவுள் உண்டென்று கூறிய ஆசிரி யர் உலகம் உண்டென்றும் கூறி, உலகம் கடவுளை முத லாக உடையது என்றும் காட்டினர். ஆகையால் காட்சிப் பொருளாய உலகம் இருவகைப் பட்டதாய், ஒன்று அறி வற்றதாய், மற்றொன்று சிறிது அறிவு உடையதாய்உள்ள தையும், அறிவற்ற உலகம் காட்சிக் குரியதாய், அறி வுடை உயிர்க்கூட்டம் கருத்துக் குரியதாய் நிற்பதனையும் உள்ளடக்கி உலகம் என்ற ஒரு சொல்லான் கூறிப் போந் தனர். அங்ஙனம் கூறியவற்றுள் சிறிது அறிவுடைய உலக மாய உயிர்க் கூட்டத்தில் மனிதனானவன் சிறந்தவன் என்பதும், அச்சிறப்பும் அறிய வேண்டுவதனைக் கல்வியறி வான் அறிதலான் உண்டாவது என்பதும் முன்னர்க்

கண்டோம். அளவை நூல் முறைப்படி எடுத்துக்கொண்ட பொருளை விரித்துச் செல்வது திருவள்ளுவர் நோக்கா கலின், அக்கடவுள் உணர்வுதான் யாருக்கு என்பதும் இரண்டாங் குறளால் விளக்குகிருர். " ஆதிபகவன் முதற்று உலகு" என்ற மேற்கோளில் ஆதிபகவன் என்ற சொற்ருெடரால் கடவுள் உண்டென்று எடுத்துக்கொண்டு அக்கடவுள் உலகத்திற்கு முதல், என உலகை அறிமுகம் செய்து வைத்தார் ஆகலின் இரண்டாவது குறளில் அவ் வுலகை, அறிவுடைச் சிறப்புலகை முன்னிறுத்தக் " கற்ற தனுல் ஆய பயன் என் ? " எனக் கல்வியையும் கல்வி யான் விளங்கிய அறிவினையும், அவ்விளங்கிய அறி வுடை உலகம் மக்கள் உலகமே யாதலின் "தொழார் எனின்" என்ற உயர்திணைச் சொல்லால் விளக்கியும் கூறுவார் ஆயினர்.

எனவே கடவுள் உணர்வு அறிவுச் சிறப்புடைய மக் கட்கே வேண்டப்படுவது என்பதும் கூறினுர் ஆயிற்று. இம்முறையால் கடவுளும், அவனை முதலாக உடைய உலகமும், அவ்வுலகில் அவனை அறியக்கூடிய ஆற்றல் உடைய சிறப்புடைய மக்களுயிரும் ஆக மூன்று பொருள் களை இரண்டு குறளால் நமக்கு அறிவுறுத்தியமையும் நாமறிகிருேம்.

திருவள்ளுவனுர் தமிழில் மொழிவரம்பிகவாச் சான் ருேர் ஆகையால், கற்றதனுல், ஆய, எனக் கூறுவதின் பயன், கல்வி காரணமாகப் பெறுவது அறிவு என்றும், அவ்வறிவானுய பயன் என் என்றும் வினவினுர் ஆயிற்று. கல்விக்குப் பயன் நல்லறிவும், அந்நல்லறிவிற்குப் பயன் தொழலும் ஆம் என்பது போதரும். தொழல் என்பது பணி வையும், தொழும்பு அதாவது அடிமை பூணலையும் குறிக் கும். அதனுல்தான் நம்மனுேர் கற்றறிந்தடங்கல் எனப் பழமொழியாக்கினர். கற்றலின் பயன் அறிதலும் அறி

வின் பயன் அடங்கலும் அஃதாவது பணிதலும் என்ற வாறும்.

அறிவு எதனைக் கண்டு அடங்கும் தொழும்? தன்னின் அறிவுடையாரைக் கண்டு அடங்கும் தொழும். எந்தப் பொருளும் தனக்குரிய தாழ்வையும் மற்றதற்குரிய பெருமையையும் காணும்போதுதான், தன் தாழ்வும் அதன் உயர்வும் நோக்கப் பணிவும் தொழுகையும் தாமே வரும்.

இந்த உண்மையை நுண்ணிதின் உணர்ந்தால் அனைத்தினும் மேலாம் உயர் பேரறிவுடையானை, தூய அறிவனை வாலறிவனை ஒரு சிறிது அறிவு தூண்ட அறிவிக்க அறிந்த அறிவினை யுடையான் ஒருவன் காணும்போது, அறியும்போது இந்தப் பேரறிவும், தூய அறிவும் உடையான்முன் நான் எந்த அளவுடையேன் எனப் பணிதலும், தனக்கும் அப்பேரறிவும் தூய அறிவும் கிடைக்கவேண்டுமே என்ற தொழுகையும் உண்டாகிறது. அதனை நமக்கு வலியுறுத்தவே ''வாலறிவன் நற்றாள் தொழார் எனின், கற்றதனாலாய பயன் என்'' என்று கூறுவாராயினர்.

இதனால் கற்றறிந்தவர் தாமறிந்த அறிவின் அளவு, குறைவும் குற்றமும் உடையதென்றும், நிறைவும், தூய்மையும் உடைய அறிவு பெரியதாய், அடைய முடியாததாய் உள்ளது என்றும் அறிகின்றனர். அங்ஙனம் அறிவதே அறிவின் பயன் என்பதும் கூறிய வாறாயிற்று.

மேலும் தொழார் என்ற பன்மையால், வாலறிவனைப் பெற முயலும் உயிர்கள் பல என்பதும், வாலறிவன் என்ற ஒருமையால் தூய அறிவே வடிவாய இறைவன் ஒருவனே என்றும், தொழுகை என்ற சொல்லால் வணங்கலும் தொழும்பு செயலுமே அவ்வறிவுடை உலகத்தின்

செயல் என்பதும், நற்றுள் என்பதால் உயிர்கள் நல்லறி வின் பயனுல், அவனடி பணிந்து வழிபடலே என்பதும், ஆசிரியர் கூறிய உண்மையாக அமைவன காண்க.

எனவே, இவ்விரண்டாம் குறள் உலகம், உயிர் கடவுள் என்ற மூன்றனையும் காட்டி, அசத்தாகிய உல கத்தில் உயிர்கள் எண்ணிலவாய் வாழ அவற்றுள் அறி வறி உலகமாய மக்களே மேம்பட்டவர் என உணர்த்தி, அவருள்ளும் கற்றறிந்த மாந்தரே சிறந்தோரெனத் தேற்றி, அக்கற்றறி மாந்தருள்ளும் வாலறிவன் நற்றுள் தொழும் பேறு பெற்றுரே, நல்லறிவின் பயன் பெற்றேர் என முடிவு கூறியவாறும் தெற்றென விளங்கும்.

இங்ஙனம் அறிவான் விரிந்து விளக்கம் செய்யும் திருக்குறளின் தெளி பொருளை, ஞானப் பிள்ளையாராய நம் ஞான சம்பந்தர், அன்பினுல், ஆவியோடாக்கை ஆநந்த மாய்க் கசிந்துருகும் இன்ப இன்னிசைச் செழுந்தமிழில் வடித்துக் கொடுக்கும் பகுதியினை இனிக் காண்போம்.

நம்பிள்ளைப் பெருமான், மூவாட்டைக் குழந்தையாய் அம்மே அப்பா என்றழுது ஞானப் பாலுண்டு தேக்கி நிற்க, தந்தையார் எச்சில் மயங்கிட ஈதிட்டாரைக் காட்டென்று மாறு கொண்டோச்சினபோது குழந்தையின் மழலை மொழி யில் இசைத்தேன் சொட்டக் கனிந்துருகிப் பாய்வதுபோல் இன்பத்தமிழ்ப் பால் வடிகிறது.

அங்கே அறிவுநலம் பெருகும் அமுதக் கருத்துக் களும், அன்புநலம் பெருகும் இன்ப உணர்ச்சிகளும் உயிரும் உருகி, உள்ளமும் உருகி, உடலையும் உருக்கும் தேமதுரத் தமிழிசையும் கலந்த செய்யுள் வருகிறது.

"முற்றலாமை இளநாகமோ டேனமுளைக் கொம்பவை பூண்டு
வற்றலோடு கலனுப் பலிதேர்ந் தெனதுள்ளங் கவர் கள்வன்
கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப்
பெற்ற மூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே !

இத்திருப் பாடலினைப் பாடிப் பாடி இன்புற வேண்டும். அழுது, அடி அடைந்த அன்பர் கூறியாங்குப் பாடிய பாட்டின் பொருளுணர்ந்து பாடினுல் அன்போடு இன்பமும் பெருகும். தமிழோடிசைபாடல் மறந்தறியேன் என்று சொற்குறுதிக்கு அப்பர் அருளியாங்குப் பாடிப் பொருளுணர்ந்து பாடின், பாட்டின் பயனுன சிவமாம் இன்ப உணர்வில் இன்ப உருவின் இன்பமேயாம் பிள்ளையாரின் திருவாக்காகையால் நம்மையும் இன்பமடையச் செய்யும்.

அறிவுடைமை பேசவந்த திருவள்ளுவர் முன்னுக, கல்வி, கல்லாமை கேள்வி எனப் பேசி அறிவுடைமை பேசினுர். கல்வியும் கல்லாமையும் கல்வியின் இன்றியமையாச் சிறப்பினை உடன்பாடு மறுதலை என்ற காரண முகத்தான் காட்டியபடியாம். வரவேண்டும் என்றும், வாராமல் இருத்தல் ஆகாது என்றும் கூறுவது வருகையின் இன்றியமையாமையை உணர்த்துவதுபோல, கல்வி என்று எடுத்துக்கொண்டு கல்வியின் நலங்கூறி, கல்லாமை என்று எடுத்துக்கொண்டு கல்லாத வழிப்படும் கேடு காட்டிக் கல்வியின் சிறப்பினை வலியுறுத்துகிருர். அங்ஙனம் கற்ற நூற் பொருளைத் துணிதற்கும், கல்லாதனவற்றை அறிதற்கும் கேள்வி கூறி, இவ்விரு திறத்தானும் பெறுவது அறிவுடைமை என விளங்க வைக்கிருர் ஆசிரியர். இம்முறைதான் திருவள்ளுவரின் அதிகார வைப்பின் சிறப்பு என்று அறிகிருேம். மற்றும் அறிவு மனிதனுக்கு

உயர்வு தருகிறது. அறிவு அனைத்தையும் உடைய அவனுக்கு உதவுகிறது. அன்பு என்பும் பிறர்க்குரியனும் படிச் செய்கிறது. பொருட்பேற்றிற்கு அறிவு வேண்டும், புகழைப் பெறுதற்கு அன்பு வேண்டும். உலகம் உயர்ந் தோன் என்று அறிஞனைக் கூறும். நல்லோன் என்று அன்பனைக் கூறும். ஆகவே கற்றும் கேட்டும் அறிவு விளங்கப் பெற்றவனே பெரியனாகிறான். அன்பாற் கசிந்து உதவி செய்யுமவனே நல்லோனாகிறான். அதனினும், தனக்கு உதவி செய்தவனை மறவாது நன்றி செலுத்து வோனே தான் பிறர்க்கு உதவி செய்து வாழவேண்டும் என்றும் எண்ணுவான்.

நன்றி மறவா நிலையே மனிதப்பண்பின் உயர்நிலை. ஒரு மனிதன் பிறந்தது முதல் பெற்றோரால் வளர்க்கப் பட்டு, ஆசிரியரால் அறிவு விளங்கப்பெற்று, மனைவி மக்க ளிடம் அன்பு பெருகி, இன்பம் பெற்று நல்வாழ்வு வாழ் கிறான் என்றால், இத்தனை உதவிகளையும் பெற்றதனால் தான் அவன் வாழ்வு வளம் பெறுகிறது என்ற உண் மையை மறவாதபோது தான், அவன் தானும் பிறர்க்கு உதவி செய்து வாழக்கடமைப் பட்டவன் என்ற நல்லறிவு விளங்கப் பெறுவான். அதனால்தான் நன்றி மறவாமை உயர்ந்த பண்பாகிறது.

இனி, மனிதனில் உயர்ந்தோன், நான் யார் ? என்னை யாரறிவார் ? என்ற வினாவில் ஆழ்ந்து, சிந்தனையின் முதிர்வில் நல்லோரின் சார்பில், தக்கார் வாய்க் கேட்ட உணர்வில், இந்த உலகம், உலகத்தில் அடையும்பொருள் கள், அடைந்தின்பமுறக் கிடைத்த உடல் இவ்வுடலில் நின்றியங்கும் மன முதலிய கருவிகள், இவை எங்ஙனம் கிடைக்கப் பெற்றேன் என்று நினைந்து நினைந்து உருகி உருகி இவ்வனைத்துக்கும் உடையான் ஒருவன் உண்டு, அவனே வாலறிவன், அவனால் கிடைக்கப்

பெற்ற இந்நான்கினையும் பாழ்போகச் செய்யலாகாது. அவனடிக்கன்பு பூணும் ஆக்கமே ஆக்கம், அத் தொழும்பே, என் சிற்றறிவைத் தூய்மை செய்து நன்மை பயக்கவல்லது என்றறிகிறான்; என்றறிவதே கற்றதனா லும் கேட்டதனாலும் பயனாகும். அன்றியும், அவ்வாறறி தலோ டமையாது, அங்ஙனம் தொழுகையிலும் செயற் படும்போது அவன் கல்வி கேள்விப் பயனைத் துய்த்த வனும் ஆகிறான், என்றறிகிறோம்.

இங்ஙனம் விரிந்த பொருள் கிடைக்கும்படிச் செய் கிற வாலறிவன் நற்றாள் தொழும் பேற்றினை ஞானசம் பந்தப் பிள்ளையார் காட்டுகிறார்.

"கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல்கையால்
தொழுதேத்தப்
பெற்ற மூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே"

என்பது திருப்பாசுரம்.

இத்திருப் பாசுரத்தில், "கற்றதனாலாய பயன் வாலறி வன் நற்றாள் தொழல்" என்ற குறட்பாவினை அடிகள் விளக்கஞ் செய்வார் போன்று, "கற்றதனால்" என் பதனை, "கற்றல் கேட்டல் உடையார்" என்று தொடங்கி, அதன் பயனால் உயர்வெய்தியமையைப் 'பெரியார்' எனத் தெளிவு செய்துள்ளார்கள். மேல் 'நற்றாள் தொழுதலை' 'கழல் கையால் தொழுதேத்த' என்று தொடங்கி, தாளை ஆகு பெயரால் கழல் எனக் காட்டி, தொழல் என்பதனை விளக்கம் செய்ய, கையால் தொழுதேத்த என்று அருளு கிறார்கள்.

கையால் என்பதனால் உடலையும், தொழுது என்ப தனால் மனத்தையும், ஏத்த என்பதனால் வாக்கினையும்

குறித்து மன மொழி மெய் என்ற முக்கருவிகளும் தொழிற் படுவதை விளக்கம் செய்கிறார்கள்.

இதனால், திருக்குறள் விளக்கம்போல, கற்றல் கேட்டல் உடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்த என்பது அமைந்துள்ளமை அறியப்படும்.

இனி, 'பெற்ற மூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மான்' என்பது பெற்ற மூர்ந்த பெம்மான், பிரமாபுர மேவிய பெம்மான் எனத் தனித்தனி கூடுவது காண்க.

பெற்ற மூர்தல், ஏறுசேவகன் என்பதனை உணர்த்துவதாகும். ஏறு என்பது அறத்தைக் குறிக்கும். அறவாணன் என்பதனைப் பெற்ற மூர்ந்தவன் என்பதனாற் குறித்தார். பிரமாபுரம், என்பது பிரமனால் வழிபடப் பெற்ற ஊர் என்பதாம். பிரமன் வேதன் என்றும் அழைக்கப்படுவான். வேதன் அறிவுக் கடவுள் வழிபடும் அத்தனை பெரியான் என்ற பொருள்பட நின்றது. எனவே அறவாணனும், அறிவின் உம்பரானும் ஆய இறைவன் என்பது பொருளாகக் கொள்கிறோம். இறைவன் 'அறிவவன் உருவமாகும், அருளவன் சக்தியாகும், என்றமையாலும், "அறிவினுள் அருளால் மன்னி அம்மையோடப் பனுகிச் செறிவொழியாது நின்ற சிவன்" என்றமையாலும் அருளும் அறிவும், குண குணியாய் நிற்கும், அம்மாத்திரையே இறைவன் என்றறிகிறோம். அதனையே உருவக முகத்தானும் பௌராணிக முறைப்படியும், "பெற்ற மூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மான்" என முடித்துக் காட்டுவராயினர் என்றறிகிறோம். அவன், அருளும் அறிவுமாயினன் என்பதனை எவ்வாறறிவது என்பதற்கு அடிகளுடைய திருப்பாசுரத்தின் முற்பகுதி நமக்கு விளங்கச் செய்யும்.

''முற்றலாமை இள நாகமொடு ஏனமுளைக் கொம்பு
அவை பூண்டு
வற்றலோடு கலனாப் பலி தேர்ந்து எனதுள்ளம்
கவர்கள்வன்
பிரமாபுர மேவிய பெம்மான்''

எனவும் ''கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப் பெற்ற மூர்ந்த பெம்மான்'' எனவும் செய்யுள் ஒட்டிச் செல்வதைக் கண்ணழித்துப் பொருள் கொள்வதாற் காணலாம்.

ஆமை ஓடு, இள நாகம், ஏனமுளைக் கொம்பு இவற்றை அணிகலமாய் அணிந்து என்பதும், வற்றல் ஓடு கலனாகக் கைக்கொண்டு என்பதும் சங்காரகாரணனே முதல்வன் என்பதனை உண்மைப்படுத்த வந்தனவாம். 'பலி தேர்ந்து' என்பது, கடவுள் உண்மை காட்டவந்த தாகும், 'என துள்ளம் கவர்கள்வன்' என்பது அறியாமை நீக்கஞ்செய்ய வந்ததாம். எனவே சங்கார காரணனாகிய சிவன் ஒருவனே முதல்வன், அவனே அருள் வடிவினனாய இறைவன், அவனை அறிதலே அறிவின் பயன் என்பதனைத் தம் மனுபவ வாயிலாகப் புராணங்களிற் கூறும் கதைகளின் உண்மைப் பொருளை உள்ளடங்கச் செய்து ஓதுவாராய்த் தன் அனுபவ நிலையினை வெளிப்படுத்து, 'என் உள்ளம் கவர்கள்வன்' என முடித்துக் கொடுத்தார்.

உள்ளம்—உயிர்—ஆன்மா, உள்ளம் கவர்தல் உயிர்த் தன்மையாம் அறியாமையைப் போக்கல். கள்ளுதல் அறியாமலே எடுத்துவிடுதல். நம்மை அறியாமலே நம் அறியாமையைப் போக்குவதென்றால் அது கள்ளுதல் தானே. அங்ஙனம் இறைவன் உயிரில் இருந்தே, விறகில் உள்ள தீ வெளிப்பட்டு அவ்விறகினையே தன் மயமாக்கி விறகென்ற ஒன்றில்லாதபடிச் செய்துவிடுவது போன்று, இறைவன் நீக்க மின்றி நிறைந்து நின்று, தன் உதவியால் உயிரிடம் உள்ள அறியாமையை நீக்கி ஆட்கொள்ளு

கிருன் என்பதனைத் தன் அனுபவமாக, "என் உள்ளம் கவர் கள்வன்" என்றோதியருளினூர்.

நிற்க, அவனுண்மையையும், அனுபவத்தையும் யாங்ஙனம் பெறுவது என்பாரை நோக்கி, 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்த' எனக் கூறினூர். இவ்வுண்மை முழுதையும் உணர்ந்த பரிமேலழகர்.

> "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
> மற்றீண்டு வாரா நெறி"

என்ற திருக்குறட்கு உரை எழுதும்போது, கற்று என்பதற்கு 'ஆசான் வாய் உபதேச மொழிகளைக் கேட்டு' என உரை வகுத்தமையும் நாமறிந்து மகிழலாம்.

இங்ஙனமாக, கல்வியின் பயன் அறிவும் அறிவின் பயன் அருளும், அவ்விரண்டின் பயன் வாலறிவனும் பேரருளினனும் உள்ள இறைவன் திருவடிகளைத் தொழலும் ஆமென்பதனை வள்ளுவர் இரண்டாவது குறளில் வகுத்துரைத்த முறையினை ஞானசம்பந்தப் பிள்ளையார்,

> "முற்றலாமை இளநாக மொடு ஏன முளைக் கொம்பவை பூண்டு
> வற்றலோடு கலனுப் பலிதேர்ந் தெனதுள்ளங் கவர்கள்வன்
> கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழு
> தேத்தப்
> பெற்றமூர்ந்த பிரமாபுர மேவிய பெம்மான் இவனன்றே"

என்ற திருப்பாசுரத்தில் விளக்கம் செய்வது போன்று அனுபவ வாயிலாக அருளியிருப்பதைச் சைவ உலகம் கண்டு மகிழக் கடமைப் பட்டுள்ளது. இதனினும் விளக்கின் விரியும் என்றஞ்சி இரண்டாம் திருக்குறள் இந்த அளவில் முடிவுறுகிறது.

———

## 3

உலகம் ஒரு முதல்வனை உடையது என்று கூறி, அவர் தலைவர், அன்னவர்க்கே நாம் அடிமை என்று காட்டிய இரண்டனுக்கும் பின் எழும் வினவில் வருவது மூன்ரும் குறள்.

''மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்''

வினு :- காணப்படும் உலகம் காண முடியாத கடவுளை உண்மைப் படுத்திக் கொண்டிருக்கிறது. அந்த உண்மையைக் கல்வி கேள்விகளான் அறிவு விளங்கப் பெற்றவர் அறிகிருர்கள். அப்பொருள் தூய அறிவினனுய்க் காட்சியளிப்பதை அறிந்த அச்சான்ருேர் தம் அறிவின் பயன் அவ்வறிவனது நற்ருள் தொழலே என்று வணங்குகிருர்கள் என்பது முன் அறிந்த உண்மையாம். இவ்விலக்கணத்தை அனுபவ வாயிலாய் ஞான சம்பந்தப் பிள்ளையார் அகர முதலான் அணியாப்பனூரில் காட்சி அளிக்கிருன் என்றும், கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையால் தொழுதேத்தப் பெற்றமர்ந்து பிரமாபுரம் மேவிய பெம்மான் என்றும் விளக்கிப் போந்தனர். இனி அவ்விறைவன் காண முடியாதவன், அறிய முடியாதவன், எங்கும் நிறைந்தவன் என்றெல்லாம் பேசப் படுவதனுல். காண்பதெப்படி ? அறிவதெப்படி ? எங்கே காண்பது என்றெழும் வினுக்களுக்கு விடை வேண்டும் அல்லவா ? அவற்றுள் எங்கே காண்பது என்ற வினுவிற்குவிடையாய் மூன்ரும் திருக்குறள் அமைகிறது.

பொருள், அப்பொருளை அறிவதற்குரிய தகுதி, அப் பொருள் தங்குமிடம் என வளர்கின்ற அறிவியல் முறைப் படி மூன்றும் நிலையில், 'மலர்மிசை ஏகினன்' என்பது வருகிறது. மலர், செடி, கொடி, மரங்களின் செழிப்பின் தரத்தால் பயன்தரும் பருவத்தினையும் நெகிழ்தலையும் வெளிப்படுத்துவது. மலரில் மூன்று குணங்கள் அமைந் துள்ளன. ஒன்று தோற்றப் பொலிவு; இரண்டாவது மணம்; மூன்றுவது மென்மை; இம்மூன்றில் ஒன்று குறை யினும் மலரின் தன்மை குன்றும். அது போலவே மனித னுடைய வாழ்வில் அறிவு நலம் பெற்ற வளர்ச்சியில் அன் பின் நெகிழ்வில் மலர்வது நெஞ்சம். அந்நெஞ்சமாகிய மலரிலும் மூன்று குணங்கள் அமைந்திருக்க வேண்டும். அன்பின் மென்மையும், அறிவின் தோற்றமாய அழகும், பிறர்க்குதவும் இரக்க உள்ளமாய மணமும் விளங்க வேண்டும். இம்மூன்றனுள் ஒன்று குறையினும் அம்மலர் போல், அந்நெஞ்சமும் தகுதியற்றதாய்விடும். இங்கேயும் ஒன்றறிய வேண்டும். நெஞ்சம் என்றது நெஞ்சமாய இடத்தை யன்று. இடத்து நிகழ்வதாய உயிரினையே. எனவே மலர்மிசை என்பது உருவகத்தால் நெஞ்சைக் குறித்து நெஞ்சம் என்பது அந்நெஞ்சிடம் கொண்டுவிளங் கும் உயிரினைக் குறித்து நிற்றலை நாமறிகிறோம்.

மலரின்கண் மணம் எப்படி வந்தது? விதை முளைத்துச் செழித்துத் தழைத்தபோதும் மணம் இல்லை. அரும்பான போதும் மணமில்லை. மலர்ந்த மாத்திரத்தில் மணம் வீசு கிறது. எப்படி வந்தது? இல்லாதது வந்து புகுந்து கொண்டதா? அல்லது அதனிடம் முன்னரே அமைந்து கிடந்ததா? விதையில், உயிர்ச்சக்தி ஒடுங்கிக் கிடக்க, மண்ணோடு சேர்ந்து, தண்ணீரின் குளிர்ச்சியும்பட்ட மாத் திரத்தில் அந்த உயிர்ச்சக்தி வெளிப்பட்டு முளைக்குமாறு போல, முளைத்துத் தழைத்துச் செழித்து அரும்பிய பின்,

மலரும் தருணத்தில் உள்ளமைந்திருந்த மணமும் வெளித் தோற்றமுடையதாய் வருகிறது. இல்லாதது அன்று, என்ற உண்மை விளங்குமாறு போல எல்லா உயிர்களிடத்தும் உயிர்க்குயிராய் இறைவன் தங்கியிருக்கிருன். அதனுல் தானே அம்முதற் பொருளுக்கு இறைவன் என்ற பெயர் அமைந்தது. ஆனுல் அவ்விறைவன் பருவமாய தகுதி உண்டாய போது வெளிப்படுகிருன். அஃதாவது அன் பின் நெகிழ்ச்சியும், அறிவின் விளக்கமும் பெற்றபோது பிறர்க்குதவல் என்ற மணமும் நிறைவு பெற்ற ஞான்று, இறைவன் என்ற முதற்பொருள் காட்சியளிக்கிருன். அந் தப் பொருள் முன்னரே அங்கு உள்ளது. விதையில் காணப் படாது அமைந்துகிடந்த உயிராற்றலைப் போல, அவ் வுயிர்க்குயிராய இறைவனும் அவ்வுயிரிடத்தில், இப்பண் புகள் வளரும் தனையும் வெளிப்படாது அமைந்துகிடந் தான். அப்பண்புகளாம் தகுதி நிறைந்த உயிர்மாட்டு, மணியின் ஒளியும் மலரின் மணமும் போலத் தானே தோன்றலாகிருன் என்பதனை,

'மலர்மிசை யேகினுன்'

என்றதால் வள்ளுவப் பெருந்தகை விளக்குகிருர். அதன் பின் அந்நினைவார் நெஞ்சில் இடங்கொண்ட இறைவனது திருவடிகளை மாணடி என்பது, எங்கும் நிறை வாலறிவ னுகிய இறைவனுக்கு அடி என்ற குறிப்பு, மாண்பேயாகும். மாண்பு என்பது உயரியகுணங்கள் அனைத்துக்கும் பொதுப் பெயராகையால் எல்லா நற்பண்புகளும் அவனடியாம் என்றதாம். நற்குணங்களாய இறைவன் திருவடியைச்சேர் ந்தவர், மாணடி சேர்ந்தார் ஆவர். உயிரின் தன்மை எப் பொருளைச் சார்கிறதோ அப்பொருளாய் விடுவது. இதனைச் சார்ந்ததன் வண்ணம் என்பர் சான்ருேர். உடலோடு கூடிய வழி உடலேயாயும், அறிவோடு கூடியபோது அவ்வறிவேயாயும் விடும் இயல்பினது உயிர். இதனைச்

சாத்திரம், அசத்தோடு கூடித் தன்னை அறியாது அசத்தையே அறிந்து அவ்வசத்தேயாயும் சத்தோடு கூடிய போது அச்சத்தை அறிந்து அனுபவிக்கும்போது தன்னை மறந்து அச்சத்தேயாயும் விளங்கும் தன்மையுடையது உயிராகையால், அவ்வுயிர்க்கு "சதசத்து" என்று பெயர் கூறுவதாயிற்று. இதனுல், உயிர் மாணடி சேருமானுல் தானும் அம் மாண்புடையதாய் அவ்விறைவனைப்போல் குற்றமின்றிக் குணமே வடிவாய் நிலைபேறுடையதாய், என்றும் இன்ப உலக வாழ்வு பெறுகிறது என்பதனையும் உடன் கூறுகிருர்.

உயிர்க்கு அறியாமையால் அவாப்பெருகி அவாவினுல் துன்பமேயாய பிறப்பிடைப் பல்காலும் விழுந்து அவலம் அடையும் நிலை நீங்க வாலறிவனது மாணடி சேர்ந்தால் துன்பநிலை நீங்கி இன்பமேயாய பிறவாப் பேரின்ப நிலை பெறுதலாய ஒன்றனை நிலம் என ஆசிரியர் குறிப்பிடுகிருர். நிலம் என்ற சொல் நிற்பது, அதாவது உயிர்கள் தோன்றுவதற்கு இடமாய் நிலைத்திருப்பது என்ற பொருளாம். ஆனுல் திருவள்ளுவர் இங்கே நிலம் என்ற சொல்லை உயிர்கள் பிறந்திறந்துழலும் துன்பத்தினின்றும் நீங்கி இறவாப் பேரின்ப நிலையில் நிலைத்திருத்தற்கு உரிய இடம் என்ற பொருளில் அமைத்துள்ளார். எனவே துன்பம் கலவாத இன்ப உலகில் நீடுவாழ்வார். என்று கூறி முடிக்கிருர். அதாவது எவனெருவன் நல்லறிவினுல் இறைவனைத் தன் நெஞ்சத் தாமரையில் அன்போடு தொழுது ஆருயிர்க்கு இரங்கி வாழ்கிருனே அவன் என்றும் குன்றுத இன்ப வாழ்வில் நிலைத்திருப்பவனுகிருன். என்பது மூன்ரும் குறளின் கருத்தாகக் கொள்க.

மேலும் எங்கும் உளனுய இறைவன் நினைந்தேத்தும் நல்லறிவுடையார் நெஞ்சில் நினைத்தபோதே வெளிப்பட்டு நிற்பன் என்பதும் இடஞ்சுட்டியவாறு. உள்பொருளாய

இறை, தன்னிடத்தும் உள்ளது என்பதும், அதனை வெளிப் படுத்தும் ஆறும் கூறியதாயிற்று.

இது காறும் உரைத்த வாற்ருல் மலர் என்பது பண் புருவகமாய் நெஞ்சினையும், நெஞ்சு ஆகு பெயராய உயி ரையும் குறித்து நின்றமையையும், ஏகினுன் என்பது எங்கு நிறை இறைப் பொருள் வெளிப்படும் நிலையினையும், மாணடி என்பது அப்பொருள் தோன்றின பண்பாட்டு நிலையினையும், நிலம் என்பது இன்பம் நிலைபெற்ற நல்வாழ் விடம் என்பதனையும், நீடுவாழ்வு என்பதுஎன்றும் பெற்றின் புறுவதனையும் உணர்த்தியவாருகும். இனி, சேர்ந்தார் என்பது இடைவிடாது நினைத்தல் என்ற பொருளதாகக் காட்டினுர் பரிமேலழகர். அதனை நாம் அறியுமாறு பின் வரும்.

சேர்தல் இரண்டு வகைப்படும். ஒன்று அகச் சார்பு. மற்ருென்று புறச் சார்பு. இதனை நுண்பொருட் சார்பென் றும், பருப்பொருட் சார்பென்றும் கூறுப. தூணைச் சார்ந் தான் என்ருல் அவன் தளர்ச்சியுற்றவழி, உடலுக்குச் சார்வாய் துணையாய் நின்ற தூணைச் சேர்ந்தான் என்ப தாயிற்று. நல்லோரைச் சார்ந்தான் என்ற வழி அவன் குணக்கேடு அகலவும் நற்குணம் பெருகவும் அவர்களு டைய குணங்களாய நற்குணங்களைச் சார்ந்தான் என்றே பொருள்படும். எனவே புறப்பொருட் சார்புகளெல்லாம் அறிவற்ற சடச் சேர்க்கையாகவும், நுண்பொருள் அதா வது கருத்துப் பொருட் சார்வுகளெல்லாம் அறிவுடைய சேர்க்கைகளாகவும் அமையும் என்பதை அறியலாம். இங்கே 'மாணடி சேர்ந்தார்' என்ற குறிப்பு இறைவ னுடைய அனைத்து விதமான எண் குணங்களையும் தன்னறி வின் விளக்கத்தால் அறிந்தமட்டும் அணைந்து அறிந்து, அதனையே இடைவிடாது நினைப்பதனுல், சார்ந்த பொரு ளின் மாண்பு தன்னிடத்தும் நிறையப் பெறுதல் என்ற

குறிப்பாம். இதனையே பரிமேலழகரும், சேர்தல் இடை விடாது நினைத்தல் எனக் கூறினர் என்றறிதல் வேண்டும். மன முதலாய அகக் கருவிகள் அவ்விறைவனை நினைத் தலும், நினைத்தலும், தம்மை மறத்தலும் அது அதுவாம் தன்மை பெறுதலுமாய நிலையினை உணர்த்திய வாருகக் காண்க.

உலக நிலை முழுதாகி ஆங்காங்குள்ள உயிராகி உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனை, நிலமிசை என உலகத்தினையும், சேர்ந்தார் என உயிர்களையும், ஏகினன் என இறைவனையும் கூறி முப்பொருள் உண்மை காட்டிய வாறும், ஏகினன் என்ற ஒருமையால், ஒன்றே கடவுள் என்றும், சேர்ந்தார் என்ற உயர்திணைப் பன்மையால் பக்குவ ஆன்மாக்கட்கு அக்கடவுள் அனுபவப் பொருள் என்றும், நிலம் என்ற அஃறிணைச் சுட்டால் உலகம் காட்சிப்பொருளாய் அசத்தாம் என்றும் விளக்கிய குறிப்பும் கண்டு மகிழலாம்.

இவ்வாறெல்லாம் ஆழ அகல நுட்பச் செறிவுடைத் தாய் விளங்கும் இத்திருக்குறளினை ஞானப் பிள்ளையார் எங்ஙனம் அனுபவ வாயிலாகச் சுட்டுகிறார் என்று இனிக் காண்போம்.

ஞானப் பிள்ளையார், எங்கள் தெய்வமாம் வளவர் திருக்குலக் கொழுந்தாய மங்கையர்க்கரசியும் குலச் சிறையாரும் வேண்டியபடி, சமண சமயப் படுகுழியில் வீழுந்து திருநீற்றுப் பொலிவிழந்து தெய்வ நிந்தனை செய்துழலும் திருமாடக் கூடலுக்கு எழுந்தருளுகிறார். ஞானசம்பந்தரின் திருவருட்சார்பும் அடியார் குழாத்தின், தெய்வ வழிபாட்டு நிலையும் தெளிவும் சமணர்களை உள்ளத்தில் அச்சத்தையும் பேச்சில் பழியையும் செய லில் தீமையையும் உடையவர்களாக்கிவிட்டன. அதனால்

அவர்கள் அடியார்கள் எழுந்தருளியிருந்த மடத்திற்குத் தங்கள் மடமையால் தீயிட்டனர். அறிந்த அடிகளார், அத்தீமை அரசன் கோல் கோடிய தன்மையால் தீமை நிகழ்ந்ததென, உணர்ந்து, அத்தீயை, ''பையவே சென்று பாண்டியற்கா மாறு பணித்தனர். அருளாளரின் திருவருள் மறக்கருணையாகப் பாண்டியனுக்கு வெப்பு நோயாய் விளைந்தது. பாண்டியன் நொந்து நோய் நீக்க அமண ரால் முடியாமையால் அருளாளரைத் துணை வேண்ட, நோய் நீங்கித் தெய்வ உண்மையை உணர்கிறான். அது போது சமணர்க்கும் அருளாளராம் அடிகட்கும், வாதம் நிகழ்கிறது. அரசன் முன்னிலையில், அறிவாற்றலைக் கொண்டு பொருளை விளக்கம் செய்வதும், தம் முடிபை நிலை நிறுத்துவதும் வாதமாகும். தெய்வ உண்மை அறிவு விளக்கத்தோடு, அன்பின் உருக்கத்தால், அனு பவத்துக்கு உரியதாகும். இவ்விரு வேறுபாட்டினையும் நன்குணர்ந்த நம் திருஞான சம்பந்தர், அவ்வுண்மை உணரமாட்டாத சமணர்கட்குத் தெய்வ உண்மை தெரிக்க வந்தபோது அருளிய திருப்பாசுரம் இங்கே வருகிறது.

> '' ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
> சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
> மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மினோ
> சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே ''

இத்திருப்பாசுரம் எத்தனையோ உண்மைகளை உள்ளடக் கிய ஒரு பெருஞ்சூத்திரமாய் அமைந்துள்ளது. எனினும் சிறிது நம் திருக்குறளுக்கு ஏற்ப மொழிந்து சுவைப்பது நம் கடன்.

இத்திருப்பாசுரத்தில் முன்னிரண்டிகளால் முன்னே கூறிப்போந்த காரண காரியத் தொடர்பால் வந்த இறை யுண்மையை அனுபவத்தால் அறிய வேண்டுமென்று

அறிவுறுத்துகிருர். எடுத்த மொழி—மேற்கோள். ஏதுக்கள்—காரணம். கடவுள் உண்டென்று மேற்கொண்டு அப்பொருள் உண்மையைத் தெரிக்கக் காரணங்கள் பல காட்டி அறிவியலால் அனுபவப் பொருளைச் சுட்ட வேண்டா என்பது சுருங்கிய கருத்து. பொருளுண்மை காட்டுவது, பருப்பொருளின் கண் அமையுமேயன்றி நுண் பொருளின் கண்ணே அமைவதொன்றன்று. இன்ப துன்ப நிகழ்ச்சிகளை உயிரினிடத்து அவலம் களிப்பு முதலியவற்ருல் உணர முடியுமே யன்றிக் கட்புலனுல் காணமுடிவது அன்று. அங்ஙனமே உயிர்க் குயிராம் இறைப் பொருள் அவ்வுயிரின் அனுபவத்தால் அறிய முடியும் - அனுபவிக்க முடியும் பொருளே யன்றி அவ்வவ் வுயிர்கள் பெற்றுள்ள பொறி புலன்களால் காண முடிவ தன்று என்ற உண்மையைத் தான் ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா என்ற தொடர் காட்டுகிறது.

ஆனுல் அறிவினுல் ஆராய்ந்து உண்டென்ற முடிவுக்கு வருதல் கூடாது என்பதன்று. அறிவும் ஆராய்ச்சியும் திரிபுணர்ச்சியையும், ஐயப்பாட்டையும் போக்கித் தெளிவு பெறச் செய்யும் அம்மாத்திரமே அறிவின் ஆராய்ச்சியின் பயனுக்கொள்ள வேண்டும். அந் நுட்ப, நுட்பத்தின் நுட்பமாயுள்ள பொருளை உண்டென்ற தெளிவுக்கு வரும்வரை அறிவு துணை செய்வது என்ற உண்மையைப் பிள்ளையார் மறுக்கவில்லை. அவ்வறிவே அனுபவமாகாது. அவ்வறிவு கொண்டே அவ்வனுபவப் பொருளைக் காணலாம், காட்டலாம் என்றெண்ணக் கூடாது என்பதனை வலியுறுத்த "மிக்குச் சோதிக்க வேண்டா" என்றருளினுர்கள். மிக்கு என்ற சொல் அளவுக்குமேல் செல்லலாகாது என்றதாம். அறிவு செல்லும் துணை நின்று அறிக, அதற்குமேல் அனுபவத் தான் காண்க என்பதாம்.

இனி, யான் எனது என்னும் செருக்கு நீங்கியவழி அவனருளே கண்ணுகக் காண வேண்டிய அப்பர சிவத்தை நான் காண்பேன் என்று, தடித்தெழுந்து காண முடியாது. அந்தச் சோதனைக் குரிய பொருளன்று என்ற தாகக் கொண்டு, மிக்குச் சோதிக்க வேண்டா'' என்ற ருளியதாகக் கூறினும் சிறக்கும்.

பணிவில், செருக்கின்மையில், அனுபவத்தில் காண அனுபவப் பொருளாய் நிற்பவன் இறைவன் என்றதனை ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் சோதிக்கவேண்டா என்றும், மிக்குச் சோதிக்க வேண்டா என்றும் காட்டினுர். அதற்குமேல் செருக்கற்ற உயர்ந்தோர் ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும் சென்ற அளவு பொருளுண்மைக்குத் தெளிவு கண்டு அன்பினுல் உருகி, அனுபவ வாயிலாக அனுபவிக்க முற்படுவரே யன்றிச் சோதிக்க முற்படார் என்பது கருத்தாம். மேல், அவ்வனுபவ மேலோர்க்கு அவ்விறைப் பொருள் எவ்வாறு விளங்குகிறது என்ற உண்மையையும் தம்மனுபவ வாயிலால் வெளியிடு கிருர்கள்.

'சுடர் விட்டுளன் எங்கள் சோதி'

சுடர், சோதி என்ற இரண்டு சொற்கள் ஒளிப் பொரு ளையே குறித்து நிற்பன. ஆனுல் சுடர் என்பது ஒரு பொருளைப்பற்றி நின்று ஒளி வீசுவது. சோதி என்பது ஒரு பொருளையும் பற்ருது நின்று ஒளி மயமாயே விளங்கு வது. உலகில் காணப்படும் ஒளிப்பொருள்கள் இரண்டு. ஒன்று விளக்கு, மற்ருென்று சுடர். இதனை முன் வந்த பெரியார்,

'சோதியே சுடரே சூழ் ஒளிவிளக்கே' -திருவாசகம்.

என்றருளினர்.

விளக்கு, அகல், எண்ணெய் திரி என்ற மூன்றைப் பற்றி ஒளிவீசுவது.

சுடர் ஞாயிறும் திங்களும் விண்மீனுமாம். இவற்றிற்குத் தம்மியல்பில் ஒளிஉண்டு. ஆனல் அவ்வொளி, ஞாயிற்றையும் திங்களையும் மீனையும் பற்றியே வெளி வரும். ஆனல் சோதி என்பது அங்ஙனம் விளக்குப் போலவும் அன்று, ஞாயிறு திங்கள் மீன் போலவும் அன்று. தானே ஒளியாய் அதற்கொரு பற்றுக்கோடும் இன்றி மற்றை அனைத்தொளிக்கும் தானே ஆதாரமாய் நிற்பதாம்.

எனவே இறைவன் யாதொரு பற்றுக்கோடும் இன்றி, அதாவது தனக்கோர் ஆதாரம் இன்றித் தானே அனைத்துக்கும் ஆதாரமாய் விளங்குபவன் என்பதனை எங்கள் சோதி என்றருளினர் எனக் கொள்ளல் வேண்டும். இந்தக் காட்சி மெய்யுணர்வு பெற்ற அருளாளர் காணும் காட்சியாம், அனுபவமாம் என்பதனை 'எங்கள் சோதி' எனத் தம்மொடு படுத்தமையால் காண்கிறேம்.

அங்ஙனம் அனைத்தையும் அவனருளே கண்ணுகக் காண மாட்டாதார்க்கு இறைவன் எங்ஙனம் உளன் என்பதனைச் சுட்டுமுகத்தான் 'சுடர் விட்டுளன்' என்றருளுகிருர். அதாவது ஆன்மாவிடத்து வியஞ்சகமாய் நின்று, அவ்வுயிர்களை விளங்கச் செய்து கொண்டிருக்கிருன் இறைவன் என்பதாம். எங்ஙனம் எனில் பகலவனிடத்துள்ள ஒளி பகலவனிடத்திலிருந்து பிரிக்க முடியாததாய், அப்பகலவனேயாய் ஆனல் ஞாயிறு என்றும், ஒளி என்றும் பிரித்துப் பேசப்படும் அம்மாத்திரையாய் உலகனைத்தையும் விளக்கிக்கொண்டு நின்ருலும் தான் ஒளியுடையேன் என்பதனை அறிய மாட்டாதாய் நிற்பதுபோல, இறைவனது நீக்கமின்றி நிற்கும் அருட்சக்தியும், உயிரினிடத்து வியஞ்சகமாய்ப் பிரிக்கமுடியாது, உயிர்க்கு

விளக்கம் செய்துகொண்டு நின்றும், ஆனுல் அத்திருவருட் டுணையால் நான் அறிகிறேன் என்பதனை உயிர் அறி யாது கிடக்கும்படி நிற்பவன் இறைவனுகையால்.

'சுடர்விட்டுளன் எங்கள் சோதி'

என்றருளினுர். அங்ஙனமின்றி உயிரினிடத்து உயிரைப் பற்றுக்கோடாய் நின்று சுடர்விட்டு, அனைத்துமாய்விளங்கி ஆதாரமின்றித் தானேயாய் நிற்கும் நிலையில் சோதியாயும் விளங்குபவன் இறைவன் என்பதனை,

'சுடர்விட்டுளன் எங்கள் சோதி'

என்றருளினுர் என்று கூறுதலும் ஒன்று. இங்ஙனம் சமணர் கட்கு விளக்கம் கூறிய 'அடிகள் மேற்கூறிய தோடமை யாது, கல்வி கேள்விகளான் கற்றுத் துறைபோய நற்றவ வேடம் பூண்டவராயினும் சமணர்கள், காம வெகுளி மயக்கமாய குணக் குற்றங்களும், பொய் குறளை கடுஞ் சொற் குற்றங்களும், கொலை களவு முதலிய செயற் குற்றங் களும், நீங்கப் பெருமையால் நல்லறிவு தலைப்படார் ஆயி னர். நல்லறிவு தலைப்படார்க்கு, படலத்தால் மூடிய கண், ஒளியிருந்தும் காணமுடியாதவாறுபோல குற்றங்களால் மறைபட்ட அறிவு, ஒளிவடிவமாய இறைவனை அகத்துக் காணமுடியாது. எப்போது குற்றங்கள் நீங்குமோ அப் போதுதான் தெளிந்த உளத்தில் இறைப் பொருட்காட்சி உண்டாகும். அதனுல் தானே, வள்ளுவப் பெருந்தகை மனத்துக் கண் மாசிலனுதல் அனைத்தறன் என்றும், காம வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமங்கெடக்கெடும் நோய் என்றும் கூறினுர். அங்ஙனம் மாசு நீங்கிய பரி பாகம் பெற்ற நெஞ்சத் தாமரை மலரில் இறைவன் சுடராய் ஒளி வீசுவான், என்ற உண்மையைத் தானே மலர்மிசை ஏகினுன் என்று கூறினுர். இருள் நீக்கமும் ஒளி விளக்க மும் ஒன்றுக நிகழ்வதுபோல, இருளாய குற்றம் நீங்கலும்,

சிவப்பிரகாசமாம் சுடரொளி விளக்கமும் ஒன்ருய் நிகழ்வ தென்பதனை நம் ஞானப்பிள்ளையார்.

''மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மினோ''

என்றருளுகிருர். குற்றங்காரணமாக விளையும் காரியம் துக்கம். இங்கே காரியத்தைக் காட்டிக் காரணத்தை நினை வூட்டுவதாயிற்று. பொருமை வெகுளி முதலிய குற்றங் களால் வெந்து துன்பம் அடையும் உயிர்களைத் துன்பம் ஏன் வந்தது என விசாரிக்கச் செய்து குற்றங்களை நீக்கிய வழி துன்பமும் நீங்கும் என்பது கருத்து. உடலில் உறும் நோய்க்குக் கூட, நோய்க்கு முதல் நாடி, அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச் செயல்வேண்டும். ஆகையால் உயிர்க்குற்ற நோயாகிய துன்பம், நீங்கலுறவேண்டு மாயின் மனமாசு கழுவப்படவேண்டும் என்பதனை நினைவு றுத்தியவாரும் ''மாதுக்க நீங்கலுறுவீர்'' என்பது. திரு நாவுக்கரசுப் பெருமானும்,

''பற்றி நின்ற பாவங்கள் பாற்ற வேண்டின்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டின்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டின்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்''

என்று அருளுவதை உற்று அறிய வேண்டும். ஆகையால் பிள்ளையாரும் மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின் என்று ஆணை தருகிருர். குற்றம் நீங்கிய நெஞ்சத் தாம ரையில் சுடர் விளக்காய் ஒளி வீசுவான், அச்சுடரைப் பற்றி நின்று வாழ்மின் என்று காட்டியவாறு.

ஒளி கண்டபோது இருள் நீங்குமாறுபோல மனமாசு கழுவியபோது இறையொளி தானே விளங்குகிறது என் பதாம்! அன்றியும் கண்ணிழந்தவனுக்கு எப்படிக் கதிரொளி வீசினும் அவனுக்கு இருளாயே இருப்பது

போன்று, அறிவு விளங்கப் பெருனுக்கு இறையொளி காணப்படாது என்பதும் நாமறியவேண்டும். ஆகையால் தான் அடிகள் மாதுக்க நீங்கலுறுவீர் எனக் காரணத்தை முன் கூறி, அவ்வாறு தூய்மையடைந்த உள்ளத்தில் இறைவன் ஒளி தானே சுடர்விட்டெரியும் என்றருளுகிருர். 'மனம்பற்றி வாழ்மின்' என்றது மனம் இடவாகு பெய ராய் ஆன்மாவைக் குறித்து ஆன்மாவில் ஆண்டவன் ஒளிவீசிக் கொண்டிருக்கும் உண்மையினை அறிந்து அனு பவித்து இன்பமடையுங்கள் என்று சுட்டி அருளிய வாருகக் கொள்க. வாழ்தல் என்ற சொல் உயர்தலையும் இன்ப நுகர்ச்சியையும் குறிக்கும் ஓர் அருந்தமிழ்ச் சொல்.

இங்கே 'மாதுக்கம் நீங்கலுறுவீர்' என்பதற்கேற்ப வாழ்மின் என்ற சொல்வந்து துக்கம் நீங்கிய காலத்து அடையும் இன்பப்பேற்றையும் குறித்த அழகினை நாமறிந்து மகிழலாம். அறிவற்ற துன்பம் செய்யும் பொருள்களைப் பற்றிப் பற்றி அதனுல் துன்பமே ஆய அவல நிலையில் வாழும் இழிநிலை நீங்க, மாதுக்க நீங்கலுறுவீர் என்று விவரித்த அடிகள், பற்றற்ருன் பற்றினை மனம் பற்றினல் துக்க நிவர்த்தியும் இன்ப அடைவும் பெறலாம் என்ற கருத்தை 'மனம்பற்றி' என்றதனுலும், 'வாழ்மினோ' என்ற ஆசியுரையாலும் அருளுகிருர்கள். இது பரிபாக நிலைபெருத மக்கட்கு எடுத்தோதிய வழிப்பாடாகும். இந்தப் பகுதிதான் நம்மனோர்க்கு அருளிய திறப்பாடு. இதனைத்தான் வள்ளுவப் பெருந்தகையின் அறிவு நூலி லும் மூன்ருவதாய

"மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்"

என்ற தொடர் விளக்கம் செய்கிறது.

இனிச் "சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே" என்ற பகுதி சிறப்பிக்கிறது. சாதுக்கள் மிக்கீர் என்ற தொடர் பெரு நிலைபெற்ற மெய்யுணர்வு உடையோரை விளித்தவாறும். சாதுத் தன்மை என்பது அனைத்தையும் ஒன்றெனக் காணும் சமதர்சனம் உடைமையாம். அத்தன்மை உடையோர்க்கு நன்மை தீமை என்ற பாகுபாடும் சுகதுக்கக் கூறுபாடும் ஆண் பெண் வேற்றுமையும் இல்லை. ஏன்? அவர்கள் காணுகிற காட்சி ஒன்றேயாகக் காணும் காட்சியாம். அஃதெப்படி முடியும் எனில், முன்பின் அறியாக் காட்டிடைச் சென்றுன் ஒருவன் அங்கு காணும் மரம் செடி கொடிகளை எவ்வாறு காண்பரன். அப்பொருள்களின் பெயரும் அவற்றின் தன்மையும், அவற்றுற் பெறும் பயனும் அறியமுடியாதபோது அனைத்தையும் ஒன்றுக, அதாவது பிரித்துணராது மரம் செடி கொடிகளாகவே காண்கிறுன். இஃது ஒரு நிலை.

பல்லாயிரம் மக்கட் கூட்டத்தில் ஒரு புதியன் நிற்கிறுன். அவர்கள் அனைவரையும் காண்கிறுன். எப்படிக் காண்பான். அவர்களுடைய தொடர்பின்மையாலும், அவர்களுடைய தனித்தனிப் பெயரும், பண்பும், பயனும் அறியாமையாலும் ஒரே நிலையில், மக்களெனவே காண்கிறுன். இஃது ஒருநிலை.

இங்ஙனமாக மெய்யுணர்வு பெற்ற மிக்கோர் அனைத்துவிதமான புறப் பொருளின் நீங்கியும் உடல் உட்கருவிகளினின்றும் நீங்கியும் அனைத்தையும் ஒன்றெனக் காணும் காட்சியுடையர் ஆகையால் அவர்களைச் "சாதுக்கள் மிக்கீர்" என அழைக்கிறுர் அடிகள். இங்கே அடுத்துவரும் தொடர் நமக்கு உபகாரமாய் அமைகிறது. எங்கும் பரந்து அகண்டாகார சிவபோகம்

பழுத்துப் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடப்பதனை அனுபவிக்கச் சேரவாரீர் என்று அழைப் பாராய், ' இறையே வந்து சார்மின் ' என்று அழைக்கிருர் கள். இத்திருப்பாசுரத்தால் நாமறிபும் உண்மை பல வாயினும், " மனம்பற்றி வாழ்மின்' என்ற பகுதியும், " ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா " என்ற பகுதியும், " மலர்மிசை ஏகினன் " என்பதன் விளக்கமாகவும், " இறையே வந்து சார்மின் கள் " என்ற பகுதி " மாணடி சேர்ந்தார் " என்பதன் விளக்கமாகவும், ' வாழ்மின் ', ' சார்மின் ' என்று அருளி யதை மாற்றிச் சார்ந்து வாழ்மின் எனக்கொண்டு கூட்டி, 'சேர்ந்தார் நீடுவாழ்வார்' என்பதன் விளக்கமாகவும் கொள்ளவேண்டும். இங்ஙனமாக திருக்குறளின் அறிவுத் தெளிவு, அருளாளர்களின் அனுபவ உண்மையோடு ஒத்து விளங்கும் நிலையினைப் பல்லாற்ருனும் கண்டு மகிழ் கிரேம்.

திருச்சிற்றம்பலம்.

" ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்க நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே"

திருச்சிற்றம்பலம்.

நன்னெஞ்சே உனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ் சேர் பிரமபுரத் தாரமுதை எப்போதும்
மன்னும்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே"

திருச்சிற்றம்பலம்

" மலர்மிசை ஏகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"/

---

4

'வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.

உலகில் காணப்படும் உயிர்த் தோற்றங்களில், உயிர் என்ற ஒன்றன் இயல்பினைச் சமய வாதிகள் பலவாறு காட்டுகிறார்கள். உயிர் என்ற ஒன்று உள்பொருள்தானா? என்று ஐயப்பட்டு, அப்படி ஒரு பொருள் இருக்க முடியாது, வேண்டியதும் அன்று என்றவர்களும் உண்டு. ஏன் எனில், இறப்பிற்குப் பின் நிகழ்வு என்ன என்பதும் பிறப்புக்கு முன் எப்படி? என்பதும் அறியமாட்டாமையால், வாழ்வில் காண்கிற இன்பதுன்ப நிகழ்ச்சிகளைக் கண்டு நாம் உயிர் ஒன்று உண்டு எனக் கற்பனையால் சிந்திக்கிறோம் என்பவரும் உண்டு.

அப்படியன்று. முன் நடந்த நிகழ்ச்சிகளை நினைவாற்றலால் பின்னால் உணர்வதனாலும், பின்னால் என்ன நிகழும் என்பதனை அறிவாற்றலால் முன்னே ஓராற்றானறிய முடிவதனாலும், உடம்பின் உள்ள ஒரு களிப்புப் போன்றதன்று உயிர். உயிரென்பதோர் மயக்க உணர்வாயின் பின் நினைவும், முன்னறிவும் பிறப்பதற்கு இடமின்று. ஆகையால் உயிர் என்பது, உண்டு என்றும், அது சுகதுக்க நிகழ்ச்சிகளையும், நினைவாற்றலையும் உடையது என்பார் ஒருசாரார். மற்றொருசாரர். அங்ஙனமன்று. எல்லா உயிர்கட்கும், அவ்வாற்றலின்மையின். அறிவே உயிராயின், அனைத்துயிர்கட்கும், ஒரு சமமான, நினைவாற்றலும், அறிவாற்றலும் அமைந்திருக்கவேண்டும்,

அங்ஙன மின்மையின், உடம்புதோறும், வேறு வேருய்க் காணப்படும் அளவுக்கு அறிவும் நினைவும், மாற்ற மடைதலின், அவ்வறிவின் வேருயதோர் உயிர் உண்டு. அவ்வறிவு உடலுக்கேற்ப, மிகுந்தும் குறைந்தும் உளது, நினைவும் அவ்வாறே எனக் கூறுவாரும் உளர். அங்ஙனமாயின் அவ்வுயிர், ஏன், அனைத்தையும் அறிய முடிவதில்லை. உடற்கேற்ற நிலையாயின், அனைத்துயிரும் ஏன் ஒருசமமான உடலெடுப்பதில்லை. உயிரிச்சையால் உடல் எடுப்பதாயின் உயர்ந்த உடலையே பெறலாமே, என்ற பலப்பல விஞக்கள் எழும். இந்த விஞக்களுக் கெல்லாம், சரியான, விடை கூறுவதும், காண முற்படு வதும், வரம்பிலவாய், முடியாமையால், உயிர் என்ற அம்மாத்திரமே முடிவில் நிறுத்தி, அவ்வுயிர் ஏற்றத்தாழ் வான உடற்பெற்று விளங்கியமைக்குக் காரணமாத்திரம் நாம். இங்கு அறிய முற்படுவோம்.

தோற்றம் வரம்பில. காணப்படும் உலகம், கண்ட அளவில் அமைவதன்று, விரிந்து செல்வது. மனிதன், அறிகின்ற அளவில் அமைந்துவிட்டதன்று. உலகத் தோற்றம், கண்ட அறிந்த அளவில் உலகம் உள்ளதாக அவன் நினைக்கிருன் அறிகிருனே அன்றி உலகம் அங்ஙன மன்று ; புதிதுபுதிதாகக் காணுந்தோறும், அறியுந்தோறும், அவன் கண்டதும், அவனறிந்ததும், இலதாய்க், காண வேண்டியதும், அறியவேண்டியதும், அளவிலவாய் உலகம் விரிந்து உள்ளது என்பதனைக் கவிச் சக்கரவர்த்தி யாகிய கம்பன்.

‘ துறக்கமே முதலவாய தூயன யாவையேனும்
மறக்குமா நினையல் அம்மா வரம்பில தோற்றமாக்கள் ’

எனக் கூறுகிருன். ஆகையால், உலகத் தோற்றமே மனித அறிவால் அளந்தறிந்து விடமுடியாத தன்மையது. அவ்வுலகத்தில், உடம்பொடு வாழும் உயிர் அணுவாய்

நிற்றலின், அதன் நிலையில் அகண்ட உலகத்தினை யாங்ஙனம் காணமுடியும்? முடியாதன்றோ. ஆகையால், உயிர் சிற்றறிவுடையதாய், எடுத்த உடலுக்கேற்ற இன்ப துன்ப நிகழ்ச்சிகளையும், சுருங்கிய அறிவியல்பினையும் பெற்றுள்ளது என்பர் இவர். இந்நிலை உயிர்கட்கு உண்டாவதேன்? என்பதனைப் பல்கால் அறிவாலும் அனுபவ நிலையாலும், கட்டு நீங்கிக் காணும் மெய்யறிவுடையோர் இதற்குரிய காரணங்களை ஒருவாற்றான் உணர்த்தியுள்ளனர். உயிர்கள் இயல்பாகவே அறியாமையுடையன, அவ்வறியாமை செயற்படும்போது, அவா எழுகிறது. அவ்வவாவால், அந்த உயிர்கள் பிறப்பினை யடைகின்றன. அப்பிறவியில் அவ்வவாவினால் இன்பத்தையும் அடைகின்றன. அவா நிறைவேறாதபோது, துன்பமடைகின்றன. அவ்வின்ப துன்ப நிகழ்ச்சிகட்குக் காரணம் அவாவே. அவ்வவாவுக்குக் காரணம், அறியாமையே என முடிவுக்கு வந்தனர், அறிந்தனர், அனுபவித்தனர். கருணையால் நமக்குக் காட்டி உண்மைப் படுத்த முயன்றனர்.

> ‘அவா வென்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
> தவாப் பிறப்பீனும் வித்து’
>
> ‘காம வெகுளி மயக்கம் இவை மூன்றன்
> நாமங் கெடக் கெடும் நோய்’

என்பன மேற்கூறிய கருத்துப் பொருளை உண்மைப் படுத்துவதைக் காண்க.

இனி, அவா, அறியாமையின் செயலாய் இயங்கி, உயிரினை அடைய முடியாத பொருள்களை விரும்பச் செய்கிறது. அடைந்த உடல் முதலான கருவிகளைத் தான் என்றும் தானனுபவிக்கின்ற பொருள்களைத் தன்னுடையது என்றும் விபரீத உணர்வால் உணர்கிறது. இங்ஙன

மாக அறியாமை, பலமுகத்தான் உயிர்க்குத் தன் மறைப் புச் சக்தியை வெளிப்படுத்திக்கொண் டிருக்கிறது.எனவே உயிர்கள், அறியாமையால், அவாப்பட்டும், அல்லற் பட்டும், பிறப்பிறப்புக்களில் தடுமாறி உழல்வன ஆயின. இங்ஙனமாகப் பிறப்பிறப்புக்களின்றி, நிலை பேறுடைய தாய ஒரு பொருள், இவ்வுயிர்கள் மாட்டுவைத்த கருணை யால், அறியாமை விலகும் பொருட்டும், அவாவினால், அல்லற்பாடு அடையாமைப் பொருட்டும், தன் ஆற்ற லாகிய அருட்சக்தியால், அவ்வவ்வுயிர்களின் இயல்புக் கேற்ப உடல், கருவி, உலகம், நுகர்பொருள்களை யருள் கிறது. அவற்றைக் கொண்டு உயிர்கள், விருப்பு வெறுப் புக்களால்,இன்ப துன்ப நிகழ்ச்சிகளை யடைந்து, உணர்வு வரப்பெற்று, அறியாமை குறைய, நல்லறிவு தலைப்பட்டு, நிலையாமை யுணர்ந்து நிலைபேற்றை யடைய முயற்சிக் கின்றன என்பதனை நம்மனோர் நமக்கு அளவை நூல் வாயிலாகத் தெளிவு செய்துள்ளனர். ஆகையால், விருப்பு வெறுப்பு ஆய, அறியாமைச் செயலுள்ள வரையில், உயிர் கள் துன்ப நீக்கம் பெறுவது கூடாமையின் இறைவன், இயல்பாகவே விளங்கிய அறிவினன், ஆகையால் வாலறிவனாகிய அவனுக்கு, வேண்டுதலும், வேண்டாமை யுமாகிய, அறியாமைச் செயல் இல்லை என்பதனை நமக்கு நல்லாசிரியராய வள்ளுவர்,

‘வேண்டுதல் வேண்டாமை இலான்’

என்று இறைவனைக் குறிப்பிடுகிறார். எனவே, இறை வனின் முதல் நிலையும், அவன் அறிவு நிலையும், அவன் விளக்கமும் கூறியவாறாயிற்று. வாலறிவன், என்ற குறளில் அவன் களங்கமிலா அறிவினன் என்றும், அனைத்தையும் அறியும் அறிவினன் என்றும் கூறிப்போந்த உண் மையைக் காரணங்காட்டி வேண்டுதல் வேண்டாமை இன்மையால், அவன் வாலறிவன் என்று நிலை செய்தவா றும், என்றும் கொள்ளலாம்.

மேலும், உயிர்கள் அறியாமையுடையன, என்பதனை இறைவனுடைய இயல்புகளை விளக்கு முகத்தான் வெளிப் படுத்துகிருர். எங்ஙனமெனில், வாலறிவன் என்று இறை வனைக் குறிப்பிட்டதால் உயிர்கள், அறியாமையாகிய அழுக்கோடு கூடியன என்பதும், வேண்டுதல் வேண்டா மையிலான் என்று இறைவனைக் குறிப்பிடுதலால் உயிர் கள் வேண்டுதல் வேண்டாமை யுடையன என்பதும் கூறிக் குறிப்பான் உணர்த்துகிருர். அன்றியும், ‘அடி சேர்ந்தார்க்கு’ என்பது, முன் மூன்ரும் குறளில் கூறிய ‘மாணடி சேர்ந்தார்’ என்பதனையே கூறியவாருயினும், ஏன் சேரவேண்டும் என்ற வினுவிற்குக் காரணம் காட்டி வற்புறுத்துவதாயும் இஃது அமைந்துள்ளமை யறியப்படும்.

குறைவிலா நிறையறிவு, என்பது அனைத்தையும், துணையின்றி ஒன்ருகவே காணும் அறிவு. அந்த அறிவு அனைத்தையும் காணுமேயன்றி, அவ்வறிவினைக்-குறையறி வும், அறிவற்றதும், காணமுடியாது. குறையறி வென்பது, பிறழக்காண்பதும், துன்பந்தருவனவற்றை இன்பந்தரு வனவாகக் காண்பதும் ஆகும். அதூஉம் அறிவாயினும், நல்லறிவும், நிறையறிவும் ஆகாது. அங்ஙனம், சிற்றறி வும், அதனுற் சிறுதொழிலும் உடைய உயிர்கள்‘ அச்சிற்ற றிவினுலும், சிறு தொழிலினுலும், வேண்டுதலும், வேண் டாமையும் உடையனவாய்த் துன்ப வாழ்வில் உழல்கின் றன. அங்ஙனம், துன்பமடையும் போதும், அத்துன்பங் களைத் துன்பமென்றறிவதும் இல்லை. அத்துன்பங்களையே இன்பமென்றும் தவருக உணர்கின்றன. இந்த நிலைமாறி, இது துன்பம், இஃது இன்பம் என்ற பகுத்துணர்வும், உண் மையான இன்பம் இஃதென்றுணரும் நல்லறிவும் வேண் டற்பாலதாய் நிற்பது உயிர் என்பதனை, ஆசிரியர் நமக் குக் கூறவேண்டும். எடுத்துக்கொண்டது கடவுள் வாழ்த் தாகையால், கடவுள திலக்கணம் கூறுவார் போன்று,

உயிர்கள திலக்கணமும் கூறி, அதனோடு, அக்கடவுளின் உயர்பேரின்ப நிலையினைக் காரணமாகத்தான் தெரிவிப் பது போன்று உயிர்களின் மிகக் கீழ் நிலையினையும் காட்டி, அக்கீழ் நிலையினின்றும் கடைத்தேறும் வழியினையும் கூறு வாராயினர். அடி சோர்ந்தார்க்கு என்பது, உயிர்கள் உய்யும் நெறி காட்டியவாறு. ஏன் சேரவேண்டும் என்ற வினாவிற்கு உயிர்கள், வேண்டுதல் வேண்டாமை யுடை யன. அவ்விரண்டும் அறியாமைச் செயல்கள், அவற்றான டைவது துன்பமேயன்றி இன்பமில்லை. எந்நாளும் துன்ப மில்லா இன்பமே பெறுதற்கு,அவ்விரண்டும் நீங்கப்பெறல் வேண்டும். அந்நீக்கம் பெறுவதரிது. அவ்விரண்டும் இல்லாதவனைச் சேர்ந்தாலன்றிப் பெறமுடியாது. என் பதனை,

‘ வேண்டுதல் வேண்டாமை யிலானடி
சேர்ந்தார்க்கு ’

என்று கூறுகிறார். இவ்வுண்மை, அளவை முறையில், ஒன்றனைக் கூறி, மற்றொன்றனைக் கொள்ளவைத்தல் என்ற முறை தழுவினவாரும்.

இனி, அங்ஙனம் சேர்ந்தார்க்கு, மூன்றும் குறளில் கூறிய நிலமிசை நீடுவாழ்வார் என்ற பகுதிக்கு, விளக்கம் கூறுகிறார். ‘யாண்டும் இடும்பை இல’ என்பது அது. யாண் டும், என்பது இடத்தையும் காலத்தையும் குறிக்கும் ஓர் சொல். ‘யாண்டு பலவாக’ என்ற சங்கச் செய்யுளில் ‘யாண்டு” என்பது காலத்தையும் ‘ ஆண்டாண்டாயினும் ‘ஆக’ என்ற பத்துப் பாட்டில் இடத்தையும் குறித்த வாறு காண்க. அங்ஙனமாக, ‘யாண்டும்’ என்பதற்கு, எல்லாவிடத்தும் எக்காலத்தும் எனப்பொருள் கொண்டு, ‘வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு’ எக்காலத்தும் எவ்விடத்தும் ‘இடும்பை இல’ என்று

பொருளழகு காணலாம். துன்பத்திற்குத் தமிழில் பல பெயர்கள் உண்டு. இடும்பை, இடுக்கண், துன்பம், அவலம், கவலை, அழுங்கல், கையாறு, நோய் என்பன துன்பம் என்ற பொருளையே கொடுத்துப், பல நோக்குடையனவாய் நிற்கின்றன. அவற்றுள், இடும்பை என்பதும், இடுக்கண் என்பதும் பொருளைச் சார்வதனுல் வரும் துன்பங்களைக் குறிக்கும். பொருளைச் சார்வதற்கு விருப்பு வெறுப்பே காரணம். அப்பொருள் உயர்ந்ததாயின், உயர்வையும், இன்பத்தையும், தாழ்ந்ததாயின் இழிவையும துன்பத்தையும் கொடுத்துவிடும். அல்லாமலும், பொருட்டன்மை அறியாது, இன்பம் தரும் என்று கருதி, மயக்க உணர்வால் சாரினும், அது துன்பமே பயக்கும். உலகத்தில், உயிர்களினது வேட்கை, அறிவற்ற பொருளையே அடையக் கருதுவதால் அதனுல் வருகிற பயனும் துன்பமாகவே முடியும். அதனுல்தான், சாருகின்ற பொருள்களின் தன்மை அறிந்து, சார்ந்திருக்கிற பொருள்களைவிட்டு நீங்கி, வாழக்கற்றுக் கொள்ளவேண்டும்.

உயிர்கள், உடம்போடு கட்டுப்பட்டன ஆகையால் அனைத்தையும் அறிய முடிவதில்லை. அனைத்தையும் அடையவும் முடிவதில்லை. அறியவேண்டுமென்ற அவாவும், அடையவேண்டுமென்ற அவாவும், மேலும்மேலும் அவ்வுயிர்களுக்கு எழுகின்றன. ஆனுல், எவன் ஒருவன், அனைத்தையும் அறிகிருனே, எவன் ஒருவன் அனைத்துப் பொருளையும் தன் உடைமையாக உடையவனே, அவன் அறியாத பொருளும் இல்லை, அடையாத பொருளும் இல்லை. ஆகையால், அவனுக்கு அறியவேண்டும், அடையவேண்டும் என்ற அவாவும் இல்லை. அடைய முடியாததில்லை ஆகையால் வெறுப்பும் இல்லை. ஆகவே அவ்விருப்பு வெறுப்புக்களால் வரும் துன்பமும் அவனைச் சாரா. அனைத்தையும் அறிகின்ற அறிவால் ஒளியும்

அனைத்தையும் உடைமையாம் தன்மையால் உயர்வும், 'அவன் மாட்டு நிலைத்து நிற்கின்றன. எந்த மனிதன் தன் அறிவால் இவ்வுண்மை நிலையினை அறிந்து, அப் பெரு நிலையைப் பெறுதற்கு முயற்சிக்கிறானோ, அப்பெரு— நிலையை உடையானைச் சாருகிறானோ, அவனுக்கும், அப் பொருட்சார்வால், வரும் விருப்பு வெறுப்பு நீங்கி அப்பெரு நிலை வந்து சேருகிறது. அதனால், 'வேண்டுதல் வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்கு' என இறந்த காலத்தால் காட்டி, 'யாண்டும் இடும்பை இல' என முடிக்துக் கொடுக் கிறார். 'இல' என்ற பன்மையால் 'இடும்பை' பல வாயின. அவை பின்வரும் விளக்கங்களால் அறிய வேண்டுவது. உயிரின் அறியாமையால் வரும் துன்பம், அறியாமையின் காரணமாகச் செயலால் வரும் துன்பம், அச்செயல்கள் நிகழ்வதற்கு இடமாகிய பொருட் சார்பால் வரும் துன்பம் எனத் துன்பங்கள் பலவாய் மல்கும். எப்பொழுது, இந்தப் பொருள் நீக்கம் பெற்று, அந்தப் பொருட் சார்பு அடைகிறானோ அப்பொழுது, அப்பொருளி னிடத்து நிலைத்த இன்பத்தையும் இவன் அடைகிறான்.

உலகத்தில் இருள் ஒளி, அறிவு அறியாமை, நன்மை தீமை, இன்பம் துன்பம் என்பன, ஒன்றை ஒன்று முரண் பாடுடையதாய் என்றும் எங்கும் காணப்படும் உண்மை களாம். ஒளி உள்ள இடத்தில் இருள் இல்லை. அறி வுள்ள இடத்தில் அறியாமை இல்லை. நன்மை உள்ள இடத்தில் தீமை இல்லை. இன்பம் உள்ள இடத்தில் துன் பம் இல்லை. ஆகையால், இறுதியாகிய இன்பமே உளது என்ற பெருநிலையை 'இடும்பை இல' என்ற எதிர் மறை முகத்தால் திருவள்ளுவர் காட்டினார். இதனை, 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்ற முதியோர் திருவாக் காலும் உணரலாம். எனவே, இவ்வாறு பரந்து பட்டுச் செல்லும் நுண்ணறிவுக் கருவூலமாகிய இந்நானகாவது

குறளின் கருத்தினை ஞானசம்பந்தப் பிள்ளையார் தம் அனுபவ மொழியால் தேமதுரத் தமிழிசையில் வடித்துத் தீந்தமிழ்ப்பாவாய்க் கொடுக்கும் திருப்பாசுரத்தை இனிக் காண்போம்.

(திருச்சிற்றம்பலம்)

"நன்றுதீதென் றொன்றிலாத நான்மறையோன் கழலே
சென்றுபேணி யேத்தநின்ற தேவர் பிரானிடமாம்
குன்றிலொன்றி யோங்கமல்கு குளிர்பொழில்
சூழ்மலர்மேல்
தென்றலொன்றி முன்றிலாருந் தென் திருப்பூவணமே"

(1 : 64 : 6)

(திருச்சிற்றம்பலம்)

இத்திருப்பாசுரம், திருப்பூவண நாதரைப் பற்றியது. திருப்பூவணம், ஒரு திருத்தலம். அத்தலம், குறிஞ்சி நிலத்தைச் சார்ந்தது. தென்பொதிய மலைத்தொடரில் தோன்றிய காற்று, அடுக்கு மலைகளில் தடைப்பட்டு மெல்லென்று? குளிர் பொழிலைச் சார்ந்து தண்ணென்று, நீறை மலரிற் படிந்து மணம் பெற்றுத்தென்றலாய்ச், செல்லிடம் தேடி, முன்றிலில் வந்து நிறைந்து மக்களை மகிழவைக்கும் திருப்பூவணம் என்று திருப்பூவணத்தைச் சிறப்பிக்கிறார் ஞானப்பிள்ளையார். வானளாய் நிற்கும் மலையில், இயல்பாய் நிறைந்த காற்று, மூன்று நிலை மாற்றம் பெறுகிறது. மரங்களடர்ந்த மலையிடைப் புகுவதால் தன் வேகம் குறைந்து மென்மை யடைகிறது. குளிர்ந்த பொழிலிடை நுழைவதால் தண்ணென்ற குளிர் நிலையடைகிறது. மலரிடைத் தங்கலால், மணம் பெறுகிறது. இந்த மூன்று நிலையும் பெற்றபோது தென்றல் என்ற பெயர் பெறுகிறது. அந்த நிலை பெருநிலை. அப்போது அத்தென்றற் காற்றுப் பயன்படவேண்டி, திருப்பூவணமாம் நல்லிடம் நாடிச் சென்று, ஆங்குள்ள மூன்றிலில் நிறைந்து, நன்மக்களை

மகிழச்செய்கின்றது. அத்தகு திருப்பூவணம் என்பது தலத்துக்கு அடிகள் கூறும் சிறப்பு. இதனுல், ஓரிடம், மக்கள் வாழ்வுக்கு உரிய இடமாகஅமைய, நல்ல காற்றும், குளிர் பொழில் சூழ்நிலையும், மலர் நிறை தடாகமும், வயல் வளர்சிறப்பும் உடையதாய் அமையவேண்டும். என்பது அடிகள் குறிப்பு. 'குன்றில் ஒன்றி' என்பதால் குறிஞ்சியாம் மலையும், ' குளிர் பொழில், என்பதால் முல் லையாம் நாடும், ' சூழ் மலர்மேல்' என்பதால் மலர் நிறை தடாகமும்—மருதமும், கூறிய சிறப்பும் காணலாம். நெய் தல்—கடற்கரை கூட்டப்படவில்லை. நெய்தல் புலம்பு என்ற உரிப்பொருள் பெற்றமையால், துன்ப விலக்குக் காட்டிப் பெருமைப் படுத்துகிருர். தென்றல் உயிர். உயிர்க் காற்று. அடர்ந்த காட்டிடைத்தழுவிக், குளிர் பொழிலில் தண்ணென்று மலரொடு சேர்ந்து மணம் பெற்று, மக்கள் வாழ்வுக்கு நலம் பயக்கும் தென்றலாய் வருகிறது. அத் தென்றல் வளரும் திருப்பூவணம் என்ற குறிப்பு உள்ளு றைப் பொருளை உடையது. ஆன்மா, அநாதியில் கேவ லத்தன்மை உடையதாய், ஆணவத்தொடு சேர்ந்து, இரு வினையில் கட்டுண்டு, பிறப்பு இறப்புக்களில் உழன்று, இன்ப துன்ப நுகர்ச்சிகளை அடைந்து, மெல்லென்று, இரு வினைக் கட்டினின்றும், விலகவேண்டும் என்ற நல்லறிவு பெற்றுக் தக்காரினத்தைச் சார்ந்து, தண்ணென்று, மேலும், இனச்சார்பால் கூட்டுறவால், தன்னிடத்தில் நற்குண நற் செயல்கள் என்னும் மணம் பெற்று இறைவன் எழுந்தருளி இருக்கின்ற, தலம், தீர்த்தம், மூர்த்தி எனும், மூவிடங்களை அடைவதற்கு, முயற்சிக்கிறது, என்ற உள்ளுறைப் பொருளைத் தென்றற் காற்றின்மேல் வைத்து 'குன்றி லொன்றி' என்றும் 'குளிர் பொழில்' என்றும் 'மலர்மேல்' என்றும் குறிப்பால் உணர்த்தினுர். தென்றலுக்கு மூன்று குணம், மென்மை, தண்மை, மணம் என்பன. ஆத்மாவுக்கு மூன்று தொடர்பு ஆணவம், கன்மம். மாயை என்பன.

இவை, அடுக்காகத் தென்றலுக்கும், ஆத்மாவுக்கும், வரிசையாய் வருகின்றன. மாயேயமாய உடம்போடு நல்வினைப் பயனால் ஆணவமலம் குறைய, அசைந்து சென்று சிவனடித்தொண்டு பேணும் சிறப்புப் பெறும் பொழுது அவ்வாத்மா அனைவராலும் வணங்கப்படுவதாய் உயர்ந்ததாய் தூயதாய்ப் போற்றப்படுகிறது. எவ்வாறெனில், காற்று குன்றிலொன்றி மென்மை அடைந்து, குளிர் பொழில் அடைந்து தண்ணென்று மலர் மேல் பரவி மணங்கமழத் தென்றலாய் வரும்பொழுது உயர்ந்த காற்றாய், போற்றப்படுவதுபோல என மனித வாழ்க்கையின் குறிக்கோளை, ஆத்மாவின் பரிபாக நிலையைத் தென்றலொடு பொருத்தி ‘ஞானப்பிள்ளையார்’ நமக்குக் காட்டுகிறார்.

இது தலச்சிறப்பு. ‘முன்றில்’ என்பது வீட்டின் முன் இடம். திருப்பூவணத்தின் வீட்டின் முன் இடங்களில் தென்றல் வந்து தவழ்கின்றன என்பது தக்கார் வாழும் நல்லிடம் என்பதனைக் குறிப்பதாகும். இதனைத் ‘தென் திருப்பூவணம்’ என்ற சொற்பொருள் விளக்குவதாகவும் கொள்ளலாம். ‘தென் திருப்பூவணம்’ என்பது தெற்கே உள்ள அழகிய பூவணம் என்ற நகரம் என்று பொருள்படும். ‘தென்’ என்பது ‘தேன்’ என்பதன் குறுக்கமாய்க்கொண்டு இனிமைச் சுவையையும், ‘திரு’ என்பது வாழ்வின் வளத்தையும்’ ‘பூவணம்’ என்பது கவர்ச்சியையும் குறிப்பதாய்க் கொண்டு, மனிதன் நல்வாழ்வுடையவனாய்க் கண்டவர்கள் விரும்பும்படியான நற்செயலால் பிறர்க்குப் பயன்படும் இனிய செயல்களைச் செய்து வாழவேண்டும் என்ற குறிப்பும் பெறப்படும். அத்தகைய, அரும்பெறல் நகரம் திருப்பூவணம். அத்திருப்பூவணத்தை இடமாகக்கொண்ட இறைவன் “நன்று தீதென்று ஒன்றிலாத தேவர் பிரான்” “நான் மறை

யோன் கழலே சென்று பேணி ஏத்த நின்ற தேவர் பிரான்'' எனக்கூறுகிறுர்.

இங்கு, நாம் எடுத்துக்கொள்வது நன்றென்றும் தீ தென்றும் ஒன்று இல்லாத தேவர் பிரான் என்பதாகும். 'நன்று' என்பது நன்மை பயப்பது, இன்பத்துக்குக் காரணமாவது, நாம் விரும்புவது என்று பொருள்படும். காரணம் வேண்டுதல். அதன் பயன் நன்று, விரும்பிச் செய்வதனுல் விளைவது நன்மை. அது போலவே 'தீது' என்பதும் தீமை, துன்பம், வெறுப்பது என்று பொருள்படும். வெறுப்பதனுல் விளைவது தீமை. எனவே வேண்டுதலும் வேண்டாமையுமாகிய இரண்டும், நன்று தீது என உபசரிக்கப்படுகின்றன. நன்று தீது எனினும், வேண்டுதல் வேண்டாமை எனினும் ஒக்கும். திருவள்ளுவனுர் 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்றதனை ஞானசம்பந்தப் பிள்ளையார் 'நன்று தீது என்று ஒன்று இலாத தேவர்பிரான்' எனக்குறிப்பிடுகிருர். மேலும், நன்றும் தீதுமாகிய இரண்டும், விருப்பு வெறுப்புக்களால் இன்ப துன்பப் பயன்களை விளைவிப்பன. இன்ப துன்பப்பயன்களே இருவினை எனப்படுவன. இருவினையும் அறியாமை என்ற ஒன்ருல் நிகழ்வன. இதனை, ஞானப்பிள்ளையார், 'நன்று தீது என்று ஒன்று' என்ற தொடரால் குறிப்பிடுகிருர். 'இலான்' என்ற திருவள்ளுவர் வாக்கினை 'இல்லாத தேவர் பிரான்' என்பதனுல் விளக்குகிருர். இதனுல், அனுதியே உயிர்கள், ஒன்ருகிய அறியாமையால் நன்று தீது என்ற வேண்டுதல் வேண்டாமையிற்பட்டு உழல்வன என்பதும், தேவர் பிரான் ஒன்ருகிய அறியாமை அனுதியே இல்லாதவன் என்பதும், அதனுல் அவனுக்கு நன்றும் தீதுமாகிய வேண்டுதல் வேண்டாமை இல்லை என்பதும் அடிகளின் திருவாக்கால் விளக்கிய வாருகும், நிற்க.

‘ நான் மறையோன் கழலே சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரான் ’ என்பது மிகவிளங்கிய ஓர் பகுதி யாகும். நான் மறையோன் என்பது. கல்வியறிவினை உடையான் என்பதனைக் குறித்து அவன் சென்று என்பது கல்வியறிவின் பயன் இறைவனை அடைதற்கு முயற்சிப் பதைக் குறித்ததாகும். ‘ கழல்பேணி ’ என்பது இரண் டாவது குறளில் குறித்த ‘ நற்றாள் தொழலை’க் ’ குறித்த தாகும். ‘ ஏத்த நின்ற ’ என்பது மலர்மிசை ஏகினான் ’ திருக்குறளின் குறிப்பாகும். எனவே, இத்திருப்பாசுரம், ‘ நின்ற தேவர் பிரான் ’ என்றதாலும், ‘ நான் மறை யோன் கழலே சென்று பேணி ’ என்ற குறிப்பாலும், ‘ நன்று தீது என்று ஒன்றிலாத’ என்ற விளக்கத்தாலும் ஞானப்பிள்ளையார், நமக்கு இறைவன் நினைப்பவர் மனம் கோயிலாக்கொண்டவன் என்பதனையும் கற்றல் கேட்ட லுடையாரால் வணங்கப்படும் கழலுடையான் என்பத அனாதியே ஆணவமலம் நீங்கப்பெற்றவாலறிவின்’ என் னையும், பதனையும் விளக்கிய வாறுகக் கொள்க.

இங்ஙனமாக, இத்திருப்பாசுரம், திருவள்ளுவனாரு டைய அறிவின் முதிர்வாற்கண்ட கடவுட் காட்சியினை, ஞானப்பிள்ளையார் அனுபவமுதிர்வால் அருளிய தெள்ள முதத்திருவாக்கால் தெளியக்கிடப்பது. நம் தமிழ் நாட் டுச் சைவ மக்கள் கடைப்பிடித்துத் தேற வழி செய்கிறது.

திருச்சிற்றம்பலம்.

“ நன்று தீதென் றென்றிலாத நான் மறையோன் கழலே
சென்று பேணி யேத்த நின்ற தேவர் பிரானிடமாம்
குன்றி லொன்றி யோங்க மல்கு குளிர்போழில் சூழ்மலர்
மேல்
தென்றலொன்றி முன்றிலாருந்தென் திருப்பூவணமே.
1 : 64 : 6)

திருச்சிற்றம்பலம்.

# 5

''இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.''

இந்த நடுநிலைத் திருக்குறளில் இறைவன் என்ற சொல்லை எடுத்துக் காட்டியுள்ளார் வள்ளுவர். ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினன், வேண்டுதல் வேண்டாமையிலான், எனக் கூறிவந்த ஆசிரியர், வேறு தொடர் மொழியின்றி இறைவன் என்ற சொல்லால், இங்குத்தான் முதலில் குறிப்பிடுகிறார். மேல், பொறிவாயில் ஐந்தவித்தான், அறவாழியந்தணன், தனக்குவமை இல்லாதான், எண் குணத்தான், எனக் கூறி முடித்து, இறைவன் என்று சுட்டி முடிப்பதும் காணலாம்.

இவ்வாறு, ஆசிரியர், கடவுள் என்ற சொல்லையே காட்டாது, எல்லாவுயிரிலும் தங்கியுள்ளான் என்றபொருளையுடைய இறைவன் என்ற சொல்லையே சிறப்புடைச் சொல்லாகக் காட்டியமை அறிந்தின்புற வேண்டிய ஒன்றாகும். இது பின்னால் விரிக்கப்படும். இறைவன் என்ற சொல், இறு என்றதன் அடியாகப் பிறந்த வினைப் பெயர். இறை எனக் கூறினும் பொருள்படுமாயினும், அவ்வாறே 'இறை என்று வைக்கப்படும்' என்று கையாண்டிருப்பவும், ஆசிரியர் வேண்டுமென்றே, பத்துக் குறளிலும், ஆண்பால் விகுதி புணர்த்தும் இறைவன் என்றே குறிப்பிடுவதும் ஒரு சிறப்பு நோக்கியதாகும். மற்று, இறைவனைக் குறிக்க வந்த மற்றைப் பெயரனைத்தையும், அடை கொடுத்தே உரைத்த ஆசிரியர், இறைவன் என்று குறிப்பிடும் ஈரிடத்

தும் அடைமொழி புணர்த்தாது இறைவன் என்றே குறிப் பிடுதலையும் அறியலாம். இங்ஙனம், எடுத்த பொருளைச் சிறப்பிப்பார் அடை கொடாது உயர்த்துக் காட்டுவது ஒரு முறை என்பதனைக் 'கோங்கு' என்ற சொற்குத் திருக் கோவையார் முதல் பாட்டில், உரை வகுத்த பேராசிரி யர் குறிப்பு விளக்கத்தாலும் உணரலாம். எனவே, இறை வனுடைய பலப்பல நிலைகளிலும் எல்லா உயிர்களிலும், நிலைத்திருக்கும், உயர் நிலையே தலை சிறந்தது என்பது ஆசிரியர் கருத்தாக நாமறிதல் வேண்டும். இதனை மணி வாசகப் பெருமான், சிவ புராணத்து 'இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான்' என உருகிக் காட்டும் உண் மையால் அறிகிறோம்.

இனி, வாலறிவன், மலர்மிசையேகினன், என இறை வனது சிறப்பிலக் கணத்தை உடன்பாட்டு முகத்தாற் கூறிய ஆசிரியர், (வேண்டுதல் வேண்டாமையிலான்) அறியாமை இலான், என எதிர் மறை முகத்தான், கூறி யது, உயிர்கள் அறியாமையுடையன என்பதனை உட் கொண்டதாகும். பேசுவது கடவுள் வாழ்த்தாகையால், உயிர்கள் அறியாமையுடையன என்று கூறி மற்றொன்று விரித்தலாய குற்றத்தின் பாற்படாது இறைவன், வேண்டு தல் வேண்டாமையிலான் என்று கூறுவதால், உயிர்கள், அவையுடையன என்று காட்டுவதாய முறையில் காட்டி னார்.

இக்குறளில், இரண்டு தொடர்கள் சிறப்புடையன. முதலாவதாக, 'இருள் சேர் இருவினை' என்பது. மற் றொன்று 'பொருள்சேர் புகழ்' என்பது. இவ்விரண்டில் 'இருள் சேர் இருவினை' என்பதனை, அறியாமையால் விளையும் இருவினை எனக் கொள்ளல் வேண்டும். இரு வினை யென்பது, முன் குறளில் காட்டிய வேண்டுதல்

வேண்டாமையால் நிகழும் செயல்கள். விருப்பத்தால் நிகழும் நற்செயலும், வெறுப்பால் நிகழும் தீச்செயலும், இருவினையாம். வினைகள், செய்பவன் தனக்கு நன்மை கருதி விரும்பிச் செய்யும் செயலும், வெறுப்பினுல் செய்யும், செயலும் என ஒருவகை, மற்ருென்று, பிறர்க்கு நன்மை பயக்கும் வினையும், பிறர்க்குத் தீமை பயக்கும் வினையும் என மற்ருென்று. இவ்விருவகை வினைகளும், விருப்பு வெறுப்புக்களால் நிகழ்வன என்பதில் தடையில்லை. விருப்பு வெறுப்புக்கள் இரண்டுமே, அறியாமையின் மாற்று வடிவம், அறியாமை, என்பது, இருவகைப்பட்டு ஒன்றை மற்ருென்ருக அறிதலும், இதுவோ அதுவோ என்ற ஐயத்தில் ஆழ்தலும் ஆகிய செயலில் தள்ளும். பயன் விளைக்கும்போது, விபரீத உணர்வாலும், ஐயவுணர்வாலும், துன்ப விளைவே நிகழும். துன்ப விளைவுக்குக் காரணம், அறியாமையின் செயல்களே என்று தெளிய வேண்டும். அதனையே, துன்ப விளைவாகும் என்பதனையறியாது இன்பம் பயக்கும் எனக்கொண்டு செய்யும் விருப்பச் செயலாகிய நல்வினையும், தீமை விளையுமோ என அஞ்சி வெறுப்பினுற் செய்யும் தீச்செயலுமாகிய இரண்டுமே, அறியாமையின் செயல் என்பதனை விளக்கவே, இருள் சேர் இருவினை எனச்சுட்டினுர்.

இனி, இருளினுற் சேரும் இருவினை எனப் பொருள் கொண்டு, (இருள், அறியாமை.) அறியாமையால் உயிர்களைச் சேரும் இருவினை எனக் கொள்ளினும் அமையும். இதனையே, துன்பத்துக்கு ஏதுவாகிய பிறப்பினைத் தரும் இருவினை என மேலோர் பொருள் காட்டினர். நல்வினையும் பிறப்புக்கு ஏது வாகலின் இருள் சேர் இருவினை எனப்பட்டது எனப் பரிமேலழகர் கூறியதும் இதுபற்றியே யாகும். சமய நூல்களில், இருவினையொப்பு எனப்பேசப் படும் பரிபாக நிலையும், நல்வினையையும், தீவினையையும்

அவற்றின் விளைவாகிய இன்ப துன்பங்களையும் சமமாகக் கருதும், நிர்விகப்ப நிலையாகும் என்பதும் காணலாம். எனவே வினையினுல் விளைவது நன்மையோ, தீமையோ எதுவாயினும், பிறப்புக்கு ஏதுவாகலின் அச்செயல்கள் அனைத்தும், அறியாமையாம் ஆணவத்தின் செயல் என்பதனைக் குறிப்பிடவே 'இருள்சேர் இருவினை' என வள்ளுவப் பெருந்தகையால் விளக்கப்பட்டது. எனக் கொள்ளலாம். இத்தொடரால், இருவினை என, எடுத்துக் காட்டிய பகுதி, உயிர்கட்கு முன்னைய குறளில், ஆணவ மாம், மூலமலமுடைமை குறிப்பிட்டவாறுபோல, அம்மூல மலத்தால் விளையும் இருவினையுடைமையும் காட்டிய வாறும். எனவே, உயிர்கள், ஆணவம், கன்மம், என இருமலமுடைமையும், இதுவரை குறிப்பிட்டவாறுங் கண்டு கொள்க.

இருவினையும் என்ற முற்றும்மையால், வினை யிரண் டென்பதும் அவற்றுக்குமேல் இல்லை என்பதும் குறித்த வாருயிற்று. 'சேரா' என்பதனுல் அவன் செய்யும் செயல்கள் அனைத்தும், இறைபணியாய் நின்று செய்த வனைப்பயன் வந்து சார்தல்இலை, என்பது பெறப்படுகிறது. இருள் சேர்ந்த இருவினை, என்றதனுல் முன்னைப் பிறவி களில் செய்தவினைப் பயன்களும், 'சேரா' என்ற பொரு ளோடு எடுத்த பிறவியிற்செய்யும் வினைப் பயன்களும் செய்தவனைச் சார்தல் இல்லை என்பதும் தெளியப்படும். எனவே, சஞ்சிதமாகிய முன்னைய கருமங்களும், ஆகாமிய மாகிய எடுத்த பிறவியிற் செய்யும் வினைப்பயன்களும், செய்தவனைச் சார்தல் இல. முகந்துகொண்ட, பிராரத்துவ வினைப்பயன்களே எஞ்சி நிற்பன. அவையும், அவனு டைய மனம் வாக்குக் காயங்கள் இறைவனுடைய பொருள்சேர் புகழில் நிலைத்து நிற்பதால் பயன் விளையா மல் கழிகின்றன. ஆகவே, சஞ்சிதம், பிராரத்வம்,

ஆகாமியம் என்ற மூன்று பிரிவினை உடைய இருவினைப் பயன்களும், இறைவனுடைய பொருள்சேர் புகழினில் நிலைத்தவனை வந்துசாரா என்பது பெறப்பட்டது. இனி, 'பொருள் சேர் புகழ்' என்பது அறியவேண்டி நிற்கிறது. புகழ் என்பது உதவி செய்தவனை உயர்த்திப் பேசுவது. இதற்கு மறுதலை 'இகழ்'. இகழ் என்பது தீமை செய்த வனைத் தாழ்த்திப் பேசுவது. 'பொருள் சேர் புகழ்' என்பது உண்மையான, நிலைத்த உதவியைச் செய்தவனை உயர்த்திப் பேசுவது என்று பொருள்படுகிறது. எனவே, உதவி பொய்யான உதவி என்றும், அப்போதைக்கு நன்மைதரும் உதவி என்றும், பிரிவு படுகிறது. உதவி யைப்பற்றித் திருவள்ளுவனூர் மூன்ருகப் பிரித்துக் கைம் மாறு கருதா உதவி, காலத்தினுற் செய்த உதவி, பயன்தூக்காது செய்த உதவி எனப் கூறுவதை நாம் அறிவோம்.

ஓர் உயிர் பசியினுலோ, நோயினுலோ வருந்தும் போது காணுகின்ற ஒருவன் பசிக்கு உணவும், நோய்க்கு மருந்தும் கொடுத்து உதவி செய்கிருன். இஃது உயிர் இரக்கத்தால் செய்யும் அப்போதைக்கு ஏற்ற நன்றி ஆகும். ஓர் உயிர் ஆபத்தில் சிக்கித் தன்னைப் பாதுகாத் துக் கொள்ள முடியாதபடி துடிக்கிறது. அதைக்கண்ட ஒருவன் அவ்வாபத்தினின்றும், அதனைக் காக்கிருன். அது பயன் கருதாது செய்த உதவி. மேற்குறிப்பிட்ட உதவிகள் அனைத்தும் நிலைத்தன ஆகா. பின்னும் பசியும், நோயும், மரணமும் அவ்வுயிர்களை வந்து சார் கின்றன. ஆனுல், எவன் ஒருவன் என்றைக்கும், பசி யும், நோயும், மரணமும் உண்டாகாதபடி நிலைத்த உண்மையான உதவியைச் செய்கிருனே, அவனைப் பற்றிப்பேசும், புகழ்தான், உயர்வுதான் உண்மையான புகழ் ஆகும். பிறக்கின்ற உயிர்கள் அனைத்தும் உட

லோடுகூடி வாழ்கின்றன, ஆகையால் உடலுக்குரிய பசி, பிணி, மரணம் என்ற மூன்றும் இயல்பாக உள்ளன. எப்பொழுது பிறப்பு நீங்குகிறதோ, இனிப்பிறவா நிலை வருகிறதோ அப்பொழுதுதான் அவ்வுடலோடு வாழும் உயிருக்கு, அப்பசி, பிணி, மரணங்களால் ஆகிய துன்பமும் நீங்கும். ஆகவே, எவன் பிறவிப் பிணிக்கு மருந்தாக நின்று, உதவி செய்கிருனே அவனைப் பற்றிப் பேசும் உயர்வே 'பொருள்சேர் புகழெனத்' திருவள்ளுவ ரால் சிறப்பித்துக் கூறப்பட்டது. உதவி செய்பவன், உதவியைப் பெறுகின்றவனேடு உடன் உறைபவனுய் இருக்கவேண்டும். அப்பொழுதுதானே அவனுடைய குறையை அறியமுடியும். யார் யார், என்ன என்ன குறை உடையார், அவர்கள் வேண்டும் குறையைப் போக்குவது எப்படி, அவரவர்கள் என்ன தகுதி உடைய வர்கள் என்பன ஆதிய அனைத்தையும் அறியவேண்டு மானுல், அக்குறை உடையானேடு உடன் உறைந்தா லன்றி அறியமுடியாதன்றே; அதனுல் தானே அனுபவ மூர்த்திகளாகிய திருநாவுக்கரசர் பெருமான், "வேண்டு வார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்று அருளி ஞர்கள். அழுது அடி அடைந்த அன்பராகிய மணிவா சகப் பெருமான் "வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதும் தருவோய் நீ" என்று அருளினுர்கள். இதனுல் உதவி செய்பவன் உடனிருந்து, உதவுபவனுக இருக்க வேண்டும், அறிந்து செய்பவனுகவும் இருக்க வேண்டும். மேலும் அவ்வுதவியும் உண்மையான நிலைத்த உதவியாகவும் இருக்க வேண்டும். அவ்வாறு உதவி செய்பவனுடைய புகழே 'பொருள் சேர் புகழ்' எனப்படும். அவ்வாறு உதவி செய்பவனே, எல்லா உயிர்களிலும் நீக்கமற நிறைந்து தங்கிஇருப்பவனே 'இறைவன்' எனப் பெயர் பெறுகிருன். இவ்வரிய கருத்துக்களைத் திருவள்ளு வனுர் ஒருசேர 'இறைவன் பொருள்சேர் புகழ்' என

முடித்துக் கொடுக்கிருர். இவ்வரிய தொடரால் உயிர்கள் தோறும் தங்கி நிறைந்து நிற்கின்ற இறைவன், அந்தந்த உயிர்களினுடைய நிலைக்கு ஏற்ப உதவி செய்கிருன் என்பது தெளிவாகிறது. எந்த உயிர் தன் நிலை அறிந்து, தான் பெறவேண்டிய உதவி இன்னது என்று அறிந்து இவ்வுதவியைச் செய்பவன், இறைவனே என்று உணர்ந்து, இதுபோது பெற்றுள்ள பொருள்களும் அவனுடையனவே என்று நினைந்து அவன் உதவியினு லேயே இப்பசி, பிணி, மூப்புச் சாக்காட்டுக்குரிய துன்பப் பிறவியினின்றும் நீங்கலாம், நீங்கவேண்டும் என்று இடைவிடாது அவன் உதவியையே நினைந்தும் அரற்றி யும் வருகிறதோ அதுதான் 'பொருள்சேர் புகழினைப் புரிதலாகும்'. பெற்ற உதவியை நினைத்தும், பெற வேண்டிய உதவிக்குக் குறை இரந்தும் உருகி உருகி அழுது அரற்றுவதே புரிதல் ஆகும். இதனைப் பரிமே லழகர் 'இடைவிடாது பேசுதல்' என்று கூறுவார். திருநாவுக்கரசர் அலருநில்லே என்றும், போற்ருநில்லே என்றும் புனைந்துரைப்பார். திருவள்ளுவனுர் இறைவ னுடைய திருவருளால் தான்பெற்றுள்ள 'தனு' கரண, புவன போகங்களாகிய உதவியை நினைந்தும் இனி இவற்றைப் பெற்றும் பசி, பிணி, மூப்புத் துன்பங்களால் வேதனைப்பட்டு இறப்பதனுக்கு என்கடவோம் என்று அஞ்சி இறவா நிலைபெறுதற்கும், பிறவாப் பெருவாழ்வு வாழ்தற்கும் அழுது அரற்றுவதும் ஆகிய நிலையினைப் பெற்ருரைப் 'பொருள்சேர் புகழ் புரிந்தார்' எனக்கூறினுர். அந்நிலையினைப் பெற்றவர்களிடத்து, அறியாமையால் உண்டாகிற இருவினைப் பயன்களும் சாரா என்பது கூறியவாருகும். இவ்வரிய அறிவு ஆராய்ச்சிப் பயனுகிய திருக்குறட் கருத்தினை அருளொடு ஞானம் கலந்த அமுது உண்டு தேக்கிய பிள்ளைப் பெருமானுகிய ஞான

சம்பந்தப்பிள்ளையார் கூறும், செந்தமிழ்ப் பயனும் திருப் பாசுரத்தில் இனிக் கண்டுகளிப்போம்.

திருச்சிற்றம்பலம்

''வாரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம் மீசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே.'' (1:25:2)

திருச்சிற்றம்பலம்

என்பது திருப்பாசுரம். சிவபிரான் மூன்று நிலைகளை உடையவன் என்பதும், அதற்கு அப்பாற்பட்டவன் என்பதும் சாத்திரங்களால் பேசப்படும் உண்மை. இறை எங்குமாய் நிறைந்து நிற்கும் நிலையில் பரசிவம் என்ற பெயரைப் பெருகிறது. அது பிரமம் எனவும் சொல்லப்படும். அப் பரம்பொருள் உயிர்கட்கு இரங்கி வரும்பொழுது அதனுடைய அருளாற்றலோடு கூடி 'பரை' என்ற சக்தியோடு விளங்கும்பொழுது 'சிவம்' என்ற பெயரை அடைகிறது. என்றாலும் அறிவும் அருளுமாய் நிற்கிற நிலையில் தனக்கென ஓர் உருவமின்மையால் அது 'அருவம்' எனப்படும். அந்தப் பொருள் இன்னும் கீழிறங்கும்பொழுது ஆற்றல் மிகுதியும் பெற்று, உயிர்கட்குப் பயன்படும் முகத்தால் சதாசிவம் எனப்பெயர் பெற்று அருவுருவாந் தன்மையாகிய நிலை அடைகிறது. மேலும் அதனினும் கீழ்இறங்கி உயிர்கட்குத் தனு கரண புவன போகங்களை அளிக்கும் நிலை அடையும்பொழுது கர சரண ஆதி அவயங்களோடு கூடிய அம்மையப்பர் திருமேனி பெறுகிறது. அதனை 'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக' என்ற சாத்திரத் திருவாக்காலும் "அம்மையே அப்பா" "அம்மை நீ அப்பன் நீ" என்ற அன்புத் திருவாக்குகளினாலும் அறியலாம். உயிர்கள் திருவருளைப்பெற்று உய்வதற்கு இத்தனை நிலைகளில்

இறைவனுகிய ஒரு பொருளே இறங்கி இறங்கி வருகிறது என்று சாத்திரங்களும் தோத்திரங்களும் கூறுகினறன. இதனைப் பின்வந்த சான்ருேர் ஒருவர் மிகத்தெளிவாக ''யாராலும் அளவிடுதற்கு அரிய உனை ஒரு கரத்து நீராலும் மலராலும் நெஞ்சுருகப் பணலாமே'' என்று காட்டுகிருர். அளத்தற்கு அரிய அளவிலாப் பெருமானை அறிவெதப்படி, அனுபவிப்பது எப்படி என்றபொழுது அறிந்து அனுபவித்த சான்ருேர்கள்கூறும், அனுபவச் சொற்களால்தான் நாம் தெளிவு பெறவேண்டியவர்களாய் இருக்கிருேம். காணமுடியாத பொருளைக்கண்டு, காட்ட முடியாத பொருளைக் காட்ட, சிவாநந்தத் தெள்ளமுதம் உண்ட திருவாயால்மறித்து நம்செவி அமுதாய் வார்க்கும் திருஞான சம்பந்தருடைய திருவாச்கு நமக்கு குரு வசன மாய்த் துணை செய்வதாகும்.

அவர்கள் தம்மனேர்பால் வைத்த கருணையால் அரு ளும் பொழுது யாவர்க்கும் மேலாம் அளவிலாப் பெம் மானை நம்மை ஈன்றெடுத்த அம்மை அப்பனைக் காட்டி அருளுகிருர்கள். அதுதான் வாரார் கொங்கை மாதோர் பாகமாய் மேவிய ஈசன் என்பது. இந்தத் தோற்றம் அவர்கள் காணுகின்ற தோற்றம், நமக்குக் காட்டுகின்ற தோற்றம். நாம் திருக்கோயிலுக்குச் செல்லுகிருேம். அங்கு உருவங்களைப் பார்க்கிருேம். நமக்குச் சிலை வடிவமாகவே காணப்படுகிறது. ஆனல் ஞான சம்பந்தப் பிள்ளையாருக்கு அதே சிவலிங்கத் திருமேனி வாரார் கொங்கை மாது ஓர் பாகமாய் மேவின ஈசனைக் காட்சி யளிக்கிறது. என்ன காண்பதில் உள்ள வேற்றுமை? உள்ளம், ஒரு பொருளைக் காணும் பொழுது எப்படி ஊன்றி நின்று காட்டுகிறதோ அப்படித்தான் அந்தக் கண் காணும். 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல' என்பது சாத்திரம். ஞான சம்பந்தருடைய மனம்

முதலாகிய கருவி கரணங்கள் பசுபாச நீக்கம் பெற்றுப் பதிகரணமாக அனைத்தையும் அவன் அருட்டுணை கொண்டு காணும் காட்சி. ஆகவே அவர் காட்சிக்கு அந் தத் திருமேனி அம்மையப்பர் வடிவமாய்க் காட்சி அளிக் கிறது. இவ்வாறே நாமும் காணவேண்டும் என்பதற்காகத் திருவருட் பெருக்கால் நமக்கு இடம் சுட்டிக் காட்டுகிறார். எங்கே? 'சீரார் செம்பொன் பள்ளி' என்பது இடம். 'சீரார்' சிறப்பு நிறைந்த செம்பொன் பள்ளி. ஒரு ஊருக்குச் சிறப்பு என்ன? ஊருக்கு மூன்று சிறப்புகள் வேண்டும். ஒன்று, நீர்வள நிலவளங்கள். இரண்டா வது அறிவுடைச் சான்றோர் பலர் இருப்பது, மூன்றாவது தெய்வத்திரு நிலையங்களாகிய திருக்கோயில் இருப்பது. ஏன் இம்மூன்று வேண்டும்? நல்ல உணவு உண்டு உடுத்து வாழ்வதற்கு வளமான இடம் வேண்டும். நல்லறிவு பெற்று வளர்வதற்குச் சான்றோர் வேண்டும். அரனடிக் அன்பு பேணித் திருத்தொண்டுகளைச் செய்யத் திருக்கோயில் வேண்டும். ஆகையால் செம்பொன் பள்ளியைச் சிறப்பிக்க வந்த ஞான சம்பந்தர் இம்மூன்றி னாலும் சிறப்புப் பெற்றது என்பதனை 'சீரார் செம்பொன் பள்ளி' என்பதனால் குறிப்பிடுகிறார். இனி, அச்செம் பொன் பள்ளியில் எழுந்தருளி உள்ள இறைவனை மாது ஓர் பாகமாய் மேவிய ஈசன் என்று குறிப்பிடுகிறார். இந்தக் குறிப்பு இறைவன் அருளினால் உயிர்கள் அனைத்து வித நலனையும் பெற உதவுவதற்கு இரங்கி வந்து அம்மை யப்பனாய்க் காட்சி அளிக்கிறான் என்று அருளியதாகும். மேல் அந்த இறைவன் 'ஏரார் புரிபுன் சடையெம் ஈசன், என்று பேசப்படுகிறது. நம்மனோர்க்கு உதவுவதற்கு வந்த அம்மையப்பன் ஏரார் புரிபுன் சடையீசனே என்று அருளியதாகும். 'ஏரார் புரிபுன் சடை' என்பது அழகு நிறைந்த முறுக்கி விட்டுத் தொங்குகிற சடை என்று பொருளாகும். சிவபிரான் கங்கையைத் தரிக்கத் தூக்கிக்

காட்டின சடையும் தவக்கோலம் பூண முறுக்கித் தொங்க விட்ட சடையும் உடையனாய் இருவித நிலையில் காட்சி அளிப்பான். இதன் பொருள் மாதொரு பாகனாய் போக மூர்த்தியாகவும் ஏரார் புரிபுன் சடையனாய் யோக மூர்த்தியாகவும் காட்சி அளிப்பவன் ஈசன் ஒருவனே என்பதாகும். போகம் வேண்டுவார்க்குப் போகத்தையும், யோகம் வேண்டுவார்க்கு ஞானத்தையும் அளிப்பவன் அவன் ஒருவனே என்பதனை 'மாதோர் பாகம் மேவிய ஈசன்' என்றும் 'ஏரார் புரிபுன் சடை ஈசன்' என்றும் குறிப்பிடுவதனால் அறியக் கிடக்கிறது. எனவே இறைவன் உயிர்கட்கு வேண்டிய வேண்டியாங்கு ஈயும் நிலையில் உயிர்க்குயிராய் எழுந்தருளி இருக்கிறான் என்பதனை உண்மைப் படுத்திய வாறாகும். இனி, அச்சிவனைச் சேராதவர் மேல் வினைகள் சேரும் என்பது பிள்ளையார் அருள் வாக்கு. இது திருவள்ளுவனார் கூறிய 'பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு இருள் சேர் இருவினையும் சேரா' என்ற திருக்குறளை உடன் பாட்டு முகத்தால் அருமை தோன்ற விரித்தவாறு ஆகும். இருவினை என்பதனை வினைகள் என்ற பன்மையால் கூறி 'சேரா' என்ற எதிர்மறை வினையைச் 'சேரும்' என்ற உடன் பாட்டு முகத்தால் கூறியது. அடுத்தது இறைவன் புகழ் புரிந்தார்' என்ற உடன் பாட்டினை, ஈசனைச் சேராதவர் என எதிர்மறை முகத்தால் கூறியது. ஈசனைச் சேருதலின் அருமைப்பாடு தோன்ற நிறுத்தியவாறும். ஈசன் என்ற சொல் இறைவன் என்ற திருவள்ளுவர் கருத்தினை வடமொழிப் பெயரால் விளங்க உரைத்தது. ஈசனைச் சேராதவர் வினைகளைச் சேர்ந்தார் ஆவர். ஈசனைச் சேர்ந்தவரை வினைகள் சேரா எனப்பொருள் செய்து திருக்குறளும் திருமொழியும் ஒன்று படுவதை நாம் உணரலாம். இதனை, மற்றொரு திருப்பாசுரத்தில்.

"எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர்கடவுள்
என்று ஏத்திச்
சிந்தை செய்பவர்க்கு அல்லால் சென்று கை
கூடுவது அன்றால்
கந்த மாமலர் உந்தி கடும்புனல் நிவாமல்கு
கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள்
தம் அருளே."

என்ற இடத்தில் குறிப்பிடுவதனாலும் நாம் அறிய வேண்டும். இன்னும் சேர்தல் என்ற சொல்லுக்கு முன்னே கூறிய உரையும் விரித்துக் கொள்ளல் வேண்டும். எனவே அடிகள் இத்திருப்பாசுரத்தில் இடை விடாது சிந்தித்து இறைவனை வழிபடுபவர்களை வினை சேரா என்றும், அங்ஙனம் இறைவனுடைய உண்மைப் புகழினைச் சிந்தித்து ஏத்தாதவர்களுக்குத் திருவருள் கூடுவது இன்று ஆகையால் வினைகள் வந்து தாமே சேரும் என்றும் கூறிய வாறாகக் கொள்வோமாக. இவ்வைந்தாம் திருக்குறள் கடவுள்வாழ்த்தில் நடு நின்று முன்னும் பின்னும் தொடர்புடைய தாய்ச் செல்வதனை நாம் உணர்ந்தால் பிள்ளையாருடைய திருவாக்கில் பல இடங்களில் வினை நீக்கத்தின் அழகினைக் கூறும் மிகையால் அறியலாம். திருக்கோயில் பதிகம் முழுவதும் இக்குறட் கருத்தினையே விளங்கச் செய்து கொண்டு போவதை ஞானசம்பந்தப் பிள்ளையாருடைய திருவாக்கில் நாம் அறிவோம். இவ்வாறு, திருவள்ளுவர் திருமொழியும் திருஞானசம்பந்தர் அருள் மொழியும் நமக்கு அருளும் அறிவுமாய் வாழ்வுக்குத் துணை செய்கின்றன என்று கடைபிடிப்போமாக.

திருச்சிற்றம்பலம்

"வரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம் ஈசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே"

(திருச்சிற்றம்பலம்)

# 6

''பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார்'

இறைவன் அருள் செய்யும் முறை ஈண்டு விரிக்கப் படும். இறைவன் உயிர்கட்குத் தனுகரணபுவன போகங்களைக் கொடுத்து இருவினைப் பயன்களைத் துய்ப்பித்து வினைப்பாகம் ஏற்பட்டபொழுது திருவருட்பதிவால் சிவ ஞானம் பெற்றுத் திருவடிப்பேற்றை அடையும்படிச் செய்கிருன் என்பது சமய நூல் துணிபுகள். அவற்றுள், ஈண்டு எடுத்துக் கொண்டது இறைவனுடைய நேரிடையான உதவிகளுள் எல்லா உயிர்க்கும் உரிய வளர்ச்சிக்குக் காரணமான பொறியும், புலனும், உடைய உடம்பையும், அதன் வழி ஒழுகும் ஒழுக்க நெறியையும் ஆகும். உடம்பு பொறி புலன்களை உடையது. பொறி என்பது அறிகருவியாய் உடம்பில் புறக்கருவியாய் உள்ளது. அக் கருவி ஐந்து. மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இதனை அறி கருவியென்றும், இந்திரியம் என்றும் பொறி என்றும் கூறுவர். முன்னதாக இவ்வைந்தும் உடைய பிறவியே உயர் பிறவி எனப்படும். இவ்வைந்தில் ஒன்று குறையினும், பிறவி முற்றுப் பெற்றதாகாது. ஏன் ? உலகத் தோற்றம் ஐம்பெரும் பூதங்களால் ஆனது. ஐம் பெரும் பூதங்கள் என்பன, நிலம், நீர், தீ, காற்று விண் என்பன. இவை உலகமாய்க் காட்சியளிக்கின்றன. இவற்றின் சேர்க்கையே கூட்டுறவே ஜட உலகம். இவற்ருேடு உயிர் கூடும்பொழுது இவற்றின் மாற்றத்தால் உடல் அமைகின்றது. உடலிலும், ஐம்பெரும் பூதங்களி

னுடைய மாற்ற நிலைகள் உள்ளன. நிலம், நீர், தீ, காற்று, விண் என்ற ஐந்தும் உயிர்க்கூட்டுறவின் போது மாற்ற நிலையையும், நுண்ணிய நிலையையும் அடையும் இயல்புடையன.

நிலம், வலிதாய் மணம் என்ற குணத்தை உடையதாய் நிற்கும். நீர், தண்ணிதாய் சுவையாம் குணம் உடையது. நெருப்பு சூடு உடையதாய் ஒளிக்குணம் உடையது. காற்று அசைவதாய் உணர்ச்சியாகியஊற்றினை உடையது. விண் என்பது பரந்து பட்டதாய் ஒலி என்ற குணம் உடையது. குணம் குணியிலிருந்து வெளிப்படுமே அன்றித் தனித்துக் காண முடியாது. ஐம்பெரும் பூதங்களின் இயல் பினை மேலே காட்டிய முறைப்படி, அதனுடைய மாற்றமாகிய உடலிலும் காணவேண்டும். அப்பொழுது தான் அப்பெரும் பொருள்களின் மாற்றம் என்பது உண்மைப் படும். நாம் எடுத்த உடலில் அந்த உண்மையைக் காண் போம். செவிகள் ஓசையை அறிவதையும், காற்றினுல் மெய்யுணர்ச்சி பெறுதலையும், கண் ஒளியைப் பற்றுதலையும், நாக்குச்சுவை அறிதலையும், மூக்கு மணம் முகர்தலையும் அறிகிறோம். எனவே ஐம்பெரும் பூதங்களின் குணங்களைப்பற்றுவதற்குப், பற்றி அறிவதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து அறிகருவிகளும் உள்ளமை இவ்வுடலில் காண்கிறோம். அதனுல்தான், நிறைநிலை பெற்ற ஐம்பூதங்களைப்பற்றுவதாகிய பொறிகளைத் திருவள்ளுவனுர் முன்னே குறிப்பிட்டு விளக்குவான் தொடங்கி 'பொறிவாயில் ஐந்து' எனக்கூறுவாருயினர். பொறி என்பன கருவிகள். அக்கருவிகள் வழியாகப்பற்றும் சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் பொறிவாயில் ஐந்து. இந்த உடம்பில் உயிரானது மனம் முதலாகிய உட்கருவிகளைத் துணையாகக்கொண்டு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற அறிகருவிகளின் வழியாகச்சென்று

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐம்பெரும் பூதங்களின் குணங்களாம் புலன்களைப்பற்றி, இன்ப துன் பங்களாகிய சுகதுக்கங்களை விருப்பு வெறுப்போடு இரு வினைப் பயன்களாகத் துய்க்கின்றன. என்பது பொறி வாயில் ஐந்து என்பதனுல் குறிப்பிட்டதாகும். இங்ஙனம் குறிப்பிட்டதனுல் உயிர்கள் எண்ணில என்பதும், அவை தம்தம் நிலைக்கு ஏற்ப இவ்வுலகத்தில் உடலினைப் பெறு கின்றன என்பதும், அவற்றுள் ஐம்புலன்களையும் ஆரத் துய்க்கும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம் பொறிகளோடு கூடிய உடம்பை எடுத்த உயிர்களே முழு நிலை பெற்றன என்பதும் கிடைத்தன. இதனுல் பொறி ஐந்தும் புலன் ஐந்தும் காட்டி உலகத்தின் விரிவு நிலை விளக்கியவாறும் நுண்ணிதாய் உணரக் கிடைக்கும். 'ஆதிபகவன் முதற்றே உலகு' என எடுத்துக்கொண்ட உலகமாகிய பிண்டப்பொருள் உயிர்கட்கு, கற்று இறை வன் உண்டென அறிந்து தொழுது, அவன் நெஞ்சத் தாமரையான் என நினைந்து உருகி, விருப்பு வெறுப்புக் களாகிய அறியாமையினது செயலாம் இருவினைக் கட்டி னின்றும் நீங்க இறைவனடிச்சார்தற்குப்பெற்ற உலகம் விரியும் நிலையில் பொறி ஐந்தும் புலன் ஐந்தும் உடைய உடம்பாகிய உலகமாய் விரிகிறது என்பதனைப் பொறி வாயில் ஐந்து என ஈண்டுத் திருவள்ளுவனுர் விரித்துக் கூறினுர். நிற்க,

இறைவன் உயிர்கட்கு இவ்வுபகாரத்தை ஏன் செய் கிருன்? என்பது நீண்டு வருகின்ற ஒருவினு. உலகப் படைப்பில் மனிதன், தோன்றிய காலம் முதற்கொண்டே வளர்ச்சி பெற்று வருகிருன் என்பது யாவரும் அறிந்த உண்மை. ஒலிக்குறிப்பை மொழியாக மாற்றிப்பேச முற் பட்டது முதற்கொண்டு, இன்றைய வரையிலும் அம்மனித

வளர்ச்சி தங்கு தடையின்றி, வளர்ந்து கொண்டே தான் வருகிறது. உலகத்தை மனிதன் தான் அனுபவித் தற்குரிய அரும்பொருட் சாதனமாய் அமைத்துக்கொண் டது போல வேறு எந்த உடலோடு கூடிய உயிரும் அமைத்துக்கொள்ள முடியவில்லை. ஏன் எனில் இறைவ னுடைய படைப்பில் முழுவளர்ச்சியும் பெற்ற உடலொடு கூடிய உயிர் மனித உடலில் வாழும் உயிரே ஆகும். அதனுல்தான் அம்மனிதன் அனைத்தையும் செய்யலாம். அனைத்தையும் அறியலாம் அனைத்தையும் அடையலாம் என்று மேலும் மேலும் வளர்ந்துகொண்டே இருக்கிறுன். ஆனுல் அவன் செய்தது சிறியதாகவும் அறிந்தது சிறிதாக வும், அடைந்ததும் சிறியதாகவும், உலகப் படைப்பின் வியப்பினை அறியும் பொழுது ஆகிவிடுகின்றன. ' ஆழாழி கரையின்றி நிற்பதும் அண்ட கோடிகளெலாம் வியத்தகு விண்வெளியில் தாழாமல் நிலைநிற்பதும், அவன் அறிவுக் கண் முன் காணும் பொழுதுதான் அறிந்ததும், தான் அறி யக்கூடியதும், தான் செய்ததும், தான் செய்யக்கூடியதும் தான் அடைந்ததும், தான் அடையக்கூடியதும் மிக மிகச் சிறிதாய்ப் போய் விடுவதைத் தானே தன் நுண்ணுர்வால் அறிகிறுன், காண்கிறுன். அப்போது அவன் இவ்வியத் தகு உலகப்படைப்பின் நோக்கம் என்ன? என்று மறித்து உணர முற்படுகிறுன். அப்படி முற்படும் பொழுது பலப் பல வினுக்கள் எழுகின்றன, அவற்றுள் சில, இந்த உலகம் தானே தோன்றி இருக்க முடியுமா அல்லது நான் யார், நான் என்று கருதுகிற இந்த உயிர் உள்பொருளா இல்பொருளா, இவ்வாறு கருதுவதற்கு முற்படுகிற அறிவு தான் என்ன என்று மேலும் மேலும் அவனுல் அறிந்து கொள்ள முடியாத, அவன் அறிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிற ஐய வினுக்களும், அறியா வினுக் களும் பலவாய் எழுகின்றன. இதனை மறித்து உணர்ந்த மணிவாசகப்பெருமான் ஓரிடத்தில் குறிப்பிடுகிருர்.

'நானார் என் உள்ளமார் ஞானங்களார் என்னையாரறிவார்' என்று. சொற்குறுதிக்கு மேலோராகிய அப்ப மூர்த்திகள் 'வந்தவாறு எங்ஙனே போ மாறு ஏதோ மாயமாம்' எனக் காட்டி நம்மை மறித்து உணரும்படிச் செய்கிறார். இவ் வாறு அறியலாம், செய்யலாம், அடையலாம் என்று ஓடு கின்ற பலமுகப்பட்ட புறத்தே ஓடும் போக்கினைத் திருப்பி 'நானார் என் உள்ளமார் ஞானங்களார்' எனவும், 'வந்த வாறு எங்ஙனே போமாறு ஏதோ' எனவும் மறித்துக் காணும் அகமுக அறிவு, உள்ளுணர்ச்சி, உற்றுநோக்கு பெறுவது எப்போது? எப்படி? யாரால்? என்ற வினாக் களும் எழத்தான் செய்கின்றன. புறத்தில் ஓடுகின்ற ஐம் புலன்களைத் துய்க்கக் கருதுகிற ஐம்பொறி வழிச் செல்லும் அவா அறியாமையாலானது. ஏன்? அவ்வாறு ஓடின பொழுது அல்வாறு அவாவின பொழுது அனைத்தையும், அடையவோ அறியவோ, அனுபவிக்கவோ அவனால் முடிவதில்லை. ஒவ்வோரிடத்திலும் தடைப்பட்டுத்தடைப் பட்டு, அடைய முடியாது, அறிய முடியாது, அனுபவிக்க முடியாது துன்புறுகிறான். சிறிது பெற்றான் ஆயினும் பெற்றதைக்கொண்டு மகிழ்வதும் இல்லை. பெறாததைப், பெற முடியாததைப், பெறவேண்டும் என்று மனம் விரிந்து அலைகிறது. அதனால் தானே வள்ளுவப் பெருந்தகை அவாவின் இலக்கணத்தை வரையறுத்த பொழுது எதனா லும் நிறைவு பெறாத இயல்பினை உடையது என்று குறிப் பிடுவாராய் 'ஆரா இயற்கை அவா' எனக்கூறி அருளி னார். ஆகையால், புறத்தே ஓடும் புல்லுணர்வினும், அகமுகக் காட்சியாகிய உலகம் ஏன்? உடம்பு ஏன்? என்ற உள்ளுணர்ச்சி அவாவினை அடக்கிக் கொள்வதற் கும், உண்மையை அறிவதற்கும் உயர்ந்த துணையாகும். ஆகையால் உலகத்தில் உடலொடு கூடிய உயிர்கள், அவற்றுள்ளும், மக்களுயிர்கள் இரு திறப்படுகின்றன. முதலாவதாக, உலகத்தையும் பெற்ற உடம்பையும் தம்

முடையனவாய்க் கருதி இன்பம் அனுபவிக்கக் கருவிகரண சேர்க்கைகளால் அவாவெனும் அல்லலுட்பட்டு இருவினை யுள் மூழ்கிப் பொறி புலன்களின் வழியாகத்துன்பப்படுவன. மற்றெரு பிரிவு, இவையனைத்தும் இறைவனுடைய திரு வருளைப்பெறுவதற்கு இறைவனுல் அளிக்கப்பட்ட உத விப்பொருள்கள் எனமறித்து உணர்ந்து பொறிபுலன்களின் வழி ஓடாது அகமுகக் காட்சியில் ஈடுபட்டு நான் யார்? என் உள்ளமார்? நான் வந்தது ஏன்? எங்குப்போய்ச் சேரவேண்டும்? என்ற உண்மை ஆராய்ச்சியின் வழியாக நற்காட்சி, நற்சிந்தனை நல்தெளிவு என்ற படிகளில் ஏறி இறைபணி நிற்றலுக்கு வழிப்படுவன.

இறைவன் படைப்பைப்பற்றி நாம் அறிய முற்படும் பொழுது அவை அனைத்தும் ஒரு ஒழுங்கு நெறிப்பட்டன வாய்க்காணப்படும். அந்த ஒழுங்குநெறி ஜடம், சத்து என்ற உலகம் உயிராகிய இரண்டுக்கும் பொருந்தும். உலகப்படைப்பும் ஓர் ஒழுங்கு நெறியை உடையது. அவ்வுலகத்தைப் பயன்படுத்திக்கொள்ள அவ்வுலகத்தில் தோன்றும் உயிர்க்கூட்டங்களும் ஓர் ஒழுங்கு நெறிக்கு உட்பட்டன. உலகம் ஜடப்பொருள். அவை, தமக்கென அறிவு இன்மையால் படைத்தோன் குறிப்பின் வழிப் பயன்படுவதாய் நிற்கிறது. ஆனுல், உயிர்கள் சிறிது அறிவுடையன ஆகையால் பெற்ற உலகத்தையும் உடம் பையும் கொண்டு பயன்படுத்திக் கொள்வனவாய் அமையவேண்டும். உயிர்களின் அறிவு சிறிதாகையா னும், தாமே உணரும் தன்மை இன்மையானும் அப் பயன்படும் பொருள்களைப் பயன்படுத்தும் முறை தெரியாது அறியாமையால் மாறி அழிவுக்குரிய கேடான தீச்செயல் களிலும் இறங்கிவிடுகின்றன. கொடுத்தவனுடைய குறிப்பு உணர்ந்தாலன்றி, கொடுத்தவனுடைய குறிப் பினைத்தாமே உணரும் ஆற்றலின்மையால் தக்கான் ஒரு

வன் உணர்த்த உணர்ந்தாலன்றி அவ்வுயிர்கள் நன்னெறிப்படரும் வாய்ப்பினைப் பெரு. அவ்வுயிர்கள் ஒழுக வேண்டிய முறைதான் என்ன? அவ்வுயிர்கட்கு இறைவனல் படைக்கப்பட்ட உலகமும் அவனல் கொடுக்கப் பட்ட உடல் முதலாகிய கருவிகளும் பயன் படவேண்டிய முறைதான் என்ன? அவற்றை உயிர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய முறைதான் என்ன? என்பவற்றை எடுத்து மொழிய வேண்டியவனும் மொழியக்கூடிய ஆற்றலுடையவனும், அவ்வுலக உடல்களைப் படைத்த இறைவனே ஆகும். உலகப் படைப்பின் நோக்கமும் அவ்வுலகத்தில் உயிர்கள் தோன்றி வளரும் நோக்கமும், படைத்த இறைவனலேயே கூறப்படவேண்டும். அதனைத் தான் வேதம் ஆகமம் என்ற இரண்டும் இறைவனல் பேசப்பட்டன என்று கூறப்படுவது. வேதம் என்பது பொது நூல். உயிர்கள் உடலொடு தோன்றி உலகத்தில் செய்யக்] கடவனவற்றைச் செய்ய வேண்டிய முறைகளை வகுத்துக்கூறும் கரும காண்டம் என்ற முற்பகுதியும், அக்கருமங்களின் விலகி அறிய வேண்டுவனவற்றை அறிந்து அதன் வழி ஒழுகும் ஞான காண்டம் என்ற பிற்பகுதியும் ஆகிய இருவகைப் பிரிவினையும் உள்ளடக்கிய ஒரு பெரும் பொதுநூல் 'வேதம்' என்பது. ஆகமம் என்பது, வளர்ச்சிபெற்ற பரிபாகமுடைய உயிர்கள், அறிய வேண்டுவனவற்றை அறிந்து, உலகப் படைப்பின் உண்மையினை உணர்ந்து, பொறிபுலன்களின் வழிஓடாது, சரியை கிரியை யோக ஞானமாகிய நால்வகை வழிநின்று இறைவனை அடைவதற்குரிய ஒழுகலாற்றினைக் கூறுவது. இவ்விரண்டினையும் வேதாகமம் என்று சேர்த்துப் பேசுவது பெருவழக்கு. இவ்விரண்டினையுமே இறைவன் உண்டாக்கினுன், இறைவன் மொழிந்தான் என்று கூறுவர். இவற்றிற்குப் பதிவசனம் என்று சொல்வதும் உண்டு. அதாவது, படைத்தோன் சொல், தலைவன் கட்டளை,

படைப்பின் நோக்கம் என்பது பொருளாகும். இதனைத் திருவள்ளுவனார், 'பொய்தீர் ஒழுக்கநெறி' என்று குறிப்பிடுகிறார். அதாவது, உண்மையான ஒழுக வேண்டிய வழி. ஒழுக வேண்டிய உண்மையான வழி எனப் பொருள்பட்டு, அவ்வுண்மை நெறியை உணர்த்தும் பதி வசனத்தைக் குறிப்பிட்டது.

இதனைச் சைவசமயச் சான்றோர்கள் வேதப்பிரமானம், ஆகமப் பிரமாணம் என்பர். முன்னோன் மொழிந்தநூல் வேதமும், ஆகமமும், என்றும், வேதம் பொதுவும், ஆகமம் சிறப்பும் என்றும் உன்னுக என்று சாத்திரங்களில் வரை செய்தவாறு காண்க.

''இவையெல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும்
அவை இரண்டும் அரன் அடிங்கீழ் அடங்கும்''

என்றும்,

''வேதநூல் சைவநூல் என்று இரண்டே நூல்கள்
வேறு உரைக்கும்நூல் இவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அனாதி அமலன்தரும் நூல் இரண்டும்
ஆரண நூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினால் உலகற்கும் சத்தினிபாகற்கும் நிகழ்த்தியது''

என்றும் சிவஞான சித்தியாரில் கூறப்படுவதும் கண்டு கொள்க.

எனவே, 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்பது உலக ரனைவர்க்கும் இறைவன் கூறிய பொதுநூலாம் வேதத்தையும், பக்குவம் அடைந்த நன்மக்கட்கே இறைவன் அருளிய ஞான நூலாம் ஆகமத்தையும், குறிப்பனவாய் கொள்ளல் வேண்டும். மேலும், அவ்விறைவன் இந் நூல்களை ஏன் அருளிச் செய்தான் என்பதற்குத் திருவள்

ளுவர் காரணம் காட்டுகிறார். இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன், தானே முற்றும் உணரும் இறைவன், உயிர்கள் தோறும் இரண்டறக் கலந்திருக்கிற இறைவன் உலகங்களைப் படைத்து, உயிர்க் கூட்டங்களை உய்விக்கும் பொருட்டு, இவை அறியாமையால் தீ வழி ஒழுகாத படி நல்வழி ஒழுக அம்முறை தெரிப்பான் அவனே அருளிச் செய்தான் என்பதாகும். இதனை நமக்கு உபதேசிக்க வந்த திருவள்ளுவர் இறைவனுடைய பெருமையை 'ஐந்தவித்தான்' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார். அவனுக்கு ஐம்பொறிகளும், ஐம்புலன்களும் இல்லை ஆயினும் அவை பெற்றுள்ள உயிர்களை அதன்வழி ஓடாது தடுப்பதன் பொருட்டு அருள் நூல்களை, அறிவு நூல்களை அருளிச் செய்தான் என்பதனைக் குறிப்பிடுவாராய், ஐந்தவித்தான் வகுத்த பொய்தீர் ஒழுக்கநெறி என்று குறிப்பிட்டார். இதற்கு உரைவகுத்த பரிமேலழகர் ஆருவதன் செய்யுட்கிழமைப் பொருளில் நிறுத்தி உரை வகுத்தமையும் இக்கருத்துப்பற்றியதே ஆகும். எனவே, எவன் ஒருவன் உலகப்படைப்பின் நோக்கம் அறிந்து, உடலைத்தான் என்று கருதாது, பெற்ற பொருளைத் தனது என்று கொள்ளாது, யான் எனது என்ற செருக்கற்றுப் புறவழி ஓடும் பொறிபுலன்களை ஓடாது தடுத்து அகமுகமாய் ஆருயிர்க்குயிராம் இறைவனை அறிய முயற்சிக்கிறானோ, அம்முயற்சிக்குத் துணையாக இறைவன் அருளிய ஆகம நெறியாகிய சரியை கிரியை யோக ஞான நெறிகளில் நிற்கிறானோ அவன் வாழ்வு நிலைத்த வாழ்வாய் உண்மை வாழ்வாய் உயர் வாழ்வாய் அமையும், ஆகிவிடுகிறது என்று ஆசிரியர் கூறுகிறார். அதுதான் 'பொய்தீர் ஒழுக்கநெறி நின்றார் நீடுவாழ்வார்' என்பது.

ஈண்டு நெறி நிற்றலும், பொறிவாயில் ஐந்து அவித்தலுமே ஆசிரியரால் உயிர்க்குரிய செயல்களாய்க் காட்டப்

பட்டன. 'ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி' என்பது இறைவனுடைய பெருங் கருணைத்திறம் பேசிய வாறு. எனவே அவன் படைப்பாகிய உலகத்தில் அவன் அருளிய உடல் முதலாகிய கருவிகளைக் கொண்டு, அவன் வகுத்த பொய்தீர் ஒழுக்கநெறி நின்று, அவனடிச் சார்ந்து நீடுவாழவேண்டும் என்பது குறித்தவாறும்.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்."

இத்திருக்குறளின் கருத்தினை, செம்பொருளைச் சிதையாமல் அருமைப்பாடு தோன்றச் சிவஞானச் செம்மலாகிய ஞான சம்பந்தர் தம் அனுபவ வாக்கால் அருந்தமிழ் இன்னிசை யில் வடித்துக் கொடுக்கும், தீந்தமிழ்த் தேறலை இனிக் காண்போம்.

திருச்சிற்றம்பலம்

"ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்
கீரிருவர்க் கிரங்கி நின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோன் நின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோதும் ஓசை கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருள் சொல்லும் மிழலையாமே."

திருச்சிற்றம்பலம்

(பண் – மேகராகக்குறிஞ்சி – திருவீழிமிழலை பாட்டு 1)

திருச்சிற்றம்பலம்

"மண்ணின்மறை யோர்மருவு வைதிகமு
மாதவமு முற்று முலகத்
தெண்ணில்பொரு ளாயவைப டைத்தஇமை
யோர்கள்பெரு மானதிடமாம்

நண்ணிவரு நாவலர்கள் நாள்தொறும்வ
ளர்க்கநிகழ் கின்றபுகழ்சேர்
விண்ணுலவு மாளிகைநெ ருங்கிவளர்
நீள்புரிசை வீழிநகரே." (3 : 80 : 6)

திருச்சிற்றம்பலம்

திழிவீழிமிழலை என்பது சோழநாட்டுத் திருப்பதி களில் ஒரு சிறந்த இடமாகும். அதனோடு வரலாற்றுச் சிறப்பும் உடையது. ஞானசம்பந்தரும், திருநாவுக்கர சரும் அடியார் கூட்டங்களோடு நீண்டநாள் தங்கி இருந்த ஒரு பெரும்பதி ஆகும். பல்லாயிரம் அந்தணர் கள் வாழ்ந்த பழம்பதி ஆகும். அத்திருப்பதிக்கு ஞான சம்பந்தப் பிள்ளையார் பல பதிகங்கள் பாடியுள்ளார். அவற்றுள், இரண்டு திருப்பாசுரங்கள் ஈண்டுக் காட்டப் படுகின்றன. முதலில்வரும் மேகராகக் குறிஞ்சிப் பதிகத் தின் முதற்பாட்டு நாம் எடுத்துக்கொண்ட பொருளைத் தெளிவு செய்யும் திருப்பாட்டாகும். பண்டிதர்களென்பார் அறிவு நிறைந்தவர்கள். அவர்கள் இந்த உலகத்தில் பல நூற்பொருள்களை முற்றும் கற்றுணர்ந்த சான்றோர்கள். அவர்கள் இவ்வுலகத்தில் எப்படி வாழவேண்டும் என்று அறிந்தவர்கள். வையத்து வாழ்வாங்கு வாழ்பவர்கள். அதனைப் 'பாரிசையும் பண்டிதர்கள்' என்று குறிப்பிடு கிறார். மேலும், அறிவுடை ஒருவனை அரசும் செல்லும் என்றபடி அப்பண்டிதர்களின் வழி உலகம் ஒழுகுகிறது. அறிஞன்வழி செல்லும் அரசன்வழி குடிகள் செல்லும். எனவே, அறிஞன்வழி அரசும் குடியும் செல்லுகின்றன. அதனைப் 'பார்' என்பது உலகமாய்க் கொண்டு, உலகத்து மக்களனைவரும், இசையும் என்பது விரும்பிச் செல்லுதல் என்ற பொருளைக் கொடுத்து உலகத்தார் அனைவரும் விரும்பி ஒழுகும்படியான நன்னெறிச் செல்வர்கள் என்ப தனைப் 'பாரிசையும் பண்டிதர்கள்' என்பதனால் குறிப்பிடு

கிறார். அப்பண்டிதர்கள் தங்கள் வாழ்நாள் முழுதும், வேதா கமங்களை ஓதி அதன்வழி ஒகுழுகிறார்கள் என்பதனைப் 'பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்று ஓதும்' என்பதனால் குறிப்பிடுகிறார். ஓதுதல், காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கக் கனிந்து பாடுவது. பயிலுதல், அதன் வழி ஒழுகுவது. எனவே பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம், காதல் சிறந்து, வேதாகமங்களை ஓதி, அதன் வழி நடக்கும் சான்றோர் என்பதனை ஞானசம்பந்தப் பிள்ளையார் 'பண்டிதர்கள் பன்னாளும் பயின்று ஓதும்' என்ற சில சொற்களால் விளக்கம் செய்கிறார். வேதம், சுருதி என்ற பெயரை உடையது. இசையொடு கூடியதும் ஆகும். எழுதிப்படிப்பதன்று. சொல்லிக் கேட்பது. அதனால் அவ்வேதத்திற்கு எழுதாக்கிளவி என்ற பெயரும் உண்டு. இதனை "வேதஒலி கேட்டிருப்பார் வெண்காடு மேவிய விகிர்தனாரே" என்றுபாடி உள்ளமையாலும் அறியலாம். எனவே, பண்டிதர்கள் தாங்கள் பன்னாளும் பயின்ற வேதத்தை இன்னிசையோடு ஓதுகிறார்கள். அந்த இனிய ஓசையைச் சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைகள் தேன் சொரியும் சோலைகளிலிருந்து கேட்டுக் கொண்டிருக்கின்றன. பலகால் கேட்பதனால் அக்கிள்ளை களும், அவ்வேதத்தைத் திருப்பிச் சொல்லக் கூடிய ஆற்றல் பெறுகின்றன. அம்மட்டோ! சொல்லுபவர் களுடைய ஒழுக்கமும், சொல்லுகின்ற வேதத்தினுடைய ஒழுக்கமும், சொல்லுகின்ற வேதத்தினுடைய ஆற்றலும், சொல்லும்பொழுது பொருள் விளங்கப் பலருக்கும் பயிற்சி முகத்தான் விளக்கும் நிலையும் அக்கிள்ளைகளும் கேட்டுக் கேட்டுத்தாமும் பயிற்சி உடையனவாய், பொருள் விளங் கச் சொல்லுகின்ற ஆற்றலும் பெற்றுவிடுகின்றன. உயிர் களின் இயல்பு, சார்ந்ததன் வண்ணமாய் விடும் தன்மை உடையன ஆகையால், ஆற்றல் நிறைந்த அறிவு சான்ற பண்டிதர்களின் வேத இசையையும், பொருள் விளக்கத்

தையும் ஒழுக்க மேம்பாட்டையும். கேட்டுக் கேட்டுப் பயிற்சி பெற்ற கிள்ளைகளும், வேதங்களை ஓதி விழிநீர்ப் பெருக்கிக் காதல்மிக்கு, அவ்வேதக் கருத்துப் பொருள் களை விரித்துரைக்கும் மேன்மை பெறுகின்றன. இதனை, ஞானப்பிள்ளையார், ''பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாம்'' என்று கூறுகிறார். இம்மருத நிலப்பகுதியில், 'வேரிமலி பொழில்' என்பதனால் நீர்வள நிலவளப் பெருமையும், 'கிள்ளை' என்பதனால் கருப்பொருட் சிறப்பும், 'பாரிசையும் பண்டிதர்கள், என்பதனால் மக்கள் மேம்பாடும், 'வேதம் பன்னாளும் பயின்றோதும் என்பதனால் அம்மக்களின் ஒழுகலாற்றின் உயர்வும் கூறி 'மிழலையாம்' என்று நகரத்தை மேம்படுத்திக் காட்டியவாறும் காணலாம். இப்படிக் கூறுவதின் காரணம், 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்று சங்கச் சான்றோர் வாழ்த்தியவாறு, நல்ல நிலமும், நல்ல மக்களும் வாழும் இடத்தில் நல்லோருக்கு நல்லோனான இறைவன் வெளிப்பட்டுக் காட்சியளிப்பான் என்பதையும், அவன் படைப்பின் நோக்கம், அவ்விடத்திலும், அம்மக்களிடமும் காணத்தகும் என்பதனையும், குறிப்பிடுதற்காம் என்பதையும் நாமறிதல் வேண்டும். மேலும் ஒரு சிறப்பு உணரலாம். மக்கள் நலம், மக்களைச் சார்ந்த பொருள்களுக்கும் உண்டாகும். அன்றியும், அப்பொருள் களும் அவ்வழி ஒழுகிப் பயனடையும், பயனளிக்கும் என்பதனையும், அடிகள் நமக்கு எடுத்துக் காட்டுவார் போன்று வேரிமலி பொழில் என்றும் 'பொழிற்கிள்ளை, வேதங்கள் பொருள் சொல்லும் மிழலை' என்றும் கூறியருளுவதால் உணர்த்துகிறார். பொழில் மரஞ்செடி கொடியடர்ந்து நிழல் செய்து, செழித்து மலர்ந்து மணமளித்து, காய்த்துக் கனிந்து பயனளிப்பதனை, 'வேரிமலி

பொழில்' என்பதனுலும், அங்குறையும் கிளிகள், வேதங் களைக் கேட்டுச் சொல்லியும், பொருளுணர்த்த உணர்ந்து, தாமும் பொருள் சொல்லியும் வாழ்கின்றன என்பதனல், சார்பின் சிறப்பும் கூறிய அழகு அறிந்து அறிந்து இன் புறற்பாலதாம். இத்தகைய, இடமும் மக்களும் வாழும் மிழலை, யாருக்குரிய இடம் என்பது இனி பேசப்படுவது. 'ஏரிசையும் வடவால்', உயர்ந்த வடக்கே உள்ள ஆலமரம். அதன்கீழ் நான்கு முனிபுங்கவர்கள், கற்றுத் துறைபோய நற்றவத்தினர். எண்ணரிய நூலறிவும், நுண்ணறிவும் பெற்றுயர்ந்த பெரியோர். உள்ளத்துணர் வில், உயர் பேரின்ப நிலையினைப்பெறத் துடிக்கும் உயர்ந் தோர். அவர்கள் சனகர், சனந்தனர், சனுதனர், சனற் குமாரர் என்பவர்கள். அவர்களுடைய உள்ளம் படைப் பின் நோக்கமும், பயனும் என்ன? என்பதனையும், இவ் வரிய கற்பனைக் கடங்காத உலக விசித்திரத் திறனையும், அறிய அவாவுகின்றன. நான் யார்? என்னுள்ளம் யார்? ஞானங்களார்? என்ற விஞக்களுக்கு விடைகாண முடி யாது, ஐயத்திலும், அறியாமையிலும் தவிக்கின்றனர். அந்த அறிவுடைய, ஆர்வமுடைய, அதிபக்குவமான அவர்கட்கு, வடக்கே கயிலைமலை என்னும் அறிவே வடிவான சாத்துவிக குணம் நிறைந்த அம்மலையின் வடபால், கல்லால் மரம். கல்லால் என்பது ஆலமரத்தின் பகுப்புக்களுள் ஒன்று. பெரும்பாலும், விழுதுகள் இல்லாது, அளவாக வளர்ந்து நிற்பது. ஆல் என்பது, அகன்று, நீண்டு, பலகாலம் நிலைத்திருக்கும் நிலையினை யுடைய மரம். அம்மரத்தின் இலை, பிரணவ வடிவமாய் இருக்கும். கார்நிற வண்ணனும் காத்தற் கடவுளாய. திருமால் பள்ளிகொள்ளும் இடமாய்ப் பேசப்படும் சிறப் பினது. கொடிய, சூட்டினை வாங்கிக் கொண்டு, குளிர்ந்த தண்ணளி பயக்குந்தன்மையது. அத்தகைய ஆலின் கீழ், என்பது ஞானநிலை பெற்று உய்யக்கருதும் ஆத்மாக்

களுக்குப், பிரணவாகாரமாய் இருக்கும், குடிலை என்னும், சுத்த மாயைக்கு மேலான நாத தத்துவத்தில், இறைவன், சச்சிதாநந்த வடிவாய், சிறப்புற வீற்றிருந்து அருளுகிறுன் என்ற குறிப்பாகும் எனக்கொள்ளல் வேண்டும். இக்குறிப்பினைப் பிற்காலச் சான்ரேர் ஒருவர்,

கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
யாறங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மனக் கப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத் தொடக்கைவெல்வாம்.

என்று, தென்முகக் கடவுள் குருவணக்கமாய்த் திருவிளை யாடற் புராணத்திற் கூறியுள்ளமையறியலாம். இங்ஙனம் அதிபக்குவமடைந்த சான்ரேர் நால்வர்க்காக, இறைவன் வடவாலின்கீழ், உண்மையறிவானந்த வடிவாகி இருந்து, காட்சி கொடுத்தருளினுன் என்பதனைச் சிலசொற்களால் ஏரிசையும் வடவாலின் கீழ்இருந்து என்று அருளுகிருர் கள். அங்கு, என்பது, அந்நால்வருடைய பக்குவநிலை குறிப்பிட்டவாறும். பக்குவம் இல்லையேல் உரைக்கும் பொருளும் பயன்படாது. கேட்போரும் பயனடையார், இதனை, மணிவாசகர், ஓரிடத்தில் தன் எளிமையும், இறைவனருட் பெருமையும் குறிப்பிடும்போது, அழும் மழப் பிள்ளைகையில் பொற்கிண்ணம் போன்றது என்று கூறுகிருர்கள். ஏன் எனில், பொற்கிண்ணத்தின் அருமை அறியாத குழந்தை, பெற்ற பொற்கிண்ணத்தைத் தூக்கி எறிந்துவிட்டுத், தின்பண்டத்தையேவிரும்பும், அதுபோல இறைவனதுஅருளாற்றலையும், அவனருட்பெருமையையும் அறிய முடியாத பக்குமில்லாத உயிர்கள், உலக இன்ப

மாம் அற்ப சுகத்தையே விரும்புவர். ஆகையால், பொருளருமையறியும் பக்குவமுடைய, அந்நால்வர்க்கு என்பதனை, அடிகள் குறிப்பிட, அங்கு ஈரிருவர்க்கு என்றருளினார்கள்.

இதுவரை, ஏரிசையும் வடவாலின் கீழிருந்து அங்கு, ஈரிரு வர்க்கு, என்ற வரையும், அடிகள் வாக்கினைக் கண்டோம். இனி வருவன, நாம் எடுத்துக் கொண்ட திருக்குறட் கருத்தொடு பட்ட பொருளழகுடைய அனுபவ மொழியாம்.

"இரங்கி நின்று
நேரிய நான்மறைப் பொருளையுரைத்து ஒளிசேர்
நெறியளித்தோன் நின்றகோயில்"

இப்பகுதி, இரங்கிநின்று, உரைத்து, அளித்தோன் என வினை முடிவுகொண்டு சிறப்புடைப் பொருளைச் சாதிக்கின்றது. இறைவன் கருணைவடிவானவன். பக்குவ நிலைக்கேற்ப, அருள் செய்பவன். அவர்களுள், தீவிர தரமுடை அதிபக்குவர்கட்கு, இறைவன்தானே தம் முதற்குருவாய் தவத்தினில் உணர்த்த வருகிறன் என்ற சாத்திர நுட்ப வரலாறு, விரிவதற்கிடமாய் அமைத்து 'அங்கு ஈரிருவர்க்கு இரங்கி நின்று' என்ற குறிப்பால் விளக்கியருளுகிறார். அங்கு அப்பக்குவ நிலையில், ஈரிருவர்க்கு பதமுத்தி, பரமுத்தியடையும் பக்குவமுடைய நால்வர்க்கும், இரங்கி—கருணைத் திருவுளம் கொண்டு, நின்று—உருவத்திருமேனி கொண்டு நின்று காட்சிதந் தருளி, எனப்பதப் பொருள் உயிர்களின் தகுதி நிலைக் கேற்றவாறு, திருவருள் செய்யத் திருவுளங் கொண்டு வெளிப்பட்டும், படாதும் அருள் செய்வான் என்ற உண்மையையும் உணர்த்தியவாறுகவும் கொள்ள வைக்கிறார். பக்குவநிலை, நான்கானவாற்றை ஈரிருவர்க்கு எனப் பிரித்துக் கூறிய குறிப்பால் உணர வைக்கிறார்.

நால்வர்க்கு என்ற தொகைப் பெயரிருக்க, அதனையே ஈரிருவர் என்றருளியமையில் அக்குறிப்பு வெளிப்பட்ட வாறும். நான்கு நிலையாவன, சரியை கிரியை, யோக, ஞான வழிகள். அவை ஒவ்வொன்றும் நான்கு நான்காய் விரிந்து பதினாறாய் விளங்கும். நால்வர் பெருமக்களாய சமய குரவர் வாழ்ந்து வழிகாட்டிய முறையும் நாமறிந்த தொன்றாகும். தவமுது குரவராய் விளங்கிய, நம் நாவுக்கரசர், சரியா மார்க்கத் தலைவராய், அதன் நான் காம்படியாகிய, சரியையில் ஞானம் என்ற படியில் தொண்டு செய்து, பரமுத்தியடைந்த பரமாசாரிய சுவாமிகள் என்பதனையும், ஞானசம்பந்தப் பிள்ளையார் கிரியா மார்க்கத்தில் நான்காம் படியாகிய, கிரியையில் ஞானம் என்றபடி நின்று பரமுத்தியடைந்த பரமாசாரிய சுவாமிகள் என்பதனையும், நம்பியாரூரர் யோகமார்க்க நான்காம்படியான யோகத்தில் ஞானம் என்றபடியில் நின்று, பரமுத்தியடைந்த பரமாசாரிய சுவாமிகள் என்பதனையும், மணிவாசகப் பெருமான், ஞானமார்க்கத்தில், நான்காம் படியான ஞானத்தில் ஞானம் என்ற அத்துவித முத்தி பெற்ற பரமாசாரிய சுவாமிகள் என்பதனையும் நாமறியலாம். அன்றியும், திருத்தொண்டர் புராணம் கூறும், அடியார்களிற் பலரும் இவ்வாறே நால்வகை நெறிநின்று, பதமுத்தி, பரமுத்தியடைந்த வரலாற்றினைச் சேக்கிழார் பெருமான் திறம்பட விளக்கியுள்ளமையை ஆங்குக் கண்டு தெளியலாம். அவற்றுக்கெல்லாம் மூலமாக, ஞானப்பிள்ளையார், 'ஈரிருவர்க்கு நேரிய நான்மறைப் பொருளை என்ற குறிப்பால் விளக்கியவாற்றினால் நாம் அறியவைக்கிறார்.

நேரிய நான் மறை. என்பது, நேர்மையான நான் மறை என்பதாம். நான்மறைக்கு நேர்மை, அனைத்துயிர்க்கும் உய்யும் வழியினை, அவ்வவ்வுயிர்க்கேற்ற முறையிற்

பயன்படும்படிக் கூறும் நான்மறை என்பதாம். லோகாயதம் முதல், அனைத்துவித உண்மைகளையும் இம்மைப் பயன்முதல், முத்திநிலைவரை கூறும் ஒழுங்கினையும், கருமமாகிய செய்வினைமுதல், வினைக்கழிவுவரை கூறும் பரிபாக நிலையையும், அனைத்தையும் கூறும் ஒழுங்கு முறையுடையது வேதம் என்பதனை நமக்கு விளக்க, 'நேரிய நான்மறை' என்ற குறிப்பால் உணர்த்தியருளினார். அவ்வேதப் பொதுநிலையினின்றும் பிரிந்து அதன் உண்மைப் பொருளையறிதற்கும், அவ்வேதத்திலேயே வழி வகுத்திருப்பதை உணர்த்த, 'நேரிய நான்மறைப் பொருளையுரைத்து' என்ற குறிப்பால் உணர்த்தினார். விரிந்து கிடக்கும் பொதுநூலாம் வேத உண்மைகளனைத்தையும் நமக்கு உரைத்தருளினவன், இறைவனே என்பதனை 'நேரிய நான்மறைப் பொருளையுரைத்து' என விளக்குகிறார். இனி, அப்பொதுவினின்றும் பிரித்துச் சிறப்புடைய, ஞான நெறியாம், ஆகம நெறியினை உணர்த்துவான் தொடங்கி, 'ஒளிசேர் நெறி' என்று சுட்டியருளுகிறார் ஞானப்பிள்ளையார். ஒளி என்பது, புற இருள் போக்கிப் பொருளைக் காட்டுவது போன்று, அகவிருள் நீக்கி, ஆன்ம நாயகனைக் காட்டும், ஞான ஒளியினைக் குறிப்பிடுவதாகும். நெறி—வழி. 'ஒளிசேர் நெறி' ஞானமார்க்கம் அவை மேலே குறிப்பிட்ட நால்வகை நெறிகளாம். இருள்சேர் இருவினையினின்றும் நீங்கிப்பெற வேண்டிய நெறியாகையால் அதனை 'ஒளிசேர் நெறி' எனச் சிறப்பித்துக் கூறியவாறும். மாறிநின்று மயக்கும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்துக் காணவேண்டிய பெருநெறியாகையால், அதனை 'ஒளிசேர் நெறி'யென அடுத்த மொழியால் அருளுகிறார். ஐம்புல வேடரின் அயர்ந்து வீழாது, தடுத்துத் தம்முதற் குருவாய் எழுந்தருளிக் காட்டும், நன்னெறியாகையால் 'ஒளிசேர் நெறி' எனச் சிறப்பித்தருளுகிறார். மறைநெறி அருநெறி

ஆகையால், அதன்வழி நீங்கித் திருநெறிய தமிழ்நெறி ஆகையால், 'ஒளிசேர் நெறி' எனத் தமிழ்ஞான சம்பந் தரால் அருளப்படுகிறது சைவநெறி. அதனைக் கருணைத் திருவுளத்தால், இறைவன் குருவாய் எழுந்தருளி அருள் செய்தான் ஆகையால் உரைத்தருளி ஒளிசேர் நெறி அளித்தான் என்று கூறினர். உரைத்தல் சொல்லுதல், அளித்தல் அருள் பாலித்தல். உலகத்துக்கு நான்மறைப் பொருளை உரைத்து ஈரிருவர்க்கு ஒளிசேர் நெறியை அளித்தான் என வினைமுடிவு கொள்ளவேண்டும். ஒளி சேர் நெறி என்பதற்கு ஒளியைச் சேர்வதற்கு உரியநெறி எனப்பொருள் கொண்டு, பேரொளிப் பிழம்பாய் இருக்கிற பரசிவத்தை அடைவதற்குரிய நெறி எனவும் பொருள் கொள்ளலாம். அங்ஙனம் கொள்ளும்பொழுது ஒளி என்பது இறைவனுடைய உண்மையறிவு ஆனந்த வடிவ மான பேரொளியைக் குறிப்பதாக அமையும். பொது இலக்கணத்தின் நீங்கிச் சிறப்பியல்பாகிய செம்பொருளை அடைவதற்குரிய வழியாக ஞானமார்க்கமாக சைவநெறி விளக்கியவாறும். திருஞான சம்பந்தப் பெருமான் வேத நெறிநின்று, சைவத்துறை தழைத்து விளங்கத் தமிழால் உலகம் முழுதும் இன்னிசை பரப்பி இறைபணி தலை நின்றார் என்று சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணத்தில்,

(வேதநெறி தழைத்தோங்க
மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம்பரை பொலியப்
புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித்
திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு
திருத்தொண்டு பரவுவாம்.)

என்று அருளும் ஆற்றல் அறியலாம். 'வேதநெறி' எனப் பொது நிலையும், 'மிகுசைவம்' எனச் சிறப்பு நிலையும் பிரித்துக் காட்டியமுறை ஞானசம்பந்தப் பிள்ளையாரு டைய வரலாற்றில் அறியத்தகும்.

ஆகையால், நான்மறைப் பொருளை உரைத்து ஒளி சேர்நெறி அளித்தோன் என ஞானசம்பந்தப் பிள்ளையார் அருளுவது பொதுவாகிய வெதப்பொருளை உரைத்தும், சிறப்பாகிய செம்பொருட் சிவபரம் பொருளை அடைவதற் குரிய ஒளிசேர் நெறியை அந்நால்வர்க்கும் அளித்தான் எனப் பொருள்விளக்கம் காணவேண்டும்.

இங்ஙனமாக இறைவன் வடவாலின் கீழிருந்து அங்கு ஈரிருவர்க்கு இரங்கி நின்று மோனமுத்திரை அத்தனுய் ஞானத்திருமேனி கொண்டு எழுந்தருளி ஞானநெறியாம் சைவ நெறியினை வேதநெறி வழாது அருள் பாலித்தான் என்று கொள்ள வைத்து விளக்கம் செய்கிறுர். இறைவன் குருவடிவாய் எழுந்தருளின-பொழுதுகண்ட ஈரிருவர்க்கு யோக மூர்த்தியாய்க் காட்சியளித்ததனுல் ஐந்தவித்த அருந்தவநிலை அவ்விறைவன்பால் காணக்கிடக்கிறது. மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல் தன்னடைந்த தவ முதல்வர்களுக்குத் தானும் ஓர் தவமுதல்வனுய்க் காட்சி தந்தருளினுன். அதனைத் திருவள்ளுவனுர் 'பொறி வாயில் ஐந்தவித்தான்' என்று கூறியதாக ஞான சம்பந் தப் பிள்ளையார் விளக்கம் செய்கிறுர். அதனை 'ஏரிசையும் வடவாலின் கீழிருந்து அங்கு ஈரிருவர்க்கு இரங்கி நின்று' என்று கூறுவதால் பொறிவாயில் ஐந்தவித்தானுடைய பொருள் நிறைந்த புகழ்த்திருமேனி குறிப்பிட்டவாறு யிற்று. அடுத்ததாக, பொய்தீர் ஒழுக்க நெறி என்பது 'நேரிய நான்மறைப்பொருளை உரைத்து ஒளிசேர் நெறி அளித்தோன்' என்பதால் வேத நெறியும் சைவத் துறை

யும் விளக்கியவாருயிற்று. அளித்தோன் என்பதனுல், தன் உணர்ந்தார்க்கு உள்ளுணர்வில் அனுபவமாய் உணர்த்தியவாருக, உரைத்து என்றதனுல் உபதேசமாய் மந்திரப் பொருளைக் கூறியவாறும் குறித்தவாருயிற்று. தடத்தத்தில் குருவாய் எழுந்தருளி உபதேசித்துச் சொரு பத்தில் ஒளியாயிருந்து ஆன்ம அனுபவப் பொருளாய் அருள் செய்யும் முறையினை 'உரைத்து அளித்தான்' என்பதனுல் கண்டுகொள்ளலாம்.

இதுவரை 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம் நெறி' என்றவரையில் உள்ளபகுதி ஞானசம்பந் தருடைய திருவாக்கில் சொல்லாலும் பொருளாலும் விளங்கி நிற்பதை நின்றவாறே கண்டு மகிழ்ந்தோம். இனி 'நின்ருர் வாழ்வார்' என்பது விளக்கப்பெற வேண் டும். அதனை 'மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்' என்ற குறளில் நீடுவாழ்வார் என்பதற்குக் கூறியாங்குப் பொருள் கொள்க. 'நின்ருர்' என்பது ஒழுகுவார் என்ற பொருளை உடையது. இனி நிற்றல் என்பது பொறிபுலன்களைப் புறவழி ஓடாது நிறுத்தி நிற்றல் என்ற பொருளை உடையதாகவும் கொள்ளலாம். அல்லாமலும் சின்முத்திரை அத்தனுய் ஐந்தவித்தான் ஆகி அறங்கூறும் யோகநிலையில் அவ்விறைவன் நின்ற நெறியில் நின்ருர், எனப்பொருள் கொள்ளினும் பொருந் தும். அவ்வாறு நிற்பவர் அவனடிச் சார்பாகிய முத்தி நிலையில் சிவமாம் பேரின்பத்தைத் தெளிந்து பெருவாழ்வு எய்துவர் என்பது 'நீடுவாழ்வார்' என்பதனுல் குறித்த தாகும். நீடுவாழ்தல் இறந்து பிறந்து உழலும் இருவினை கட்கு அகன்று இறவாத இன்பநிலைப் பெருவாழ்வு எனும் பேரா இயற்கைநிலை எய்துதலாம். இதனை 'கைவல்யம்' என்றும், சுக்கிலத் தியானம் என்றும், 'திருவடிப்பேறு' என்றும், 'அத்துவிதமுத்தி' என்றும், 'சிவாநந்தப் பெரு

நிலை' என்றும் இன்னும் பிறவாறும் கூறுவர். அதனை ஆசிரியர் 'நீடுவாழ்வார்' என்ற பொதுச்சொல்லால் குறித் தார். ஞானசம்பந்தப் பிள்ளையார் இப்பேரின்பப் பெறு நிலையை இறைவன் ஈரிருவர்க்கு அளித்தான் என அவன் அருளாலேயே பெறுவதாக முடித்துக் காட்டினூர். இங்ஙனமாக, ஞானசம்பந்தருடைய திருவாக்கும், திரு வள்ளுவருடைய அறிவு மொழியும் ஒன்றுபட்டு ஒரு பொருள் நுதலிய இருபெரும் குரவர்களினுடைய அறிவு மொழியும், அன்புமொழியுமாய் ஆன்மநேய ஒருமைப்பாடு டைய சிவநேசச் செல்வர்களுக்குத் துணையாய் வழிகாட்டி நிற்பதை அறிந்து மகிழ்வோமாக.

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ்வார்"

திருச்சிற்றம்பலம்.

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க் கிரங்கி நின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத் தொளிசேர் நெறியளித்
தோன் நின்ற கோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்ருேதும் ஓசை
கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருள்சொல்லும்
மிழலை யாமே

திருச்சிற்றம்பலம்.

# 7

'தனக்குவமை இல்லாதான் தான்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது'

ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசையேகினுன், வேண்டு தல் வேண்டாமையிலான், இறைவன், ஐந்தவித்தான், என்றே வேறு வேறு பெயரிட்டு வழங்கி வந்த ஆசிரியர், இங்குத் தனக்குவமையிலான் என்ற பெயரால் குறிப் பிடுவது, தன்னேரிலான்தானே யானதன்மையைக் குறிப்ப தாகும். அனைத்துக்கும் மேலானவனை, எப்படிக் கூறுவது? எல்லாவற்றினும் மேலானவன் என்றும் கூறலாம், முன்னே சொல்லிவந்த ஆறு பெயர்களுமே, உலகில் காணமுடியாத மேலாந்தன்மையையே குறிப்பன. அங்ஙனமிருக்க, மேலானவன் என்று குறிப்பதில் ஓர் பயனில்லை. காணமுடியாத பொருளைக் கண்டுவிடலாம் என்ரோ, அறிய முடியாத பொருளை அறிந்து விடலாம் என்ரோ ஒருவேளை நினைவு தோன்றிவிடக் கூடுமல்லவா? அப்பாற்பட்டவன், அவனுக்குச் சமமாக ஒரு பொருளைச் சொல்ல முடியாது என்று கூறிவிட்டால், அதற்குப்பின் வினு எழாதன்ரோ. அங்ஙனமே, கடவுள் என்று கூறப் படும் பொருளை, வடமொழியில், பிரமம் என்று கூறப்படும் பொருளை, அனுபவத்தில் சிவம் என்று அனுபவிக்கப்படும் பொருளைச் சுட்ட வரும்போது, தனக்குவமை இல்லாதான் என்று குறிக்கிருர். உலகில் தான் உயர்ந்தது என்று கருதப்படும் பொருளைக் குறிக்கும் போது, தான் இதுவரை எதனை உயர்ந்தது என்று எண்ணியிருந்தானே அதனைக் கூறிப் பின் அதனினும் உயர்ந்தது என்று கூறுவது

வழக்கு. திருநாவுக்கரசர் பெருமானும் கூட, படிப்படியாக உயர் பொருளை நிலைக்கேற்பக் காட்டி அதனிலும் உயர்ந்தவன் இறைவன் என்பதனைத் திருக்குறுந் தொகையில் ஒரு பாட்டில் குறிப்பிடுகிறார்.

‘ கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் சாலவும் இடை மருதீசனே ’

என்று கூறுகிறார். இது படி நிலையில் இன்பம் என்று கருதும் உயர்வினைக் காட்டியதாம். இனிப் பொருள் நிலையிலும்,

‘ என்னில் யாரும் எனக்கினியார் இல்லை
என்னிலும் இனியான் ஒருவன் உளன் ’

என்று காட்டுகிறார். இங்கே பொருளின் உயர்வு காட்டியமைகாண்கிறோம். திருவள்ளுவர், ஆறு பெயர்களால் பொருளின் உயர்வு காட்டி வந்து, அதனிலும் மேம்பட்ட பொருள் என்று கூறினால் ஒப்புப் பொருள் ஒன்றுண்டு போலும் என்ற எண்ணம் எழுமல்லவா ஆகையால் அதனோடு ஒப்புமைப் பொருளே இல்லை என்று கூறி விட்டால் உயர் பொருள் இல்லை என்று கூறவேண்டாமன்றோ, அம் முறைப்படி, ‘ தனக்கு உவமை இல்லாதான் ’ எனக் கூறிச் சிறப்பிப்பாராயினர். திருவள்ளுவர் கூற வந்தது அறிவனூற் பொருள் ஆகையால், உண்மைப் படுத்த முடியாத பொருளைக் கூறல் கூடாது ஆகையால், ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும், சோதித்து உண்மைப் படுத்த முடியாத பொருளை எங்ஙனம் கூறுவது. உவமையால் தானே காட்ட முடியும், அதனால் தானே பிரமாணங்களுள் உவமையும் ஒன்றாகக் கூட நேர்ந்தது. புலியைக் காணாத ஒருவனுக்குக் கண்டான்

ஒருவன், இருவரும் அறிந்துள்ள பூனையைக் காட்டி, இதனிற் பெரிதாய், வலிதாய், குறி தவறாது கொல்லும் ஆற்றலுடையது புலி என, ஓரளவு உருவச் செயல் ஒப்புமைகாட்டி உணரவைக்கிறான். அங்ஙன மிருக்க, இறைவனை எவ்வாற்றானும், வினை,பயன்,மெய், உரு என்ற நால் வகையானும் உவமைப் படுத்திக் காட்டப் பொரு ளில்லை என்று காட்டுவாராய், 'தனக்குவமையில்லான்' என்று கூறினார். மேலும் உவமை ஒன்றை எடுத்துக் காட்டி விட்டால், உவமேயமாய பொருளும் எடுத்துக் கொண்ட பொருளுக்கேற்ப, உருவ முதலாய தடத்தப் பொருளாய்ப் போய்விடும். ஆசிரியர் திருவள்ளுவனார்க்கு, இறைவன் உருவமிலான் என்ற உண்மையையும், உருவமின்மை யால், பொருளில்லாமற் போகாது பொருளுண்டு என்ப தனையும், குணங்களைப்,பண்புகளைப்,பண்பியினிடம் காண வேண்டுமாறு போல, இறைவனை, அவன் குணமுடை யார் மாட்டே காண வேண்டும் என்பதனையும் நம்ம னோர்க்கு அறிவிப்பான் வேண்டி, 'தனக்குவமை இல்லா தான்' என்று கூறினார்.

ஆயின், முதற் குறளில், 'அகர முதல எழுத்தெல் லாம்' என்று தொடங்கியது உவமையன்றோ எனின், உவமனிலிறந்த பொருளை உண்மைப் படுத்துவதற்கு மேற் கொண்ட மேற்கோளே தவிர அஃது இறைவனுக்கு உவமையாகாது. அதனாலன்றோ, பரிமேலழகரும் இது தலைமை பற்றி வந்த எடுத்துக் காட்டு' என்று விளங்க வைத்தார். அல்லதூம், நுணுகிச் செல்லும் முறை யினைக் காட்டுவான் தொடங்கி, எழுத்தாகிய வடிவம், ஒலியாகிய நுண்மையையும், ஒலியாகிய பலவும், அகர மாய ஒரு நுண்ணொலியினின்றே பிறந்தன என்பதனையும் காட்டி, காணப்படும், உருப் பொருளாய உலகம், நுண் ணிய தொழிலியக்கம் உடைய, அருளறிவாம் அம்மையப்

பனிடமிருந்து வந்தது என்று காட்டின முறையே யன்றி எவ்வாற்ருனும் உவமையாகாதெனவே முடிக்க அன்றியும், அதனை உவமை எனக் கொள்ளின் தனக்குவமையில்லாதான் என்ற ஆசிரிய வசனம், பழுதுபடும் என்பதும் அறிய வேண்டும். ஆகையால், தனக்குவமையில்லாதான் என்று கூறியது, ஒப்பும் மேம்பாடும் உடைய பொருள் ஒன்றின்மையின் கடவுள் ஒருவனே என்பதனையும் வலியுறுத்தியவாரும் என்பது.

இனி வினையின் வந்து வினைக்கு விளைவாயமைந்த உடலோடு கூடிய உயிர், எந் நிலையினது என்பதனை விளக்குவான் தொடங்கி நுண்ணுடலாய மனத்தை நினைவு படுத்துகிருர்.

> அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்றவை
> சந்தித்த தான்மா சகசமலத் துணராது'

என்ற மேலோர் வாக்கால், மனமே ஆத்மா ஆகாது ஆனல் அம்மனத்தோடன்றி, இன்பதுன்பங்களையும் அடைய மாட்டாது ஆகையால், நுண்ணுடலாகிய மனத்தோடன்றி, இயங்கலாற்ருத ஆத்மாவுக்கு உரிய நிலை காண வைக்கிருர். மனம். அந்தக்- கரணங்களில், முன்னது. பின் மூன்று நிலைகள் உள்ளன, அவை, புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. அவற்றின் செயல்கள் வேறு. மனம், புறகரணங்களாய. பொறிகளின் வழிச் சென்று, புலன்களைப் பற்றி அவாவினுல் அல்லலுற்று அழிகின்றது. அதனுல் தான் ஆருவது குறளில் பொறி புலன்களைக் குறிப்பிட்டு, அவற்றை அவித்தொழுகும் முறையினைக் கூறி, ஏழாவது குறளில் மனம் தன்னியல்பில் அறிவில் பொருளாகையால் அதனை இயங்கவைக்கும் வினைவழிவந்த ஆத்மாவுக்கே உரிமையாக்கி, ஆத்மா வினைவழிச் செலவுடையதாகையால்,

அத்தீவினை வழி துன்பக் கடலுக்கே சென்றழியும் தன்மையது என்பதனை, மனக்கவலை என்றருளுகிறார். உயிர்த் தோற்றங்கள், எடுத்த உடலுக்கேற்ப இன்ப துன்ப அனுபவங்களைப் பெறுவன. அதனால்தானே, உயிரின் பிறப்பின் பிரிவினை நால்வகைத் தோற்றத்தனவாய், ஏழு வகைப் பிறப்பினவாய் எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதமுடையனவாய்க் கூறப்பட்டன. இத்தனைப் பிரிவிற்கும் வினைப்பயனே காரணம். வினைவழியே மனம் செல்லும். மனத் தொடர்பால், பயன்களை ஆத்மா துய்க்கும். ஆகையால், வினை வலியை வெல்ல முற்படும் பரிபாகன், முதலில் மனப்பரிபாகம் அடைய வேண்டும்.

> 'மனம் ஒருத்தன் வசப்படுமேல் அவன்
> பிணி வருத்தும் பிறப்பில் அழுந்திடான்
> மனம் ஒருத்தன் வசப்படா தோடுமேல்
> தனிபிறப்பிடை நாளும் அழுந்துமே'

என்ற பிற்காலச் சான்றோரின் வாக்கும் இதனை வலியுறுத்தும். மனிதன் மனம் வழிச் செல்பவன், மனத்தை மாற்றுவது மிக அரிய செயல். மனமெனுந் தோணி பற்றி ஓடும்போது, கோல் இருந்தாலன்றித், திரும்பிக் கரை சேர்க்க முடியாதது போல, மனத்தை வினைவழிச் செல்ல விடாது நிறுத்த புத்தியென்ற தத்துவம் தொழிற்பட வேண்டும். அதனால் தான், திருநாவுக்கரசர்,

> 'மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலை யூன்றி'

என்று குறிப்பிடுவாராயினர். ஓர் புலவர், மனத்தின் இயல்பினை நன்கறிந்து,

> 'நின்னை யறப்பெறு கிற்கிலேன் நன்னெஞ்சே
> பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்-நின்னை
> யறப்பெறு கிற்பனேல் பெற்றேன் மற்றீண்டே
> துறக்கம் திறப்பதோர் தாள்.'

என்று உருகிக் கூறுகிறார். இதனால், மன இயல்பை அறிந்தவர் கூடத் தம் வழிச் செலுத்த முடியாத அத்தனை ஆற்றலுடையது மனம். உடம்பு வினையின் வந்தது ஆகையால், உயிர்கள், பிறப்பெடுக்கும் போதே, வினைப் பயனுக் கேற்ற உடலைப் பெறுகின்றன. இது முதல் நூலாய சிவஞான போதத்து.

'வினை தள்ள விழுங் கருவில் தான்'

என்று கூறப்படுவதனாலும் அறியலாம். நுண்ணுடலை, திருவள்ளுவர் பல இடங்களில் குறிப்பிடுவார். இங்ஙனம் குறிப்பிடும் போது பல பெயர்களால் கூறுவார்.

'தன்னெஞ்சறிவது பொய்யற்க' என்றும்
'பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்' என்றும்

கூறியுள்ளமையை உணரலாம். ஆகையால், மனம் என்பது நுண்ணுடல் என்பதும், அவ்வுடல் வினை வழிப்படுவது என்பதும், அது, தன்னறிவுடையது அன்று என்பதும், வினைவழிப் படுவது என்பதும், வினை துன்பத் தையே ஆத்மாவுக்குத் தரும் என்பதும், வினை வழிப்படும் மனமும் துன்பமேயாயது என்பதும், நாமறியலாம். அதனால் தான் ஆசிரியர்

'மனக் கவலை' எனக் கூறினர்.

அவலம், கவலை கையாறு, அழுங்கல், என்ற நான்கு நிலையில், மனம் துன்பத்தை ஆத்மாவுக்கு ஊட்டும். சொல்லால் நான்காயினும், அனைத்தும், படி நிலையால், வளர்ந்து துன்பத்தையே குறிப்பனவாம். அவலம்–சோர்வு. கவலை-பெற முடியவில்லையே என்ற ஏக்கம்–கையறவு - பெற்றதனை இழந்ததால் வரும் வருத்தம். அழுங்கல்-ஏற்பட்ட துன்பத்தினின்றும் மீள முடியாது அதனையே நினைந்து நினைந்து வேதனைப்படல். எனவே

இந்நான்கும், துன்பம் என்ற ஒன்றனையே உணர்த்து வதை யறியலாம். அவற்றில், கவலையே ஈண்டு ஆசிரியர் எடுத்துக் கொண்டது. ஏனெனில், மனம்பெற முடியவில்லையே என்ற ஏக்கத்தினுல் தான் தீவினை வளர்கிறது. எப்படியும் பெற வேண்டும் என்ற எண்ண மும், பெறுவதற்கு முயற்சியும், தவருன வழியிற் செல் வதற்குக் காரணமும் மேலும், பழியும் பாவமும் தேடிக் கொள்வதற்குரிய நிலையும், இக் கவலையாலேயே உண்டா கின்றன, என்பதனை உணர்த்தவே, 'மனக் கவலை' என்ற தொடரினை ஆசிரியர் குறிப்பிடுவாராயினர். ஆகை யால், மனக் கவலை மாற என் செய்வது என்பதே உயிர் களின் குறிக்கோளாகும். உயிர் உண்மையிலேயே இன்ப நோக்குடையது தானே. ஆனுல், வினைப்பயனுல், பெற்ற, மனக் கருவியாம் நுண்ணுடல், துன்பமாய கவலையையே உடையதாயிற்றே, அம்மனத் துணை கொண்டு எங்ஙனம் வேறு நோக்கிற் செல்ல முடியும்? முடியாதன்றே? துன்பமோ முடிவில்லையே, ஆற்று வெள்ளம் போல், பெருகிக் கொண்டே இருக்கிறதே யன்றிக் குறைந்த பாடில்லையே, என் செய்வது, என்று திகைக்கும், வழியறியாது மயங்கும் உள்ளத்திற்கு மருந் தாய் அமைந்தது, இத் திருக்குறள்.

தன்னின் மிக்காரும் ஒப்பாரும் இல்லா ஒருவனு டைய தாளைச் சேர்தல் என்பது, சார்பில், உயர்சார்பினைக் குறிப்பதாகும். உயிர், சார்ந்ததன் வண்ணமாய் ஒழுகு வது, அச்சார்பினுல் உண்டாம் இன்ப துன்பங்களை யனுபவிப்பது. உயிர் அறியாமையால் வினை வழிப்பட்டு மனச்சார்பினுல், கவலையே பட்டுக் கொண்டு கிடக்கிறது. எப்போது, இந்தக் கவலை தணியும் என்ற நிலை அறிவின் தூண்டுதலால் எழுகிறதோ அப்போது ஏன் இந்தக் கவலை யுண்டாயிற்று என்றும் ஆராயும். இன்ன செய்தால் தான்

கவலை தணிய முடியும் என்ற தெளிவும் ஏற்படும், அச் செயலைச் செய்யவும் எழும். இந்த நிலைகளில், மாற்றம் பெற வேண்டும். இதுபோது, மனம் சென்ற வழியே உயிரும் சென்று வினைக் கீடாய துன்பங்களையே அனுப வித்து வருகிற நிலையில் மாற்றம் ஏற்படாது. ஒளியினைக் கண்டு, உணவென்று மயங்கி விழுந்து உயிர்விடும் பதங்கம் போல, பொய்யான துன்பத்தை இன்பம் என்று மயங்கி அத் துன்பத்தையே அனுபவித்து மேலும் பெற முடியாத ஏக்கத்தால் கவலையில் வீழ்ந்து துடிக்கும் மக்களை உண்மை சுட்டி அழைக்கிறார் திருவள்ளுவர். 'மனக் கவலை' என்று. அதன் மாற்றமாவது அதன் வழி யோடாது, அம்மனத்தைத் தன் வழிவரும்படித் திருப்புவ தாகும். அது தான் மாற்றம். மாற்றம் என்ற சொற்கே, மறுதலை, எதிர் என்றும் பொருளல்லவா? நம்மைத் துன்ப வழியில் இழுத்துச் செல்லும் மனத்தை. நமக்கு நன்மை பயக்கும் நல்வழியில் திருப்புதல், மாற்றமாகும். நன்மை பயக்கும் வழி நமக்குத் தெரியாது. நாமே யறியும் அறி வும் நமக்கில்லை. நாம், நம்மின் மிக்கார் காட்டக் காண வேண்டும். கண்டவர் காட்டக் காண வேண்டும் ஆகை யால் திருவள்ளுவர், நமக்குக் குருவாய் நின்று காட்டுகிறார். 'மனக் கவலை மாற்றலரிது' என்று. ஆனால் முடியாது என்று கூறிவிடுவது மிக மிக எளிது. அதனைச் செய்து முடிப்பது அரிது. செயற்கரிய செய்வார் தாமே பெரியர். ஆகையால், மனக் கவலையை எளிதில் மாற்றிவிட முடி யாது. மாற்றம் கண்டு விட்டால், அதனினும் அரிய செயல் மற்றொன்றில்லை. என்பாராய், செயலின் அருமை தோன்ற மனக் கவலை மாற்றலரிது என்றார். அன்றியும், மாற்ற முடியாது என்று சும்மா இருந்து விடல் அறியாமை யாகும், மேலும் மேலும், மனக் கவலையில் ஆழ்ந்து விடலும் அறியாமையாகும். ஆகையால் மாற்றித் தான் ஆகவேண்டும் என்பதனை வலியுறுத்து மனமெனக் கூறுது. 'மனக் கவலை' என்று கூறினார்.

இங்ஙனம் அருஞ் செயலை நினைவுபடுத்தி அச்சுறுத்தினுற் போதுமா? யாரும், சொல்லுதற் கெளிதுதான். அதற்கு வழி காட்ட வேண்டும். முயற்சியுடையார் அவ்வழிச் சென்று பெருமையடைய முடியும். ஆகையால் அதற்குரிய வழியும் ஆசிரியரே தாள் சேர்ந்தார்க்கு 'மனக் கவலை மாற்றல் எளிது' என்றும் அருளுவாராயினர். உலகில், மனக் கவலையுடையார் பலராகவும், மாற்றிய செயலுடையார் சிலராகவும் காட்சியளிப்பதால், உள்ளவாறே பலரால் முடியாத செயலை, முடியாது என்ற வாய்பாட்டால், அரிது என்று கூறி அரிய முயற்சி செய்வார்க்கு எளிது என்ற பொருள் படும்படித்தாள் சேர்ந்தார்க் கல்லால் அரிது. என்று முடிப்பாராயினுர்.

எனவே ஒழுக்க நெறி நின்ற சான்ருேர்க்கு, மனத்தின் கவலை நிலையுணர்ந்து, அதனை மாற்று நிலை கருதும் போது, தனக்குவமையில்லாதான் தாள் சேர்தலாம் நல்வினை கூடினுல் அன்றிக் கவலை மாற்றல் அரிது என்று, உண்மை நிலை அறிவுறுத்தவாரும்.

> 'உடற்கு வரும்இடர் நெஞ்சு ஓங்கு பரத்துற்ருேர்
> அடுக்கும் ஒருகோடியாக-நடுக்கமுருர்' என்று

இக் குறட்பாவின் செம்பொருளைப் பிற்காலச் சான்ருேர் சுருக்கிக் கூறியமையாலும் தெளியலாம். இருவகை உடலில், நுண்ணுடலாய மனத்தை ஈண்டுக் குறிப்பிட்டதும், அதன் நிலை விளக்கியதும் ஆகும். இத் திருக்குறட் கருத்தினை அனுபவ வாயிலாக, ஞானசம்பந்தப் பிள்ளையார், கூறுவதனை நாம் இனியறியலாம். மேலும் மாற்றத்தினை, தீவினைப் பயனும் கவலையிற் படுத்தும் மனத்தினைப் பிரித்து முன்னிலைப் படுத்திக் கூறு முகத்தால், குறளுக்கு விளக்கம் செய்வது போலவே விளங்குவதையும் காணலாம். அல்லாமலும், சரீரமே தானென்று, மயங்கும் மயக்க

அறிவினை விலக்கி, உடலுக்கு வேருக, அவ்வுடலை, தனக்கடிமையாக்கிப் பணி கொள்ளும் ஆற்றினையும் அறியலாம். வஞ்சப் புலனைந்தின் வழியடைத்து, பசு கரணங்களைப் பதிகரணமாக்க, நாம் செயல்பட வேண் டிய முறையினைத் திருவள்ளுவர் காட்டிய சூத்திரப் பொருளை விளக்கமாக, இன்னிசைச் செழுந் தமிழில் வடித்து, அன்பினுல் ஆவியோடாக்கை, ஆநந்தமாய்க் கசிந்துருக வைக்கும் நிலையினையும், நம்மனோர்க்கு அருள் வசனமாக, ஆசிரிய வசனமாக அமைவதையும் நாம் கண்டு மகிழலாம். இருவர் தம் கருத்தும் அனுபவமும் ஒரு நிலையில், உடன்பாட்டு முகத்தானும் எதிர் மறை முகத்தானும், படர்க்கைப்படுத்தியும் முன்னிலைப் படுத் தியும் கூறியமை கண்டு மகிழலாம்,

திருச்சிற்றம்பலம்

'நன்னெஞ்சே உனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத்து ஆரமுதை யெப்போதும்
பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே'

திருச்சிற்றம்பலம்

(2—4—3)

இத்தீந்தமிழ் இன்னிசைப்பாவில். நன்னெஞ்சே என்று தொடங்கியுள்ளமை, திருக்குறளில், மனக் கவலை என்ற தனை மாற்றியமையாகும். கவலையே உருவாம், மனத்தை நன்னெஞ்சே என்றழைக்க வேண்டுமே என்ன காரணம்? வினை வழிச் சென்று வீழ்ந்து அவலப்படும் மனம், கரை யேறித் திருவடித்தோணிபுரம் பற்றும் நிலைக்கு மாற்றம் பெறப்போவதால், நன்னெஞ்சே என்றழைக்கிருர். இன்ப துன்பம் இரண்டனையும், அம்மனத் தொடர்பின்றி யடைய முடியாது ஆகையால், துன்பவிலக்களித்து நன்மைப்

பேற்றுக்கும் அந்நெஞ்சே துணையாவது ஆகையால் நன்னெஞ்சே என்றார். துன்ப நிலை போதும், இனியாயினும் எனக்கு உறுதுணையாய் என்வழி வந்து நல்லன செய்ய வேண்டும் என்றிரந்து மொழியால் வேண்டுகிறார் ஆகையால், நன்னெஞ்சே என்று விளித்தார். எவ்வளவு கொடியராயினும், நாம் அவரிடம் சென்று ஒரு உதவியை நாடும்போது, அவர்களை உயர்ந்தார் என்றும் இனியர் என்றுமே கூறி நன்றி காட்ட வேண்டும், ஆகையால் இதுகாறும், வினைக்கீடாய துன்பத் தாழ்த்தி யிருந்தாலும் நல்வினைப்பட, மாறி நன்மை செய்தற்கும், அந்நெஞ்ச மன்றி வஞ்சமற்ற துணையில்லையாகையால் உதவி நாடும் நிலையில் நன்னெஞ்சே என்று விளித்தருளுகிறார்கள். அறிவற்ற பொருள் எப்போதும் தானே தீமையாதலும், தானே நன்மையாதலும் இன்று பயன் படுத்துவான் தீமையும் நன்மையும் பொருள் மேல் ஏற்றப்படும். செல்வம் தன்னியல்பில் ஒரு வினையுடையது அன்று. நல்லோன் கைப் பொருள் அவன் செய்யும், பல அறவினைகளால், நற்பொருள் எனப் பெயர் பெறுகிறது. கொடியவன் கைப் பொருள் அவன் செய்யும் பல தீவினைத் திறத்தால், தீப்பொருள் எனப் பெயர் பெறுகிறது அங்ஙனம், வினை வசத்தால் செலுத்தப்பட்ட நெஞ்சம், தீவினைப்படும் நிலையினின்றும் மாற்ற மடையும் போது நன்னெஞ்சம் என்றும் புகழப் படுவதும் இயல் பாகையால், ஞானப்பிள்ளையார் நல்வினைப் படரப் போகும் நெஞ்சை நன்னெஞ்சே என்றருளினார். அன்றியும், தன்னையடக்கித்தான் தலைவனுய்த் தன் வழிப் படுத்தும் பொழுது, பணிவும், இன் சொல்லும் கொண்டு பணி கொளல் சான்றோர் நிலையாகலின், முன் செய்த பல தீமைகளையும் மறந்து, இனிச் செயல்படும் நன்மையையே கைக் கொண்டு, அறிவு சான்றோராகையினால் அன்போடு 'நன்னெஞ்சே' என்றழைக்கிறார்கள் எனக் கொளல் சாலப்பொருந்துவதாம். உடலும் மனமும் பழிக்கப்படுவது,

உயிர்க்கு மேலும் வினைகளை உண்டுபண்ணி, மறு பிறவி யில் தள்ளுவதற்குக் காரணமாய் அமைவதனால் தான். இல்லையேல், பிறவித் துன்பத்தைப் போக்கவும், வினைகளை நீக்கவும், திருவடிப் பேற்றையடையவும், அவ்வுடலும், மனமும் உறுதுணையாம்போது, அவை புகழப்படுவதும், போற்றப்படுவதும், வேண்டப்படுவதுமாய் அமைவதையும் மெய்யுணர்ந்தார் வாய்மை மொழிகளால் அறியலாம்.

'வாய்த்தது நந்தமக்கு இதோர் பிறவி மதித்திடுமின்'
என்றும்,
'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமா நிலத்தே'
என்றும், சொல்வேந்தர் பணித்தமையும், அவர்களே,

'பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக்கே இரைதேடி அலமந்து
காக்கைக் கேயிரையாகிக் கழிவரே'

என்றும், இருதிறனும் அருளியுள்ளமையை யறியலாம். அங்ஙனமாக, மனம், நல்வழிப்படும் நிலையில் முன்பற் றினை விலகி, உண்மைப் பற்றினை மேற்கொள்ளும் நிலை யில், வியத்தகு மாற்றம் கண்ட பிள்ளையார் நன்னெஞ்சே என்றழைக்கிறார்கள். ஊனும் உயிர் வாழ்க்கை வெறுத்து ஒறுத்திட, அந்நெஞ்சமே துணை. வைரத்தைக் கொண்டே வைரத்தை அறுப்பது போலவும், இரும்பைக் கொண்டே இரும்பைத் துணிப்பது போலவும், பிறவியைக் கொண்டே பிறவியை அறுக்க வேண்டும். ஆகையால், இறைவனுடைய தண்ணளியும் தனுகரணபுவன போகங் களை யுயிர்கட்கு அளித்தமை அந் நிலைக்கே யாதலின். இதுபோது, ஜடமாய் நின்ற அந்தக் கரணமாம் மனமும், சத்தாய் நின்ற சிவபரம் பொருளின், திருவடியைச் சார்வ தற்குத் துணை செய்யும் பெருங் கருவியாய் அமைந்து நிற்றலின், அதன் அருமைப்பாடு அறிந்து, அனுபவ வாயிலாக, நன்னெஞ்சே என்றழைத்தருளினார்கள்.

கரு நரம்பும் வெள்ளெலும்பும் கதித்துத் தசை, வழு மலமூத்திரங்களை உள்ளடக்கித் தோல் போர்த்த உடலில், குழம்பிக் கிடக்கும் ஆத்மாவைத் தானென உணர்ந்து, அவ்வுடற்கு அந்நியமாய் உயிர் இருப்பதை அனுபவ மாய்ப் பிரித்துத் தான் வேறு உடல் வேறு எனப் பிரிந்து நின்று, மேலும் நெஞ்சமாய நுண்ணுடம்பும் தான் அன்று என்று பிரிந்து அந்நெஞ்சத்தைத் தன் வழிப்படுத்தும் நிலை யில், முன்னிறுத்தி நன்னெஞ்சே என்றழைக்கின்ற அனு பவ நிலையினைப்பிள்ளையார் நமக்குக் காட்ட ஞானப் பிள்ளை யார் 'நன்னெஞ்சே' என்றருள் செய்தனர். தத்துவ தரிசனம், தத்துவ விமர்சனம், தத்துவ அனுபவம், தத்துவ விமோசனம் என்ற நான்கனுள், ஆத்ம ஞானிக்கு தத்து வங்களைத் தனித்துக் காண்டலும், தத்துவங்களின் உண்மை நிலை அறிதலும், தத்துவங்களை உள்ளவாறு அனுபவித்தலும், அவற்றினின்றும் நீங்கி நிற்றலும் ஆகும் ஆகையால், நெஞ்சமாய தத்துவத்தினின்றும், நீங்கி முன்னிறுத்தி, அடிகள் நன்னெஞ்சே என விளித்துத் தம் ஆத்ம பரிபாக நிலையை நம்மனோர்க்கு பக்தி முறையில் காட்டியமையும் நாமறிதல் வேண்டும். இங்ஙனமாக நெஞ்சை விளித்த அடிகள் அந்நெஞ்சுக்கு ஓர் அறிவுரை கூற விழைகிறார்கள். இதுவரை வாழ்வென்பதின்ன தென்றறியாது வல்வினைப்பட்டு, அவலக் கடலாய வெள் ளத் தழுந்தி, என்னையும் அழுத்தி எனக்கும் கேடு விளைத்து, உனக்கும் கேடு சூழ்ந்து வீழ்ந்து கிடக்கிறாய், நெஞ்சே! இந்நிலையினின்றும், மீண்டு, மாற்றமடைய வேண்டும். இல்லையேல் உய்வில்லை என்பதனை அறு வுறுத்துவாராய் 'உய்வ தனை வேண்டுதியேல்' என்று கூறுவாராயினர். உய்வு, பிழைத்துக் கோடல். அது மாத்திரம் அன்று, இதுவரை செய்த தவறுக்குக் கழுவாய் தேடலும், உய்வு ஆகும். ஆகையால் சுவாமிகள், துன்பக் கடலினின்றும் பிழைப்பதோடமையாது, இது

வரை செய்த தவறுக்கும் உய்தி வேண்டுமேல், நான் சொல்வதைக் கேட்க வேண்டும் என்றருளினர். எனக் குந் துணையாய் நீயும் நல்வழிப்படுதல் வேண்டும் என்பார். வேண்டுகோள் மொழியால், 'உனையிரந்தேன்' என்றருளு கிரூர். நன்னெஞ்சே உய்வதனை வேண்டுதியேல் உனை யிரந்தேன் என்று பன்முறை பாடிப்பார்த்தால், உயிரின் அவல நிலையும் நெஞ்சின் இன்றியமையாத் துணையும், அந்நெஞ்சமே தஞ்சமாய் அல்லது, திருவடிப்பற்றுக் கிட் டாது என்ற ஏக்க உணர்வும் தெற்றென விளங்கும். அனு பவ மொழிகளையும், அறிவு மொழிகளையும், பலகால், பாடி யும், சிந்தித்தும் தெளிவுபெற வேண்டும். அதனுல் தானே, அத்தகு சான்ருேர், இசைப்பாவாலும், இன் தமிழ்ச் செய்யுளாலும் வடித்துத் தந்துள்ளனர். ஆகை யால், நன்னெஞ்சே உனையிரந்தேன், உய்வதனை வேண்டுதியேல்' எனக் கூறியமையின் அழகினைப் பல கால் பாடி மகிழ்க.

பின்னர், நம் பெருமான் என்ற தொடர் பல பொரு ளாழங்களையுடைய தொடராகும். நம் என்ற சொல், தன்மையையும், முன்னிலையையும் உள்ளடக்கிய தன்மைப் பன்மைச் சொல்லாம். நாம் என்றதன் திரி சொல். தமிழில், தன்மைப் பன்மை மூவகைத்து. முன் னிலை யடக்கிய தன்மைப் பன்மை, படர்க்கையடக்கிய தன்மைப் பன்மை, முன்னிலையையும் படர்க்கையையும் அடக்கிய தன்மைப் பன்மை என. இவற்றுள் நம் என்பது, முன்னிலையை யடக்கிய தன்மைப் பன்மை. இறைவன், தத்துவங்கட்குத் தலைவன், உயிர்கட்கும் தலைவன். தத்து வங்களுள் ஒன்ருய நெஞ்சிற்கும் ஆத்மா வாய தனக்கும், தலைவன் என்ற உண்மையை நமக்கு உபதேசிக்க, அடி கள் முன்னிலைப்படுத்திய, நெஞ்சிற்கும் தனக்கும் தலைவன் என்பதை உணர்த்த, நம் பெருமான் என்றருளினர். உலகம்

உயிர் கடவுள் என்ற மூன்றில், உலகில் உடலோடு கூடி வாழும் உயிர்கள். தத்துவக் கூட்டத்திஞல், தலைவனை மறந்து வாழ்கின்றன. அதனை நமக்கு அறிவுறுத்தவே, நம் பெருமான் என்றருளினுர். மேலும், உலகம் அறிவ தறிந்து கொள்ள முடியாத நிலையினது, உயிர்கள் எண் ணற்றன. அவையனைத்துக்கும் ஒருவனே தலைவன் என் பதனை உணர்த்த நம் என்ற பன்மையும் பெருமான் என்ற ஒருமையும் கொடுத்து நம் பெருமான் என்றருளினுர். அல் லாமலும், தனக்குவமையில்லாதான் என்ற பொருளினை, அவன் உண்டாக்கிய, உலகமும் உயிர்களும் அவனுக்கு உடைமையும் அடிமையுமாகும், அவன் அவ்வனைத்துக் கும் மேலானவன் அவனே தலைவன், அவனே பெரியவன் அவனையொப்பாரும் மிக்காரும், இல்லை என்றருளுவார், 'நம் பெருமான்' என்றருளினுர்.

'நன்னெஞ்சே உனையிரந்தேன் உய்வதனை வேண்டு தியேல் நம் பெருமான் திருவடியே உன்னஞ்செய்திரு கண்டாய்' என்றதில், 'நம் பெருமான் திருவடியே உன்னஞ்செய்திரு.' என்பதே அறிவுரையும், அருளுரை யும், உபதேசமும் ஆகும். திருவடி என்பது, தாள் என்பதன் பொருளுரை. இன்பந்தரும் சேவடி என்ப தனைத் திருவடி என்றதாகும். நம் பெருமானது திருவடி என்றது, தலைமையும், அடிமையும் குறித்தவாரும். 'எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனே எம்பெரு மான் திருவடியே எண்ணின் அல்லால்' என்று அப்பமூர்த் திகளும் இறுதியாகக் கூறியமையும் ஈண்டு எண்ணத் தகும். 'உன்னஞ் செய்திரு' என்றருளியது, நினைத்தல், நினைப்பில் அழுந்தல், என்ற பகுதியினை உட்கொண்டது. உன்னுதல் நினைத்தல், இருத்தல், அந்நினைவிலேயே நிலை நிற்றல். மனம் அலையுந் தன்மையுடையது, இடையருது, வேறு வேறு நினைத்துக் கொண்டே இருப்பது. என்

நினைந்தோம் என்பதனைத் திருப்பி நினைக்கும் ஆற்றல் கூட இல்லாதது, அதனால் தான், அலைந்து திரியும் குரங்கினை யும், எப்போதும், அசைந்து கொண்டிருக்கும் காற்றினை யும் மனத்துக்கு உவமை கூறுவது. ஆகையால், நெஞ்சே நினை என்றருளிய அடிகள், நினைத்து, வேறு நினைவுக்கு ஓடிவிடாதே, அந் நினைவிலேயே தங்கிவிடு. என்பாராய் உன்னஞ் செய்து இரு என்றருளினார்கள். நினைவில் தங்கிவிடுவது, யோகத்தில் தியானம் என்ற மூன்றாவது நிலையாகும். நான்காவது அனுபவ நிலையாகிய சமாதி யாம். ஆகையால், அதனையே நினைந்து இருத்தலாகிய மூன்றும் நிலையினை, மனம் அழிவதற்கு முந்திய நிலையினைக் காட்டுவாராய், நன்னெஞ்சே, நம் பெருமான் திருவடியே உன்னஞ் செய்திரு கண்டாய் என்றருளினார்கள்.

எவனொருவன் எதனை அழுத்தமாக நினைக்கிறானோ, அவனதுவாய் விடுவான் என்ற மனோதத்துவப்படி, உன்னஞ் செய்திரு, புறமே சென்று பொய்த்துப் போகாது உய்வு பெறலாம் என்றருளியமை புலனாம். இனி, இறை வனுடைய பெருமையினைக் கூறுகிறார். இறைவன், அறிவு வடிவினன், கருணை வடிவினன். இந் நிலையினை வள்ளுவர், வாலறிவன், அந்தணன் என்ற சொற்களால் காட்டுவார். ஆனால், திருஞானசம்பந்தர், பிரம புரத்து, ஆரமுது, நம் பெருமான் என்றருளுகிறார். பிரமபுரம், ஏடுடைய மலரான் முனை நாட் பணிந்து ஏத்தப் பெற்றமை யால் பெற்ற பெயர். பிரமனுக்கு, அறிவினன், வேதன் என்றும்பெயர். அவனால் வழிபடப் பெற்றவன், பிரம புரத்து நம் பெருமான். ஆகையால், அறிவினுள் அறி வால் மன்னும், உண்மையறிவினன் என்பது அடிகளின் கருத்து. அதனால் தான் பிரம புரத்து நம் பெருமான் என்றருளினார். பிரமபுரம் எத்தகையது எனில், அன்னஞ் சேர்பிரமபுரம். அன்னம், இரு பெருமையுடையது. ஒன்று,

நடையழகு, மற்ருென்று, நீரையும் பாலையும் பிரித்துண்ணும் செயல். இவ் விரண்டினையும் உடைய அன்னந்தான் பிரமபுரத்தைச் சேர முடியும் என்று காட்டுவாராய் அன்னஞ்சேர் பிரமபுரம் என்ருர். இக் கருத்துடையடையால், ஒழுக்க உயர்வும், தீவினையின் நீங்கி நல்வினைப்படும் பரிபாகமும் உடைய நல்லோர் சேர் பிரமபுரம் என்ற கருத்தும் விளங்கும். அல்லாமலும், மனக்கவலையாம் துன்பக் கடலினின்றும் நீங்கி, இறைவன் திருவடியாம் அமுதக் கடலைப் பற்றுவதற்கும், அன்னமனையாரால் தான் முடியும் என்பதனையும் அன்னஞ்சேர் பிரமபுரத்து நம் பெருமான்' என்ற குறிப்பு உணர்த்துகிறது. மேலும், இறைவன், மெய்யறிவானவன் என்றதோடு, அந்தணன் என்பதனை, ஆரமுதை என்ற சொல்லால் விளக்குகிருர். அமுதம், இன்பப் பொருளாயது. ஆரமுதம் அடைதற்கரியது. ஆகையால் அடைய முடியாத, இன்பப் பொருளாய் உயிர்கட்கு அனுபவப் பொருளாயிருப்பவன் என்பதனை உணர்த்த 'ஆரமுதை' என்றருளினுர்கள். அறிவும் அருளுமாய் விளங்கும் நம் பெருமானை, 'நன்னெஞ்சே, எப்போதும் உன்னஞ் செய்திரு' என்று உத்தரவு போடுகிருர்கள். அதற்கு மேலும், அம் மனத்தின் வழியோடும் பொறிகளையும் காட்டுகிருர்கள். பொறி வழி மனம் சென்று புலன்களைப் பற்றுகிறது. மனம் நினைக்கிறது, வாய் பேசுகிறது, பொறிகள் பற்றுகின்றன. வாயைப் பேசவைக்கும் போது, மனந்தானே நினைவை ஒலியாக்கிப் பேச வைக்கிறது. ஆகையால், மனம் நம் பெருமான் திருவடியே உன்னஞ் செய்திருப்பதனை உரை வாய் அவன் புகழே பேசவேண்டும், அவன் புகழ் பேசு மேல் வாய், மனம் அவனையே நினைக்கிறது என்று அறிய முடியும். அஞ்சியாயினும், அன்பு பட்டாயினும், அவனடியே நினைப்பதனை வாய்தானே சொல்லிக் காட்ட வேண்டும். ஆகையால், அடிகள் வாயதுவே, நம் பெருமான் சீர்பன்னும்

என்றருளினூர்கள். ஐம்பொறிகளில், கண் தலையாயது. ஆகையால் கண்ணே, ஆரமுதைப்பார் என்றருளினூர்கள். எனவே உடற் செயலாம் பொறிகளின் செயலும், வாயின் செயலும், நுண்ணுடற் செயலாம் மனத்தின் செயலும், ஒரு வழிப்பட்டுத் திரிகரணங்களும், நம் பெருமான் திருவடியே உன்னஞ்செய்து, பாடிக், கண்டு நிற்குமேல் மனக் கவலையாம் துன்பம் நீங்கி உய்தி பெறலாம் என்று, அம்மனத்தையே வளர்த்தருளிய ஆற்றினை நம் ஞானசம்பந்தப் பிள்ளையாரது அரிய திருப் பாசுரத்தால் அறிகிறோம். அதனையே, திருவள்ளுவரும் தனக்குவமை இல்லாதான் திருவடிச் சேர்வுதான் மனக் கவலையை மாற்றும், என்றருளியதையும் முன் கண்டோம். இவ்வாறே அறிவனூற் பொருளும் அனுபவ வசனமும் ஒன்று படுவதை மேலும் எட்டாவது குறளிலும் அறியலாம்.

‘ தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது ’

திருச்சிற்றம்பலம்

‘ நன்னெஞ்சே உனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுதியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை யெப்போதும்
பன்னும்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே ’

திருச்சிற்றம்பலம்

(2—4—3)

# 8

‘ அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது ’

உலகில் காணப்படும் நிலையிரண்டே. ஒன்று பகல் மற்றொன்றிரவு. இதனடியாக உணர வேண்டிய பல உண்மைகள் உண்டு. இவற்றுள் சில, நன்மை தீமை இன்ப துன்பம், அறிவு அறியாமை என்பன. நன்மை தீமைகளை அறம் என்றும் மறம் (பாவம்) என்றும் கூறுவர். அறிவின் செயல் அறம் என்பர். அறியாமையின் செயல் மறம் என்பர். அறிவின் செயலாகிய அறத்தின் பயன் இன்பம், அறியாமையின் செயலாய மறத்தின் பயன் துன்பம். இவ்வாறே, அறியாமையை இருள் என்றும், அறிவை ஒளி என்றும் கூறுவது மரபு. அறியாமை இருட்டில் நீங்கி, அறிவொளி பெற வேண்டும் என்பது புலவர் வழக்கு மாத்திரம் அன்று. பொருளை உணராத படிச் செய்வது அறியாமை. பொருளை உணர்வது அறிவு. பொருளைக் காணாதபடி செய்வது இருள், பொருளைக் காணத் துணை செய்வது ஒளி. அனைத்துப் பொருளையும் விளங்க வைக்கும் பேரொளிப் பொருளும் உண்டு. வேண்டிய பொருளை மாத்திரம் காணச் செய்யும் விளக்குகளும் உண்டு. பேரொளிப் பொருளாய சூரியன் இயற்கை. சிற்றொளி விளக்கு செயற்கை. அதுபோலவே சில பொருளை யுணரும் அறிவு, சிற்றறிவு. அனைத்தையும் உணரும் அறிவு பேரறிவு. மெய்யறிவு முற்றறிவு. தானே உணரும் அறிவு மெய்யறிவு, உணர்த்த உணரும் அறிவு சிற்றறிவு. தன்னிடத்தே உள்ள ஒளியால், பொருளைக்

காணச் செய்யும் பகலவன் ஒளிக்கும், எண்ணெய் திரி அகல் இவற்ருெடு கூடிய விளக்கின் ஒளிக்கும் எவ்வளவு வேற்றுமை? தானே ஒளியாய் விளங்கும் பகலவனுக்கும், செயற்கையால் எரியும் விளக்கின் ஒளிக்கும் ஒப்புமையுண் டோ? தோன்றி மறையும் மின்மினி போன்ற விளக்கிற்கும், எப்போதும் ஒளிவீசும் இயற்கைப் பகலவனுக்கும் என்ன தான் ஒற்றுமை? ஒளி யென்ற ஒன்றே. அதுபோலத் தான், அறிவே உருவாய் விளங்கும் இறைவனுக்கும், உணர்த்த உணரும் சிற்றறிவுடைய உயிர்கட்கும் ஒப்பும் ஒற்றுமையும் ஆகும். உயிர்க்கும் அறிவுண்டு என்று பேசப்படும் அம்மாத்திரமே யன்றி, வேறு தாஞக அறியும் அறிவோ, அனைத்தையும் அறியும் அறிவோ அவ்வுயிர்க் கில்லை. ஆகையால் எதனையறிவது? எப்படி யறிவது? எது நல்லது? எது தீயது? எது சுகம்? எது துன்பம்? என்று தானே யறிய முடியாத நிலையில் உள்ளது உயிர். இந்நிலை மாற்ற மடைய, இந்நிலை நீங்கித் தானே யறிய வும், அடையவும் கூடிய நிலை பெற, அவ்வுயிர் என் செய் வது என்ற விஞவிற்கு விடையாக வருவதே எட்டாவது திருக்குறள்.

> ‘அறவாழி அந்தணன்தாள் சேர்ந்தார்க் கல்லால்
> பிறவாழி நீந்த லரிது.’

பொறிவாயிலைந்தவித்தான் என்ற தொடர்க்கு விளக்கம் அந்தணன் என்பது. பொய்தீர் ஒழுக்கம் என்ற சொற் ருெடர்க்கு அறவாழி என்பது விளக்கமாக நிற்கிறது. இது பின்னும், ‘அறன் வலியுறுத்தல்” என்ற பாயிர இறுதியிலும், ‘அந்தணர் என்போர் அறவோர்’ என்ப தஞல் விளக்கம் பெறும். எதனையும் இடை நிறுத்தி முன் பின் கூட்டிப் பொருள் காண வைப்பது அறிவின் ஆற் றலைப் பொறுத்தது. அறிவு அறியாமை, இன்ப துன்பம், என்றவைகட்கு இடையில், அறம் மறம் என்பதனை நிறுத் திஞல் அறிவால் அறமும், அறத்தான் இன்பமும் எய்தும்

என்பதனையும், அறியாமையால் மறமும், மறத்தால் துன்பமும் வினையும் என்பதனையும் உணர முடியும். 'அறத்தான் வருவதே இன்பம்" என்ற முடிபினையும் உற்று நோக்கின், இது தெற்றென விளங்கும். இவ்வாறு பொருளழகுபட நிறுத்தி விளக்குவது திருவள்ளுவனார்க்குரிய தனிச் சிறப்புடை ஆற்றலாகும். கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழல். நற்றாள் தொழலின் பயன் பொய்தீர் ஒழுக்க நெறி நிற்றல். பொய்தீர் ஒழுக்க நெறி நிற்றலின் பயன் என்ன? என்பதனை விளக்க வேண்டுமே. அதுதான் இக் குறளால் விளக்கம் செய்வது. பிற ஆழி என்பது — துன்பக் கடல். குறள் சூத்திரம் போன்றது. ஆடியினைப் போன்றது சூத்திரம். ஆடி சிறிதாயினும், பெரிய உருவத்தினையும், குறைபடாது காட்டி விடுவது போலச் சூத்திர மாய குறள் சிறிதாயினும், பெரிய பொருளை விளங்கச் செய்துவிடும். அறவாழி அறக் கடல், பிறவாழி பாவக்கடல். அந்தணன் உள்ளத் துறவும் உயர் ஒழுக்கமும் உடையன். உயர் ஒழுக்கம், காணா உயிர்க்கும் கையற்றேங்கும் கருணை உள்ளமுடையனாதல். அறம், கடல் போன்றது. கடல் போன்ற அறம் என்னாது அறத்தையே கடல் என்றார். தண்ணளியுடையான் என்னாது அந்தணன் என்றார். கருணை உள்ளம் அவன் செய்யும் அறச் செயலால் விளங்கும். பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் உரைகல் செயல்தான் அன்றோ? ஆகையால், பிற உயிர்க்கும் நன்மைச் செயலாம் அறச் செயலையே இடையறாது செய்தொழுகும் அந்தணன் என்பதை அறவாழி அந்தணன் என்ற சொல்லால் விளக்கினார். அந்நிலையில் உள்ளான் ஒருவனே என்பார், அந்தணன் என்ற ஒருமையால் விளங்க வைத்தார். முன்னும் முற்றறிவுடையான் ஒருவன் என்பதனை, வாலறிவன் என்ற ஒருமையாலும், சிற்றறிவுடைய உயிர் எண்ணில. அவற்றுள்ளும், உயர்

பிறவியெடுத்த மக்கட் கூட்டமே உணரும் ஆற்றலுடை யது என்பதனை விளக்கத் தொழார் எனின் என்ற பன்மை யாலும் கூறினமையும், பிற இடங்களனைத்தும், இறைவனை ஒருமையாலும், உயிர்களைப் பன்மையாலும் முறையாகக் குறிப்பிட்டமையும் கூர்ந்து நோக்கி யறியலாம். ஏகினுன் சேர்ந்தார், இலான் சேர்ந்தார், இறைவன் புரிந்தார் அவித்தான் நின்றார் எனக் கூறியமையும் காண்க.

> பிறவாழி என்பதனைப் பிறரெல்லாம் நூலின் போக்கினை
>
> மனங்கொண்டு, பொருளின்பங்களாய கடல்

எனக் கூறினர். அங்ஙனம் கூறினுராயினும், பொருளால் பெரிதும் மாறுபாடின்று. ஏனெனில், அறவாழி என்றதனு லேயே, பிற என்பது அறத்துக்குப் புறம்பான பிற என்றே பொருள்படும் எனக் கொளல் தகும். எனவே, இரண்டி லிருந்து அனைத்தும் என்பதில் மாறுபாடின்று. திருக் குறளாய நூல், அறம் பொருளின்பம் என்ற மூன்றனைப் பற்றிப் பேசுவது. ஆகையால், அறவாழி என்றதும், பிற வாழி என்பது பொருளின்பங்களாய மற்றிரண்டினையும் குறிப்பதாகும் என்று கொண்டனர். ஆனுல், ஆசிரியர் அறிவு அறியாமை, அறம் மறம், இன்பம் துன்பம் என்ற நிலையில், அறிவால் நிகழும், அறத்தின் பயனும் இன்பத் தினை, உயிர் நிலையினின்றும் நீக்கி, இறை நிலைக்குக் கொணர்ந்து, முற்றறிவினனுய வாலறிவன், அனைத்துயிர்க் கும் நன்மைச் செயலாம் அறவடிவினன் என்பதனை உணர்த்த வைத்தது இக்குறள் என உணரின், சிற்றறி வினவாய உயிர்கள், தமக்கே நன்மை என்று கருதி அறியாமையால் தீமை விளைவித்துக் கொள்ளும் பாவச் செயல்களைப் பிறவாழி என்ற சொல்லால் குறிப்பிடுகிருர் என்று உணர முடியும். மேலும்,

‘ பணிவுடையன் இன்சொல்லன் ஆதல் ஒருவற்கு
அணி யல்ல மற்றுப்பிற ’

‘ அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல. ’

இக் குறள்களில், பிற, புறத்த என்ற சொற்களால், அடக்கியமை போன்று, பிற ஆழி என்பது அறத்திற்குப் புறமாய மறத்தையே (துன்பத்தையே) குறிக்கும் என்பதனை அறியலாம்.

அல்லாமலும், அறத்தைக் கடல் என்று உருவகம் செய்தது போலவே, மறத்தையும் கடலாக உருவகம் செய்தார். ஆனால், அறத்தைக் கடலாக உருவகம் செய்த தோடமையாது, அறக் கடலாகிய அந்தணன் என்றும் கூறுவதால் இறைவனை அறமே வடிவென்றும், அறத்தை நடத்துபவன் என்றும் கருதுவதை யறியலாம். சான்றோரும், ‘அறவிடைப்பாகா அந்தணு’ என்றழைத்திருப்பதும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாலதாம். தாள் சேர்தல்—அடியொற்றல். ஒன்றில் உழன்றுன் மற்றென்றில் நுழைவதற்கு வழி வேண்டும். உயிர்கள் அறியாமையால் தீவினைகளைச் செய்து துன்பக் கடலில் உழல்கின்றன. அத் துன்பக் கடலினின்றும் நீந்திக் கரை காண வேண்டும். கடலை நீந்தக் கூடிய ஆற்றலில்லாத உயிர்கள் ஒரு பற்றுக்கோட்டினுல் தான் நீந்த முடியும். அப்பற்றுக் கோடு ஒழுக்க நெறி. ஒழுக்க நெறி முன்னே விளக்கப்பட்டது. ஐம்புல வேட்கையினின்றும் நீங்கி, அனைத்துயிர்க்கும் செந் தண்மையாம் அறந்தலை நிற்றலே ஒழுக்க நெறி நிற்றலாம். அந் நெறியினை நன்னெறி என்றும், உண்மை நெறியென்றும், அன்பு நெறியென்றும் அறிவு நெறி யென்றும் இடத்திற்கேற்பவும் நிலைக் கேற்பவும் கூறுவர் அறிஞர். ஆயினும், ஒழுக்க நெறி யென்பதே அனைத்திலும் சிறந்த பெயராகும். உயிர்க்கு உண்மையான இன்பப் பேற்றினை

யளிக்கவல்ல உயர் ஒழுக்க நெறியினைப் போற்றலே சிறந்தது என்பதனை ஆசிரியர் பல இடங்களில் குறிப்பிடு வார். இங்கே தொடங்கி வைத்த அம்மாத்திரமே. தோற் றப் பொலிவுடைய பல உறுப்புக்களோடு கூடிய உடல் போன்றது பிற நெறிகள் எல்லாம். ஒழுக்க நெறி, அவ் வுடலின் வளர்ச்சிக்கும், இன்பத்துக்கும் காரணமாய் அமைந்த உயிர் போன்றது. ஏன் உயிரினும் மேம்பட்டது கூட. இதனை ஆசிரியர் 'ஒழுக்கம் விழுப்பந்தரலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' — என்று தானே கூறு வதால் அறிகிறோம்.

அத்தகு ஒழுக்க நெறியைத் தானே வகுத்துத் தானே நடாத்திக் காட்டுபவன் அவனே என்பார், அறவாழி அந்தணன் என்றார் என அறிய வேண்டும். அதனால் தானே தன்னேரிலாதவனும் அவனே தென்முகக் கடவு ளாய் யோக நிலையில் இருந்து அன்று ஆலின் நீழல் அங்கு அந்நால்வர்க்கும் அறமுரைத்தான் என்று பேசப்படுவதும் என்றறிக. அறமுரைத்த பெற்றியோன் அறவாணனாய், அந்தணனாய் நின்று காட்டிய நிலையினை உணர்ந்து, பரி பாகமடைந்த உயிர்கள் துன்பக் கடலினின்றும் கரையேற, அவனடிப் புணையைப் பற்றுதலையே, வள்ளுவனார் தாள் சேர்தல் என்றார். திருவள்ளுவர் இறைவழி பாட்டை ஐந்து சொற்றொடர்களால் விளக்கினார். தாள் தொழல், அடி சேர்தல், புகழ் புரிதல், நெறி நிற்றல், தாளை வணங் கல்,என்பன அவை. இப்பிரிப்பினை உரையாசிரியர் பரி மேலழகர், மனமொழி மெய்களினால், நினைத்தலும், வாழ்த் தலும், வணங்கலும் ஆகிய முக்கரணச் செயல்களாய் அடுக்கிக் காட்டினார். கடவுள் உண்மையும், உயிர்ப் பன்மையும், உலகப் படைப்பும், உடையான் உயர்வும், உயிரின் இழிவும், உய்வுக்குரிய வழியும், உய்திக்கு மேற் கொள்ள வேண்டிய செயலும், அதனாற் பெறும் பயனும், செய்யா வழிப்படும் இழுக்கும் கூறி, அறிவின் வழித்தாய்

அன்பு செலுத்தும் நெறியினைக் காட்டும் செந்நெறி விளக்கமாய், தமிழ் தழுவிய திருநெறியாய் அமைந்துள்ளது திருக்குறள் கடவுள் வாழ்த்து என்பதனை நாமறிதல் வேண்டும். அதனால் ஆசிரியர் அம் முறைக் கேற்ப, உயிரின் இழிநிலையும், இறைவன் உயர் நிலையும் நினைவு படுத்தியவாறே செல்லும் குறிப்பே தாள் சேர்தல் என்று பன்முறை எடுத்தாளப்பட்டமையாகும்.

சைவ சித்தாந்தப் பெருமக்கள் சித்தாந்த முத்தி நிலையை விளக்க வரும்போது தாடலை போல் நிற்றல் என்பர். அதன் உண்மை தாள்+தலை. எனப் பிரித்து, நிலைமொழியின் இறுதி எழுத்தாயளகரமும் வருமொழியின் முதலெழுத்தாய தகரமும் கூடும்போது, இறுதி முதல் எழுத்துக்கள் இரண்டும் ஒரெழுத்தாய் டகரமாய் நின்று, சொல்லால் இரண்டாய் உணரவும், தோற்றத்தால் ‘தாடலை’ என ஒன்றாய்க் காட்சியளிக்குமாறு போன்று, இறைவனுடைய திருவடிப் பேற்றினை எய்திய உயிர்நிலை, திருவடியின்பத் துய்ப்பிலே, தன்னிலை யழிந்து, அவனே யாய், அனுபவிப்பதனாலே, உயிரெனவும் உரைக்கப்படும் அம்மாத்திரமாய் நிற்கும் என்று விளக்கம் காட்டுவர். இது மேற் கொள்ளப்பட்டது ஏன் எனில், உயிர்கள், துன்ப அறியாமையின் நீங்கி, அறவாணனும் அந்தணனுடைய தாளைச் சேர்தல், ஈண்டுக் குறிப்பிடுவது துன்ப நீக்கத்தின் பொருட்டே என்பதனை யுணர்த்தவே, என அறிக. இருள் நீக்கமும் ஒளி விளக்கமும் முன்பின் இன்றி, ஒரே நேரத்தில் நிகழ்வது போல, துன்பவிலக்கும் இன்ப அனுபவமும் ஒரே நேரத்திலே நிகழ்வது என்பதனை உயிர்கள் துன்பக் கடலில் நீங்க வேண்டுமானால் இன்ப அறக் கடலாய அந்தணன் தாள் சேர வேண்டும் என்று கூறுவதால் அறிய வைக்கிறார். அறிவும் அறியாமையும், ஒளியும் இருளும் போன்றன என்பது முன்னே விளக்கப் பட்டது. புறப் பொருளை மறைப்பது இருள். உயிர் விளக்

கத்தை மறைத்துக் கொண்டிருப்பது அறியாமை. இதனை அவிச்சை, மயக்கம், அகங்காரம் என்ற சொற்களாலும் குறிப்பிடுவதுண்டு. அனைத்துவித துன்பங்கட்கும் முதலாய் நிற்பதனாலும், முன்னாய் நிற்பதனாலும், மூல மலம் என்று கூறுவதும் உண்டு. ஆகையால் இடை நின்ற துன்பமும், முன்னின்ற மூலமலமாய அறியாமையால் விளைவதே என்பதனை உணர வேண்டும். எனவே, அறியாமையாகிய மூல மலமும், அதன் காரணமாய் விளையும் தீவினையும் அதன் பயனாய் விளையும் துன்பமும், கடல் போல் மிக்கிருப்பதனால், பிறஆழி எனப் பன்மையாற் கூறிக் காட்டினார். அன்றியும் மூல மலமும், அதன் விளைவாய தீவினையும், அதன் விளைவாய துன்பமும் காரண காரியத் தொடர்ச்சியால் உயிர்களைப் பிணித்து ஆழ்த்துவன ஆகையால், அலைபோல் தொடர்ந்து வரும் நிலை கருதி, பிறஆழி எனக் கூறினார் எனினும் அமையும்,

‘தொடர் வரும் வெவ்வினைத் தொடர்பால்
பவத்தொடர்பு அப்பவத்தொடர்பால் தொடரா நிற்கும்
விடலரும் வெவ்வினைத் தொடர்பு அவ்வினைத் தொடர்புக்கு
ஒழிபுண்டோ வினையேற் கம்மா.
இடர்பெரிதும் உடையேன் மற்றென்செய்கேன்
என் செய்கேன்
அடலரவம் அரைக்கசைத்த அடிகேளோ! அடிகேளோ!’

எனவரும் திருப்பாசுரமும் பிறவிக்குக் காரணம் வினை என்பதும் வினைக்குக் காரணம் அறியாமை என்பதும் பயன் துன்பம் என்பதும் உணர்த்தியவாறு காணலாம். இங்ஙனம் உணர வைக்குமுகத்தான், அந்தணன் தாள் சேர்ந்தார், துன்பக் கடல் நீந்துவர் என்று கூறியதிலும் ஓர் உண்மை யறிய வேண்டும். சார்பு, கருமச் சார்பு, கருமமல்லாச் சார்பு என இரு பிரிவினது. நாம் ஒருவரைச் சார்வது நம்முடைய செயலை அவர் செய்யவும்,

அவருடைய செயலை நாம் செய்யவும் ஆகும். ஆனால், நம்மை ஒருவர் சேரின், நம் செயலை அவர் செய்வார். நாம் ஒருவரைச் சேரின் அவர் செயலை நாம் செய்வோம். அதனால்தானே நீதிநூல் அறிஞரும், நீ உயர்வடைய வேண்டுமானால், உன்னைவிட அருஞ் செயல் செய்து மேம்பட்ட உன்னையுயர்த்தக் கூடிய பெரியாரைச் சேர வேண்டும் என்று 'பெரியாரைத் துணைக்கொள்' என்றும், 'இணக்கம் அறிந்திணங்கு' என்றும் கூறிப் போந்தனர், திருவள்ளுவரும்.

> 'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
> சார்தரா சார்தரும் நோய்.'

என்றும்,

> 'அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
> பேணித் தமராக் கொளல்'

என்றும் கூறிப் போந்தனர்.

அறவாழி அந்தணனுடைய தாளைச் சேர்தலாவது, அவன் கூறிய ஒழுக்க நெறியில் நின்று, ஒல்லும் வகையால் அறவினைகளை ஓவாது செல்லும் வாய் எல்லாம் செயலாகும். அங்ஙனம், பிற உயிர் நலம் கருதிச் செயல் படமுனையும் போது, தன் நலன் கருதிய அறியாமைச் செயல்களாம், துன்பங்கள் தாமே விலகும். விலகித் தானே பிறர் நலம் பேண நேரும். நீந்தல் - விலகல், எனவே, பிறவாழியாம், துன்பக் கடலின் கரை காண்டல், தீவினையினின்றும் மீளலேயாம். அந்தணன் தாள் சேர்தல், அறவினை மேற்கோடலேயாம். இதனை, குண குணி பாவமாக வைத்துக் கூறிய முறையாகக் கொள்க. கொடுமை செய்வாரைக் கொடுமை என்றே கூறிவிடல் போல, ஆசிரியர் வள்ளுவரும், 'இல்லவள் மாண்பானால் இல்லதுஎன்' என, இல்லவளை மாண்பு என்று குணமாகவே கூறியிருப்பதையும் அறிக. அங்ஙனமே, செயற்

பண்பினை உருவகம் செய்து, அழகுபட அந்தணன் தாள் சேர்ந்தார்க்கல்லால், பிறவாழி நீந்தலரிது என்றாராயினும், நல்லறச் செயல்களில், ஈடுபட முற்படானாயின், தீய செயல்களினும் துன்பக் கடல் கடக்க இயலாது என்பதே ஆசிரியர் உட்கிடக்கை என்பதனை உணர்வோமாக. இங்ஙனம் அறிவு நலம் பெற்ற வள்ளுவர் வாக்கோடு ஒத்த அனுபவமுடைய ஆளுடைய பிள்ளையார் திருவாக்கின் நலம் இனிக்காண்போம்.

திருச்சிற்றம்பலம்.

'நன்றுடையானைத் தீயதில்லானை நறைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன் உள்ளம் குளிரும்மே'

திருச்சிற்றம்பலம்.

இத்திருப்பாடல், அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார் உள்ளங் குளிரும் தன்மை கூறுவதாகவும், அறவாழி அந்தணன் என்ற குறட்கு உரைவிளக்கம் போலும் எழுந்த அனுபவ வாக்கு என்பதனையும் உண்மைப் படுத்துகிறது.

இத்திருப்பாசுரத்தில், உயிர் ஒட்டம் உடைய சொற்றொடர் 'சென்றடையாத திருவுடையான்' என்பது. அதற்கு விளக்கமே, நன்றுடையான் தீயதில்லான், நறைவெள்ளேற்றொன்றுடையான், உமையொரு பாக முடையான் என்பனவாம்.

இறைவனைச் சென்றடையாத திருவுடையான் என்றது எல்லாச் செல்வமுமாய் இருப்பவன் என்ற பொருள் பொதுவாகக் கருதப்படும். ஈசுவர சம்பந்த முடைய பொருளைத் தானே ஐசுவரியம் என்ற வடமொழிச் சொல்லால் வழங்குகிறோம். எனவே எல்லாச் செல்வமுமாயிருப்பவன் அவனே என்று கூறுவது பொருந்தும்.

உலகில் காணும் செல்வம் பல. மக்கள் தங்கள் குறையை முடிக்கும், நீக்கும் பொருளைச் செல்வம் என் றழைப்பர். அதனுல்தான், கல்வி, அறிவு, மக்கள், கேள்வி, அருள், ஊக்கம், முயற்சி, இன்னேரன்ன அனைத் தையும் செல்வம் என்றும், எந்த எந்த இடத்தில், எது எது, இன்றியமையாததோ அதனைச் செல்வம் என்றும் நிலக்கேற்பவும், பொருட்கேற்பவும், செல்வம் என்று வழங்கினர் சான்ருேர். திருவள்ளுவரும் அங்ஙனமே, செல்வம், செல்வம் என்று ஒன்ருென்றனையும் அந்த அந்த இடத்தில் செல்வம் என்று வலியுறுத்தியும் கூறிப் போந் தனர்.

ஆயினும், வாழ்வில் குறை நீக்கும், பொருளனைத்தும் செல்வமேயாயினும் உயிரின் குறையாகிய, அறியா மையை நீக்கி, அழியாத இன்பப் பேற்றினை அளிக்கும் செல்வம் ஒன்று உண்டாயின், அதுவே ஒப்பற்ற செல்வ மாம். இறைவன், அறிவே, அருளே வடிவாயினுன், ஆகையால், அவனைச் சென்றடையாத திருவுடையான் என்றருளினுர்.

உயிர்கள் தம்குறை நீங்கப் பிற பொருளைப் பெற்று நீங்க வேண்டியுள்ளன. நம்மிடம் குறையுள்ளன, ஆனுல் நீக்கிக் கொள்ளும் ஆற்றல் இல்லை. ஆகையால், நாம் சென்று பொருளைப் பெற்றுக் குறை நீங்க வேண்டும். ஆனுல், இறைவன், குறைவிலா நிறைவுடையன். அவன் சென்று அடையக் கூடிய, அடைந்து குறை நீக்கிக் கொள்ளவேண்டிய பொருள் ஒன்றுமில்லை. அவனே, அனைத்துமாய் உள்ளான். ஆகையால், தான் சென்றடைய வேண்டிய பொருள் ஒன்றிலாதான், என்பதனைச், சென் றடையாத திருவுடையான் என்றருளினுர்.

உயிர்கள் சடப் பொருள்களை விரும்பி விரும்பிச், சென்று சென்று, பெற்றுப் பெற்று, துய்த்துத் துய்த்து

அலுத்து, இறுதியில், அலுத்துப் போய்த் துன்பமடைகின்றன. இறைவன், நன்மையனைத்துந்தானே யாய்த் தன்னடைந்தார்க்கும் நன்மை தருவானாய்த் தன் நிலையில் தனியாய், உயிர்கள் நிலையில் கலந்து நிற்பவனாய் உள்ளான் ஆகையால், கலந்துள்ள அவ்விறைவனைத் தன்னிடத்தே காணும் அந்நிலையிலேயே, அவ்வின்பத்தினைப் பெற முடியும் என்பதனைச் சென்று அடையாத திருவுடையானை என்றருளுகிறார். புறத்தே சென்று, அடைய வேண்டிய பொருளன்று, அங்ஙனம், புறத்தே சென்று தேடின், அப்பொருள் அறிவற்றதாய்த் துன்பந் தருவதாய்' உனக்குச் சொந்தம் ஆகாததாய்ப் பின்னும் பிரிந்து விடக் கூடியதாய்ப் போய்விடும். ஆகையால், புறத்தே சென்று அடைய முடியாத செல்வம் உன்னுள்ளேயே உன்னோடு கலந்து உன் உயிர்ப்பாய் அமைந்து உள்ளமை யறிய வேண்டும் என்பார், 'சென்றடையாத திருவுடையான்' என்றருளினார். இங்ஙனம், இறைவன் அறவாணனாய், அந்தணனாய், ஆருயிர்க்குறையை, அவ்வுயிரிட மிருந்தே மாற்றும் மருந்தேயாய் உள்ளேயே உள்ளான் என்பதனை அனுபவ முகத்தான் நம்மனோர்க்கு அறிவிப்பாராய்ச் சென்றடையாத திருவுடையான் என்றருளுகிறார். நாம் நம்மிடமுள்ள பொருளை நாமே அனுபவிக்க வேண்டுமே தவிர, அதனை விடுத்துப் புறத்தே சென்று, அலைந்து திரிந்து அலுத்துப் போன நிலையில், தளர்ந்திடும் மனத்தின் போக்கினைமாற்றி உள்முகஆராய்ச்சியில் நுழைந்து, காணும்போது கண் கொள்ளாக் காட்சியாய், இன்ப ஊற்றாய், எழுகின்ற அனுபவத்தினை அடிகளார் சென்றடையாத திருவுடையானைக் கூற என் உள்ளம் குளிரும் என்றருளுவதனால் அறியலாம். இனித் தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன் என்று அப்பமூர்த்திகள் அருளியவாறு, சென்றடையாத திருவுடையானை உள்ளங் குளிரக் கண்டு கூறி, நம்மனோர்க்குக் காட்டுகிறார் ஞானப் பிள்ளையார்.

எங்ஙனம்? உள்ளத்திற் கண்டனுபவித்த பொருளை, புறத்திற் காட்டும்போது. உருவகம் செய்து காட்டுகிறார். உருவகம் செய்யும் போது குணமும் குணியுமாகக் காட்டுவது ஒரு அழகு. அம் முறையில், நன்றுடையான், தீயதில்லான் என்ற குணரூபம் காட்டப்படுகின்றது. தீமையற்ற நன்மையே உடையன் இறைவன். நாம் நன்றும் தீதும் உடையோம், அறங்குறைந்து மறமிக்குடையோம். இறைவன் அறமே உடையன், மறமில்லாதவன். மறத்தைக் சாய்த்தவன். ' அறத்தின் முன் நில்லாதாம் பாவம் ' என்றபடி நன்றுடையான் ஆகையால் தீயதில்லான் என்றருளுகிறார். தீவண்ணன், அழலாடி, என்பன, தீமையைச் சுட்டெரிக்கும் அறவாணன் என்பதனைக் குறிப்பனவே. எனவே, குணமாய நன்மையே உடையன் என்றது.

நறைவெள்ளேறு ஒன்றுடையான் என்பதும் உமை ஒருபாகம் உடையான் என்பதும், அந்தணன் கருணையாளன் என்பதனை வலியுறுத்துவனவாம். சிராப்பள்ளிக் குன்றுடையான் என்பது, தன்னடைந்தார்க்குக் குணமாய குன்றின் மேலுளான் என்ற குறிப்பாம். இவ்வாறு, பிள்ளையாருடைய திருப்பாசுரம், திருவள்ளுவரின், எட்டாம் திருக்குறளை விளக்கம் செய்து நிற்பதை நாமறிந்து மகிழ்வோமாக.

திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத் தீயதிலானை நரை வெள்ளேறு
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூற என்உள்ளம் குளிரும்மே.

திருச்சிற்றம்பலம்

# 9

'கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.'

இறைவனுடைய படைப்பில் எப்பொருளும் பயனின்றிப் போவது இல்லை. அப்பொருளின் பயனறியாமையால், பொருளைப் பயனற்றது என்று கூறுகிறோமே தவிர அப்பொருள் பயனற்றதன்று. அன்றியும், பொருள் ஒன்றனுக்குப் பயன்படும் போது மற்றொன்றுக்குப் பயன்படுவதும் இல்லை. சில பொருள்கள், பலவற்றுக்குப் பயன்படும். சில பொருள்கள் சிலவற்றுக்குப் பயன்படும். சில பொருள் ஒன்றற்கே பயன்படும். உலகப் படைப்பிற் காணப்படும் பொருளனைத்துமே அவ்வாறே. உலகம் எவ்வளவு பரந்ததோ அவ்வாறே உலகில் காணப்படும் பொருள்களும் பரந்தன. மனிதனிலும் பல மடங்கு அதிகமான உயிர்களும் உண்டு. மனிதனிலும் மிகமிகச் சிறு பான்மையுயிர்களும் உள. இறைவனுடைய தன்மை எவ்வாறு உயிர்களால் அளந்து அறிய முடியாதோ? அதுபோலவே அவன் படைப்புப் பொருள்களையும் அளந்து இவ்வளவிற்று என்று அளந்து, அறிய முடியாது. அம்மமட்டோ? அவன் படைப்பில், மனித உடலின் இயல்பும், அறிதற்கு ஆற்றலரிது. அதனால், அனுபவச் சான்றோர்கள் இவ்வுடலினை, 'மாயா இயந்திர தனு' என விளக்கிப் போந்தனர். அந்த உடம்பில், எண்ணற்ற வியத்தகு உறுப்புக்கள் உள்ளன. அவற்றுள் சிலவற்றைப் பயன் கருதியும், பயன்படும் முறையையும் அறிந்து அனுபவித்து, இருவகை உறுப்புக்களைக் காட்டியுள்ளனர் நம் முன்னோர். அவற்றினைப்

புற உறுப்பென்றும், அக உறுப்பு என்றும் வழங்குவர். வடமொழியில், அந்தக் கரணம், பகிர் கரணம் என்பர். அவற்றுள் புறக் கருவிகளை இரண்டு வகையாகப் பிரித்தனர். ஒரு பிரிவு, அறிகருவி, மற்றொன்று செயற்கருவி. அறி கருவிகளாயமைந்தன தோல், வாய், கண், மூக்கு, செவி என்பன அவை. செயற் கருவிகள் வாக்கு, பாணி பாதம், பாயு உபத்தம் என்பன. உட் கருவிகள் மனம் புத்தி, அகங்காரம், சித்தம், என்பன. இவற்றுள், அனைத்தும் ஏற்றமுடையனவும், பயனுடையனவும் ஆயினும் கண்ணே தலைசிறந்த உறுப்பாகக் கருதப்படுகிறது. அங்ஙனமே உடம்பில், பல உறுப்புக்கள் இருப்பினும், தலையே சிறந்த உறுப்பாகப் பேசப்படும். காரணம் பல. அறி கருவிகளாய, கண் காது, மூக்கு, வாய் தோல் ஆய ஐந்தும் அத் தலையினிடமே அமைந்துள்ளமையும், அக உறுப்பாய மன முதலிய உட் கருவிகள் இயங்குமிடமாயும் அமைந்துள்ளமையும் தலையில் தான் என்பதனை நாமறிவோம். அன்றியும், மனிதனை வேறுபடுத்திக் காட்டும் அடையாளமும், முகத்திலிருந்து தான் காணப்படுகிறது. ஆகவே, உறுப்புக்கள் அனைத்தும் பயன்படுவன என்பதும், அவை பயனில் வழிப் படைப்பின் நோக்கம் பாழ்படும் என்பதும் நாமறிகிறோம். எனவே, உடலில் உள்ள உறுப்புக்கள், எந்தப் பயன் கருதிப் படைக்கப் பட்டனவோ, அந்தப் பயனை நாமடையாத போது, அவ்வுறுப்பும் பயனற்று, நாமும் அவ்வுறுப்பால் அடையும் நன்மையையும் இழக்கிறோம். பொருளைப் பற்றியறிவது ஏன்? பொருளின் தன்மை பற்றியறிவது ஏன்? அப் பொருளின் பயனடையத்தானே. ஆகையால், உறுப்புக்களைப் பற்றி யறிவதும், உறுப்பின் தன்மை யறிவதும், உறுப்பின் பயனடையவே யாகும்.

உடல் என்ற உயர்கருவி, எந்த எந்தத் தன்மையுடையது அக்கருவி யியங்குவ தெப்படி? இயக்கும் தலை

வன் யார்? அக்கருவியை இயக்கித் தலைவன் பெறும் பயன் என்ன? என்பனவற்றைப்பற்றி, உலகியல் அறிஞரும், உளவியற் புலவரும், அனுபவ மெய்யறிவாளரும், கூறியுள்ளனர். ஆனால், அவரவர் கருத்துப்படிப் பயன் பெறுமானாலும், அனைவர்க்கும் ஒப்பமுடிந்த கருத்தும் உண்டு. கண் உருவங்களைக் காண்பது, செவி ஒலிகளைக் கேட்பது, நா சுவை உணர்வது, மூக்கு மணம் அறிவது, தோல் ஊற்றினை அறிவது, என்ற பொது நிலையறிவில், அனைவரும் ஒரு கருத்தினையே உடையர். ஆனால், இவ்வுறுப்புக்கள் கருவியே யன்றி, அவ்வுறுப்புக்களின் வழியாக மனமே சென்று, பற்றுகிறது என்பதும், அனைவர்க்கும் ஒரு கருத்தே. ஆனால், கண் எதனைக் காணவேண்டும், செவி எதனைக் கேட்கவேண்டும், நா எதனைச் சுவைப்பது. மூக்கு எம் மணம் பெறுவது? என்றபோது, அவரவர் நிலைக்கேற்ப மாறுபடுவர். ஏன் மாறுபாடு? அறிவின் தரத்தாலும், அனுபவத் தரத்தாலும், குறிக்கோளின்வேறுபாட்டாலும், அவரவர் மாறுபடுகின்றனர். எடுத்த பிறவியில், இன்ப நுகர்ச்சிக்கென அமைந்த உலகத்தில், கண் கொள்ளாக் காட்சிகளனைத்தையும் கண்டுவிட வேண்டும் என்று கருதுபவனும் உண்டு. பிறவியின் நோக்கம், இன்ப நுகர்ச்சியே என்ற அம்மாத்திரமே அவன் போக்கு. அவ்வின்பம் உண்மைதானா? அது நிலைத்ததா? அனைத்தையும் அனுபவித்து விட முடியுமா? என்ற வினாவிற்புகாது, நின்றவாறே நினைக்கும் நிலையாகும் அது. மெய்யுணர்ந்தோர் அங்ஙனம் அன்றி, இப்பிறவி, வந்தவாறெங்ஙனே, போமாறேதோ? என்று அகமுக ஆராய்ச்சியில் நின்று, மாயமாம் இஃதென உணர்ந்து மகிழ்ச்சியில் மைந்துருது, சிந்தைதனிற்றெளிவுடையராய், எடுத்த உடலைக் கொண்டே, குறிக்கோளை யடைவதற்கு வாய்ப்புடையதாக அமைத்துக் கொள்கின்றனர். அங்ஙனம் சென்ற நற்சான்றோரே திருவள்ளுவர். ஆகையால், உறுப்புக்

களில், அறிகருவி ஐந்தனையும், அவ்வைந்துறுப்பும் நின்ற தலையினையும் பற்றிக் கூறுவாராயினர்.

திருநாவுக்கரசர் பெருமான், இத் திருக்குறளை மனத்துக் கொண்டு பாடுவார் போன்று 'அங்கமாலை' என்ற பகுதியே பாடியுள்ளமை சைவ மெய்யன்பர்கள் அறிவார்கள். 'தலையே நீ வணங்காய்' என்று தொடங்கி வாழ்வியலில், பொறிகள் எப்படி மாற்றம் பெற்றுச் செயல்படவேண்டும் என்பதனை, 'கண்காள் காண்மின்களோ' மூக்கே நீ முரலாய்' வாயே வாழ்த்து கண்டாய்' கைகாள் கூப்பித் தொழீர்' 'கால்களாற் பயன் என்' என்று, ஒவ்வொரு கருவியினையும் பணி கொண்டமையையும், பணித்தமையையும் காணலாம். எனவே, பொறிகள், புலன்களைப் பற்றி, (சுவை ஒளி ஊறு, ஓசை, நாற்றம்) உயிர்க்கு இன்பதுன்பக் கூறுகளை அனுபவிக்கச் செய்யக் கொடுக்கப்பட்டன. அப் பொறிகள் தம் கோள்களாய, புலன்களைப் பற்ருது போயின், இல்லையாகவே கருதப்படும். ஒருவன் ஓசையைக் கேட்க மாட்டானுய் விடின், அவன் மனிதனில், ஒரு பொறி குறைந்தவனுய்ச் செவியிலி என்றழைக்கப்படுவான். கண் உருவங்களைப் பற்ருது போயின், கண்ணிருந்தும் குருடனுகவே கருதப்படுவான். இஃது ஒரு முறை.

இன்னொரு முறை உண்டு. ஒருவனுக்குச் செல்வம் இருக்கிறது. அச் செல்வத்துப் பயன், கொடுத்தலும் துய்த்தலும் ஆம். கொடுத்தலும், துய்த்தலும் இன்றி ஒருவன் அடுக்கிய செல்வமுடையனுயினும் அவன் வறுமையாளனேடு ஒப்பான். ஏன் எனில் வறியனும் உண்பதுமில்லை, கொடுப்பதும் இல்லை. இந்தக் கொடியனும் துய்ப்பதுமில்லை, கொடுப்பதும் இல்லை. அதனல், பயன்படாமையால் இருவரும் ஒப்பாவார். அது போலவே உறுப்புக்கள், தம் பயனை ஊட்டாத போது அவையிருந்

தும் பயனில. திருவள்ளுவனர் கண்ணேட்டம் என்ற பகுதியில் கண்ணின் பயன் உருவங்களைப் பற்றுதல் மாத்திரமன்று, அருள் உள்ளத்தை, இரக்கத்தை வெளிப் படுத்துவதும் அக் கண்ணே. அங்ஙனம், இரக்கமாய கண்ணேட்டம் இல்லையாயின் அவை கண்ணுக மாட்டா என்பாராய், 'பண்ணென்னும் பாடற்கியைபின்றேல் கண்ணென்னும் கண்ணேட்டம் இல்லாத கண்' என்று கூறியமையும் காணலாம். அல்லாமலும், ஓசை கேட்பது மாத்திரம் செவிப்பயன் அன்று, அரும் பொருளை உணரும் ஆற்றலுடையது செவி. அச்சுவை யறியும் ஆற்றலில தாயின், செவிப் பயனற்றவராய் விடுவர் என்பதனைத் திருவள்ளுவனர் 'செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் என்' என்று கூறியுள்ளி யமையும் அறியலாம். இங்ஙனமே, பொருள்களும் பெற்றவனுடைய குறிக்கோளுக் கேற்பப் பயன்பட வேண்டும். இல்லையாயின், அப் பொருள் பெற்றிருந்தும் பயனின்றிக் கழிந்ததாகக் கருதப்படும். திருவள்ளுவனர் அரிதாய்க் கிடைத்த இந்த உடலில் முதலான தலையின் பயனை, நமக்குக் காட்டுவாராய் 'எண் குணத்தான் தாளை வணங்காத் தலை குணமில' என்றருளுகிருர். அதற்கு முன்னுக, 'கோளில் பொறியில்' என்ற உவமை மிக உயர்ந்த நோக்குடையது. காணுத கண் பயனற்றது போல, கேளாத செவி பயனற்றது போல், மோவாத மூக்கும், பேசாத வாயும், பயனற்றன போல, எண்குணத் தான் தாளை வணங்காத் தலைகளும் குணமில என்றருளு கிருர். இங்ஙனம் கூறுவதால் பிற பொருளைக் கண்டும், ஓசையைக் கேட்டும், மண முகர்ந்தும் உண்டு சுவைத்தும் ஊறறிந்தும் ஐம்பொறியும் தத்தம் செயலாற்றிய வழி, அவை செயல்பட்டமை கண்டு, முழுநிலை பெற்றனவாகக் கருதி விடாதே, எப்போது அவை, படைப்பின் நோக்குக் குரியனவாக அமையுமோ அப்போது தான் உண்மையில்

குண முடையன என்பதனையும் நமக்குணர்த்துகிறார். 'தனுவோடு இலகு கரணமுடன்சாரும் போகம் புவன மிவைதமை யான் எனதென்று தருக்கிச் செருக்கோடு உழல்கின்ற நிலை நீங்கி, உனதாம் அவைகள் மாயையிடை உதிக்கச் செய்தாய் நீ இதனை உள்ளவாறு உணராச் சிறியேன் உய்வேனோ' என்று கூறியாங்கு, உடம்பும், உட்புறக் கருவிகளும், அவனையடைதற்குச் சாதனமாய்க் கிடைத்தன என்று உணர்ந்து அவ்வழியிற் செலுத்தலே பிறவியின் குறிக்கோள் என்ற சான்றோர்கட்கு முதன்மை யான திருவள்ளுவர், தாளை வணங்காத்தலை குணமில என்றதோடு அமையாது, அவனுருவைக் காணாத கண்ணும், புகழ் கேளாத செவியும், பேசாத நாவும், தெய்வ மணங்கொள்ளாத மூக்கும், மெய் சிலிர்க்காத் தோலும் பயனிலவாமாறுபோல என்றருளுகிறார். இதனை மாற்றி யமைத்தல் என்பர். இயல்பாக நிகழ்வதை மாற்றியமைப் பது, இயலாத ஒன்றாயினும், பயன் கருதும்போது, அச் செயல் அருஞ்செயலாய்ப் பெருஞ்செயலாய், போற்றப் படும் செயலாகவும், பயனுடைச் செயலாகவும் ஆய்விடு வதை நாமறியலாம். பாழ்பட்டுப் பயனற்றுக் கிடக்கும் முட்செடி நிறைந்த நிலத்தை, செடி கொடிகளை வெட்டி. சமநிலையுடையதாக அமைத்து உழுது, உரம் ஏற்றி, நீர் பாய்ச்சி, விதைவிதைத்துப் பயிர் செய்தால் பண்ணை யென்றும், நன்செய் என்றும் பெயர் பெறுமாப்போலே, பொய் களவு, வஞ்சம், பொறாமை முதலிய தீக்குணங் களாம் செடி கொடிகள் வளர்ந்து இயல்பாகவே அறியா மையால் வினைக்கீடாக, உலகப் பொருள்களில் ஓடி, அலையும், ஐம்புல அவா வினையாம் அச்செடி கொடிகளை, அறிவென்னும் கோடரிகொண்டு வெட்டிச் சாய்த்துத் தொண்டென்னும் உழவு செய்து மனமென்னும் நிலத் தினைச் சமநிலை செய்து, அன்பென்னும் இனிய நீர்பாய்ச்சி, நன்றியறிதலாம் பக்தி என்னும் விதையிட்டுப் பயிர் செய்

யின் சிவபோகமென்னும் பயன் விளையும் என்ற நல்லோர் அனுபவப்படி, எப்போது, மனம் செம்மைப்பட்டு, இறையருளை நாடிப் பக்தியில் ஈடுபடுகிறதோ, அப்போது, மெய் வாய் கண்மூக்குச் செவியென்ற ஐம்பொறியும், அவனையே பற்றத் துணையாய் நிற்கும். இதனை மணிவாசகப் பெருமான் மிக விளக்கமாக நமக்கருளியிருக்கிறார்.

'மாறி நின்று என்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்து அமுதே
ஊறி நின்று என்னுள் எழுபரஞ்சோதி
உள்ளவா காணவந்தருளாய்
தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங்கடந்த
இன்பமே என்னுடை யன்பே'

இத்திருப்பாசுரம் முன்னே கூறிய உண்மையினை மிகத் தெளிவு செய்வதையும், பயனையும் தெற்றென விளக்குவதையும் காண்கிறோம். ஆகையால், திருவள்ளுவனார், நமக்கு, இந்தத் திருக்குறளினால், அகக் கருவியும், புறக் கருவியும், இறைவனுடைய திருவடிகளை வணங்கத்துணை செய்யாதபோது, எடுத்த பிறவியினால் பயனில்லை என்ற முழு உண்மையை, எதிர்மறைமுகத்தால் இறைவனுடைய திருவுருவத்தையே, காணாத கண்ணும், அவன் புகழ் கேளாத செவியும் அவனைப் பாடாத வாயும், இறைமணங்கொள்ளா மூக்கும், அவன் அருள் கருதி உணர்ச்சி மிகா உடலும் பயனில, அவனருளை நாடி வணங்காத்தலையும் பயனில, என்பாராய்க், கோளில் பொறியைப்போலத், தாளை வணங்காத் தலையும் பயனில, என்றருளினார். எனவே, ஆண்டவன் வழிப்படாப் பொறியும், அவனை வணங்காத் தலையும் பயனில என்ற குறிப்பு, அந்தக்கரணமும், ஒன்றுபட்டு, அவனடிக்கே தொண்டு செய்தா

லன்றி இறையருள் பெற்று, வீடுபெறுதல் அரிது என்பது கருத்தாகக் கொள்க. இதனுல், காண்பனவும், கேட்பன வும், பேசுவனவும் பிறவும், செயலும் எல்லாம் அவன் செய லாகவே அமைந்தபோதுதான், திருவருள் பெறுதற்குரிய பிறவியாய் இப்பிறவியமையும். இல்லையேல் இப்பிறவி பாழாய்ப் போய்விடும், என்ற அருளுரையாய்ப் போற்றும் படி அமைந்துள்ளது இத்திருக்குறள் என்றறிய வேண்டும். இனி, எங்ஙனம் இறைவனுடைய நிலையறிந்து பணி புரிவது என்பதனை, நமக்கு இறைவனுடைய குணங்களை இதுவரையும் கூறிய தொகுப்பினை யுணர்த்துவாராய் 'எண்குணத்தான்' என்றருளுகிருர். இனியெண் குணங் கள் என்பனவற்றைப் பலர் பலவாருகக் கருதுகின்றனர். பேராசிரியராம் பரிமேலழகர். சிவாகமத்திற் கூறப்பட்ட, தன்வயத்தனுதல், தூயஉடம்பினனுதல், இயற்கையுணர் வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, இவைகளைக் காட்டி, அமைதி கூறினர். அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்ற எட்டையும், கடையிலா அறிவு முதலாய எட்டையும் கூறி, இவ்வாறு கூறுவாரும் உளர் என, இவைதான் என்று துணிந்து கூருது போயினுர். மணக்குடவர், எட்டுக்குணம் எனப் பொதுவிற்கூறி, இவையென விளக்காது எழுதினர். பரிதியார், அனந்தஞானம், அனந்த வீரியம், அனந்த குணம், அனந்த தரிசனம், நாமமின்மை, கோத்திர மின்மை, அவாவின்மை, அழியா இயல்பு என்பன காட்டி னர். இங்ஙனம் கூற, காளிங்கர் மட்டும் எண்குணம் என்பதனை எண்ணப்பட்ட குணம் எனக்கூறி விளக்கந் தாராாய்ப் போயினர். இங்ஙனம் பண்டைப் பேராசிரியர் அனைவரும், துணிந்து இவைதான் என்று காணமுடியாத தாய் அமைந்தது, எண்குணத்தான் என்ற பெயர்.

எனினும், ஆசிரியர் இங்ஙனம், மயங்கவைத்த பெயரன்று எண்குணத்தான் என்பது. ஈண்டு பேசப்படும் குறள். ஒன்பதாவது என்பதனை நாமறத்தலாகாது. ஆயின், முன்கூறிய இறைவனுக்குரிய எட்டு பெயர்கள் உள. ஒவ்வொன்றும் வேறு வேருய் அமைந்தன. அவ்வாறு. இறைவற்கு, எட்டுக் குறளிலும் வேறு வேறு பெயர் வைத்து வந்து, ஒன்பதாவது குறளில், எண்குணத்தான் என்பாராய், முன்னைய எட்டுக் குறளிலும், வைத்துள்ள எட்டுப் பெயர்களிலும், எட்டுக் குணங்கள் அமைந்துள்ளன என்பதனை நமக்கு உணர்த்துவாராயினர் என்பதனை நாமறிதல் வேண்டும். அவையாவன, ஆதிபகவன் என்பதனுல், அனைத்துக்கும் முன்னேனுந்தன்மை, வாலறிவன், இயற்கையறிவினனுந் தன்மை (சர்வக்ஞன்) மலர்மிசையேகினுன், உயிர்க்குயிராந்தன்மை, வேண்டுதல் வேண்டாமை இலான். இருவினையிலனுந்தன்மை, இறைவன்—எல்லாமாயிருக்குந்தன்மை, பொறிவாயிலைந்தவித்தான். உயிர்கட்காக இரங்குந் தன்மை, அறவாழி அந்தணன், அறமும் அருளுமாயினதன்மை, தனக்குவமையில்லாதான். தன்னிகரில்லாத்தன்மை என்று காட்டிய அந்த எட்டுக் குணங்களையும் உடையான் எனக் கூறலே சாலப் பொருந்தும். ஏன் அவ்வாறு கொள்ளவேண்டும் எனின், அவனடி அடைதற்குரிய வழியினை வரிசைப் படுத்தவும், அந்த முறையே சாலச் சிறந்ததாக ஆசிரியர் காட்டியுள்ளார். எங்ஙனம் எனில், கடவுள் ஒருவன் உண்டென்றறிந்து, அவன் அறிவு வடிவினன் எனக் கொண்டு, அவன் உயிர்க்குயிராய் உள்ளான், வினை நீங்கிய விளங்கிய அறிவினன், வினை நீங்கியவழி யறிய முடியும், வினை நீங்க, ஐம்பொறி வழியடைத்து, அமைந்த ஒழுக்கநெறி நின்று, அறமும் அருளும் பூண்டு அந்நெறியொழுகினுலன்றித் தன்னிகரில்லாத் தலைவனுடைய திருவடி பெற்று, மனக்கவலையை மாற்றிக்கொள்ள

முடியாது என வழிகாட்டி வந்து, இவ்வொன்பதாங் குறளில், எடுத்த பிறவியாம் இந்த மானிடப் பிறவியும், அவனுடைய மேற்குறித்த எண் குணங்களின் வழிநின்று, எண்குணமுடையான் திருவடிக்கன்பு செய்து பணியாத போது, குணமின்றிப் பாழ்போகும் என்று கூறிவருவதாலும், முறைவைப்பாய் அமைந்துள்ளமையாலும் அறியலாம். அன்றியும் பின்னும், ஆசிரியர், அதிகாரத் தொடர்பும், ஒவ்வொரு அதிகாரத்திலும், பெரும்பாலும் குறள் தொடர்பும்கூறிவருவதாலும், இம்முறையே சிறந்த பொருத்தம் என்பதனையறியலாம். இங்ஙனம், எண்குணத் தான் தாளை வணங்காத தலைகளும் பயனில, எனக் கூறியருளியதிலிருந்து எண்குணவழி நிற்றலே, அவன் தாளை வணங்கலாம் என்பதனையும் நாமறிதல் வேண்டும். இனி, எண்குணத்தான் தாளை வணங்கி, தண் தமிழ்ப் பண் இசைத்த பூம்புகலிப் பிள்ளையார் திருப்பாடலுள் இத்திருக்குறள் இடம் பெற்று இசையோடு அனுபவமாய் வருதலை நாம் கண்டு மகிழலாம்.

திருச்சிற்றம்பலம்

" பெண்ணமர் மேனியினாரும் பிறைபுல்கு செஞ்சடையாரும்
கண்ணமர் நெற்றியினாருங் காதமருங் குழையாரும்
எண்ணமருங்குணத் தாரும் இமையவ ரேத்த நின்றாரும்
பண்ணமர் பாடலினாரும் பாண்டிக் கொடி முடியாரே "

திருச்சிற்றம்பலம்

திருப்பாண்டிக் கொடுமுடி - பண் - காந்தாரம் (2--69—1)

திருச்சிற்றம்பலம்

" அலையார் புனல்சூடி யாகத் தொருபாக
மலையான் மகளோடு மகிழ்ந்தானுலகேத்தச்
சிலையால் எயில் எய்தான் சிற்றம்பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையானார்களே "

திருச்சிற்றம்பலம்

கோயில் - பண் - குறிஞ்சி (1—80—7)

இத்திருப்பாசுரங்கள், ஒன்பதாவது திருக்குறளினை உள்ளடக்கிய அனுபவத் திருவாக்காகும். முன்னுக, 'பெண்ணமர் மேனியினுரும்' என்பதனுல் அருளும் அறமுமாய் நிற்கிருன்-இறைவன் என்பதனைக் குறிப்பிட்டுப் 'பிறைபுல்கு செஞ்சடையாரும்' என்பதனுல் தன்னடைந்தாரைத் தாங்கும் தண்ணளியாளன் என்பதனைக் கூறிக் 'கண்ணமர் நெற்றியினுரும்' என்பதனுல் சர்வ சம்மார காரணன் அவனே என்பதனைக் காட்டி, 'காதமரும் குழையாரும்' என்பதனுல் திருவருளால் இரங்கித் திருமேனி கொண்டு காட்சி அளிப்பவர் என்பதனையும் கூறினுர். இனி, 'எண்ணமருங்குணத்தாரும்' என்பதனுல் உள்ளத்து வழிபடுவார்க்கு, நீங்காது எண்வகைக் குணங்களை உடையார் என்ற பொருளில் 'அமரும் எண் குணத்தார்' என அன்வயப்படும்படிக் கூறினுர். இனி, உயர்ந்தோர்கள் எண்ணுகின்ற எண்ணங்களிலே, அவர்கள் நினைந்த வடிவில் அமரும் குணமுடையான் என்றும் பொருள் கொள்ளும்படி அமைத்துள்ளார். எண் குணத்தான் என்ற திருவள்ளுவர் வாக்கினை இருபொருள்படுத்திக் காட்டிய அழகு ஞானசம்பந்தப் பிள்ளையார்க்கே உரியது. உள்குவார் உள்ளத்து அவர் நினைந்தவடிவில் எழுந்தருளுவது இறைவனுடைய அருட்செயலாகையால் எண்ணத்தில் அமரும் குணத்தான் என்று கூறினுர். இனி, எல்லா உயிர்களிலும் அமர்ந்திருப்பான் அவன் ஆகையால் அவன் எழுந்தருளியிருக்கும் நிலையில் அன்பர்களுடைய உள்ளத்துக்கு அனுபவமாகிய குணரூபமாய் எழுந்தருளுவான் என்பது முடிபாகையின் அக்குணங்கள் எண்ணிலவாய்ப் பரந்து நிற்றலின் அவை அனைத்தையும் இறை குணங்களாய் அடக்கும் பொழுது எண்குணங்களாய்த் திருவள்ளுவர் அடக்கினுர். ஆதலின் 'அடிகளும் எண்ணமருங்குணத்தார்' என்றும் கூறினுர். நாம ரூபங்களுக்கு அப்பாற்பட்டு வாக்குக்கும், மனத்துக்கும் எட்ட

முடியாது அனைத்துமாய்விளங்கும் ஆண்டவனை எங்ஙனம் தொழுவது? எங்ஙனம் ஏத்துவது? என்று எண்ணிக்குறைவுருது எவ்வடிவில் நினைத்தாலும் எந்தக்குணமாகச் சுவைத்தாலும் அவனே அருள் தருவான் என்பதனை 'எண்ண மருங் குணத்தாரும்' என்று அருளினுர். குணம் என்பது, நன்மை தீமை இரண்டுக்கும் பொதுவாயினும் "குணம் நாடி" என்ற பொழுது நற்குணத்தையே குறித்தாற் போல "குணத்தானை" என்ற பொழுது நன்மை வடிவமாகவே இருக்கிருன் என்ற பொருளும் கிடைப்பது காண்க. இனி, எண்ணத்திலமரும் குணத்தான் எனப் பொருள் கொள்ளும் பொழுது எண்ணமானது அவன் எழுந்தருளுவதற்குரிய நற்பாத்திரமாகிய பக்குவமடைந்ததாயிருக்கவேண்டும் என்பதும் குறிப்பிட்டதாகும். எண்ணம் பக்குவம் அடைதல் என்பது முதல்வன் ஒருவன் உண்டென்றும், அவன் உயிர்க்குயிராய் இருக்கிருன் என்றும், அவன் வாலறிவன் என்றும், இருவினைப் பட்டுப் பொறி வழி ஓடாது ஐந்தவித்து அறம்தலை நின்ருர் உள்ளத்து அவ்வொப்பிலாத்தலைவன் உவந்து எழுந்தருளுவான் என்றும் உணர்ந்து அவ்வழி திற்றலாம். பரிபாக நிலை பெறுதலே எண்ணம் தூய்தாதல் என்பது. அதனையே 'எண்ணமருங் குணத்தாரும்' என்று அடிகளார் அருளுகிருர். இந்நிலை அறிவார் மக்களில் தேவராய் வாழும் திறனுடையார் ஆகையால் இமையவர் ஏத்த நின்ருரும்' என்று அருளினுர். இறைவனை எண்குணத்தானைப் பண்ணெடு மிடைந்த பாட்டினுல் பரவிப் பணிகிருர்கள் ஆகையால் அப்பாட்டின் பொருளாய் அமைந்து, அவர்கட்கு இன்ப ஊற்ருய் உள்ளத்து ஒளியாய் விளங்குகிருன் என்பதனைப் 'பண்ணமர்பாடலினுரும்' என்று அருளினுர். இந்நிலையில், இறைவனை அனுபவித்த இடம் பாண்டிக்கொடுமுடி என்று திருப்பாசுரத்தை முடித்தார். இங்ஙனமாக, எண்குணத்தான் என்ற திருக்

குறளின் நுண்பொருள், திருவருள் அனுபவம் பெற்ற பிள்ளைப்பெருமான் திருவாக்கில் அமைந்து கிடந்து அழகு செய்வதை நாம் அனுபவிப்போமாக.

திருச்சிற்றம்பலம்.

'' பெண்ணமர் மேனியி னாரும்பிறைபுல்கு செஞ்சடை யாருங்
கண்ணமர் நெற்றியினாருங் காதம ருங்குழை யாரும்
எண்ணமருங்குணத் தாரும் இமையவ ரேத்தநின் றாரும்
பண்ணமர் பாடலினாரும் பாண்டிக் கொடுமுடி யாரே ''

திருச்சிற்றம்பலம்.

திருப்பாண்டிக் கொடுமுடி - பண் - காந்தாரம்.

(2.69.1)

இனி, பிற்பகுதியாகிய 'தாளை வணங்காத்தலை', 'குணமில' என்பதனை ஞானசம்பந்தப் பிள்ளையார் தீந்தமிழ் இன்னிசையில் வடித்துக்கொடுப்பதைப்பார்ப்போம்.

திருச்சிற்றம் பலம்.

'' அலையார் புனல் சூடி யாகத் தொருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந் தானுல கேத்தச்
சிலையால் எயில் எய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையானார்களே.''

திருச்சிற்றம்பலம்.

மக்களில் மூவகையர் உண்டு. கடையானார், இடையானார், தலையானார் என்பார் அவர். கடையானார் தாமும் துன்புற்றுப் பிறர்க்கும் துன்பிழைப்பர். இடையானார், தாமும் இன்புற்றுப் பிறர்க்கும் இன்பளிப்பர். தலையானார், எஞ்ஞான்றும் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய்ப் பிறர் நலம் பேணும் பெற்றியர். தலையானார் தம் கடன் செய்பவர். 'தவம் செய்வார் தம் கருமம் செய்வார்' என்றபடி உற்றநோய் நோன்று உயிர்க் குறுகண் செய்

யாது ஐம்புலன் அடக்கி அறம் மேற்கொண்டு அந்தண ராய்ச் செந்தண்மை ஒழுக்கம் பூண்டு வாழ்வர். அவருள் ளம் என்றும் பிறர் நலம் பேணி இறையருளை இடையறாது சிந்தித்து நிற்கும். அதனைக் கோயில் குறிஞ்சிப் பண்ணிலே வைத்து, அடிகளார் வரிசைப் படுத்திக் காட்டியுள்ளார்கள். 'முதல்வன் பாதமே பற்று நின்றார்' என்றும், 'பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை மறப்பிலார்' என்றும் 'மறை பாடல் பொய்யார்' என்றும் 'செல்வன் கழலேத்தும் செல்வம்' என்றும் 'பெருமான் கழலல்லால் பேணாது உள்ளம்' என்றும் கூறித் தலையால் வணங்குவார் என்று இப்பாசுரத்தில் அமைக்கிறார். இதனால், அகம்புறமாகிய இருவகைப்பட்ட உடற்கருவி களும், உள்ளக் கருவிகளும் அவன் திருவடிப் பற்றினையே பற்றி நின்றவாறு குறிப்பிட்டதாகும். 'பற்று நின்றாரை' என்றதனாலும் 'மறப்பிலார்' என்றதனாலும் 'உள்ளம் கழலல்லாற் பேணாது' என்றதனாலும் அகக் கருவியாம் மனம் அவனையே பற்றி நின்றவாறு கூறிய வாறாயிற்று. 'செல்வன் கழலேத்தும் செல்வம்' என்ற தனால் வாய் அவன் புகழ்பேசும் என்பது கூறியவாறாயிற்று. இனி, உடல் அவனை வணங்கும் என்பதனை 'தலையால் வணங்குவார்' என்பதனால் குறிப்பிடுகிறார். எனவே, மனம், மொழி, மெய்களாகிய மூன்றும் அவனையே நினைத்து, அவனையே பாடி அவனையே வணங்கும் என்று திரிகரண வழிபாடும் கூறியவாறாயிற்று. இக்கருத் தினைப் பரிமேலழகரும் கடவுள் வாழ்த்தில் முறைப்படுத் திக் கூறியுள்ளமை உரையிற் காணலாம். எனவே, 'தலையால் வணங்குவார் தலையானார்களே' என்பது மக்களில் தலையானவர்கள், உடல் பெற்ற பயனாகச் சிற்றம்பலந்தன்னைத் தலையால் வணங்குவார் என்பது கூறியவாறாம். இனிச் சிற்றம்பலம் என்பது நெஞ்சத் தாமரையாகும் ஆகையால், உடம்பு இடங்கொண்ட

ஈசனை, உள்ளத் தாமரையில் ஒளி விளக்காய், உலப்பிலா ஒன்ருய், உணர்வில் வைத்து வணங்கும் உயர்ந்தோர் தலையானவர் என்பதும் கூறியவாறும். இதனுல், எண் குணத்தான் தாளை வணங்காத்தலை, குணமில என்ற எதிர்மறை சிற்றம்பலந்தன்னைத் தலையால் வணங்குவார் தலையானுர்கள் என்ற உடன்பாட்டு முகத்தால் பொருள் நயம் தந்து நிற்றலைக் காண்கிருேம். அன்றியும், ஐம் பொறிகளும் நிறைந்துள்ளதும் பேசும் வாயும், நினைக் கும் மனமும் அமைந்துள்ளதும் தலையே ஆகையால் மனத்தால் நினைத்து, வாயாற்பாடித், தலையால் வணங்கித் திரிகரணமும் ஒன்றுபட்ட வழிபாட்டினை உடையார் உலகத்தில் உயர் பேரின்பமாம் வீட்டின்பத்தினை எய்துதற்குரியாராய தலையானுர்கள் எனப் பிறவியின் குறிக்கோளைப் பெற்ற பெரியராய்க் காட்டுகிருர். 'தேடித் தேடொணுத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண் டேன்' என்றபடி நெஞ்சத்தாமரையாம் சிற்றம்பலந் தன்னை அவனிருக்கும் கோயிலாக்கொண்டு, தலையால் வணங்குவார் தலையானுர்கள் எனக் காட்டிய திருக்குறள் விளக்கம் மிகவும் போற்றற்குரியதாகும். இங்ஙனமே, அடிகளாரின் திருவாக்குகள் முழுதும், திருக்குறட் கருத் தோடும், சொல்லோடும், பொருளோடும் அனுபவ அமுத மாய் வெளிவந்து அறிவாற்கண்ட உண்மைப் பொரு ளும் அனுபவத் தீந்தமிழ் இன்னிசைப்பாடலும், ஒன்றென முடித்தற்கு உறுதுணையாய் நிற்பதைச் சைவ உலகம் அறிந்து மகிழ்வதாகும்.

திருச்சிற்றம்பலம்.

"அலையார் புனல் சூடி யாகத் தொருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னுர்களே"

———

# 10

''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.''

பிறவியைப் பற்றி நாமறிந்தது மிக மிகக் குறைவு, அறிய வேண்டியன மிகப் பல. உயிர்களின் பிறப்பைத் தொகை வகை விரிவாக அளந்து சொல்லியிருக்கின்றனர். நால் வகைப் பிறப்பு, ஏழுவகைத் தோற்றம், எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதம் என்று கூறியுள்ளனர். திருவள்ளுவர்,

'எழு பிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்' என்றும்.
'எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு' என்றும்.

கூறியுள்ளமையானும், இக்குறள்கட்கு உரை வகுத்த பரிமேலழகர் உரையில்

ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்கால் ஓர்பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினாலு அயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரம் நாலைந்து.

என்ற வெண்பாவாலும், பிறப்பு, தோற்றம் யோனி பேதம் என்பன கூறியவாறு அறியலாம்.

அல்லாமலும், திருவள்ளுவர் சில உண்மைகளைக் குறிப்பாக உணரவைத்துள்ளார். பிறப்புண்மை வினைப் பயன் தெய்வம், என்பவைகளை விளக்கியும், நம்ப

வைத்தும், உள்ளார். அவற்றை நம்பாது போயின், அவர்களை அலகையாகவும் குறிப்பிடுகிருர்.

> ‘உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
> அலகையா வைக்கப்—படும்’

என்ற குறளில், உயர்ந்தோர் உண்டென்று கூறும், விணை, பிறப்பு, தெய்வம் இவற்றை இல்லை யென்பான் அலகையோ டொப்பாவான் என்று கூறியுள்ளார். ஆகை யால் திருவள்ளுவர் பிறப்பினை ஏற்றுக்கொண்டவர். சில மதங்கள், மனிதன் மனிதனுகப் பிறந்தால், அவன் ஒன்று சுவர்க்கம் புகுவான், அல்லது நரகம் புகுவான், பல பிறவிகள் எடுப்பதில்லை என்று கூறும். அன்றியும், மனிதனைத் தவிர மற்றைய உயிர்கள் அனைத்தும் மனித னுக்காகப் படைக்கப்பட்டன என்னும். அந்த முறையில் சென்றவரல்லர் திருவள்ளுவர்.

> ‘அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து’

எனக் கூறியமையின் பிறப்புக்குக் காரணமும் கூறி,

> ‘பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்றும்
> நிலையாமை காணப் படும்’ என்று விளக்கி
> ‘ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே
> பேரா இயற்கை தரும்’

என்று பிறவா நிலையினையும் விளக்கி யுள்ளமையின், விணை, விணையால் விளையும் பிறவி, பிறவியறுப்பதற்குரிய வழி, அப்பிறவி நீங்கின் அடையும் நிலை இவற்றைத் தெளிவு படுத்தியுள்ளார். ஆகையால், பிறவி விணைப் பயனுல் வருவது என்பது ஆசிரியர் கொள்கையாகும். அப்பிறவியில், அடையும் இன்ப துன்பங்களும் விணைப் பயனே என்பதனையும்,

'வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது''

என்பதனுலும், 'ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி' என்றும்

'நன்ருங்கால் நல்லவாக் காண்பவர் அன்ருங்கால்
அல்லற் படுவ—தெவன்' என்றும்

கூறுவதால், இன்ப துன்பங்கள் அனைத்தும் அவனவன் செய்த வினைப்பயனே என்றும் விளக்கியுள்ளார்.

'இலர் பலராகிய காரணம், நோற்பார் சிலர் பலர் நோலாதவர்' என்ற குறளில் இப்பிறப்பில் வறுமையால் வாடும் பலரை, முற்பிறப்பில் தவம் செய்யாதவர்கள் என்று சுட்டுவதால், மனிதப் பிறவியிலும் பல பிறவிகள் வினைக்கீடாய் வருகின்றன என்பது ஆசிரியர் கருத்து. பின்வந்த மாணிக்கவாசகர்,

'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்,
மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'

என்று அருளுவதால், புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமானதிலிருந்து மனிதப் பிறவி வரையிலும், பல பிறவிகள் எடுத்து இளைத்தமையை விளக்கியுள்ளார். இங்ஙனமாகப் பிறவியும் வினையும், உயிர்களின் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்துள்ளமையை அறிகிறோம். அவ் வினையும் பிறவியும், உயிர்கட்கு உண்டானமைக்குக் காரணம் வேண்டும். காரணமின்றி காரியம் இல்லையாகையால் வினையாகிய செயலும் அதற்கென்று கிடைத்த பிறவியும், காரணமின்றி நிகழா. அந்தக் காரணத்தை ஆசிரியர் திருவள்ளுவர் வாக்குக் கொண்டே அறிதல் வேண்டும். அதனை, ஆசிரியர்,

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு" என்று கூறுவதால்

அறியாமையால் வினையும், வினையால் பிறவியும், மீண்டும் மீண்டும், சகடக்கால் போல சுழன்று கொண்டு வருகின்றன—என்பது ஆசிரியர் துணிவு. எனவே அறியாமை நீங்கின் வினை நீங்கும். வினை நீங்கின் பிறப்பு நீங்கும்—என்பது தெளியப்படும்.

அறியாமை அவாவுட்படுத்தும். அவா பிறப்பினை வேண்டிப் பெறும். அவா முற்றுப் பெருதவரையும், பிறவி வந்துகொண்டே இருக்கும். அதனுல் தான், அவாவினைத் திருவள்ளுவர் பிறப்புக்கு விதை என்று சொன்னுர். மேலும்.

''அற்றவர் என்பார் அவா அற்ருர் மற்றையார்
அற்ருக அற்ற திலர்.''

என்றும் கூறினுர். அவா என்பது, அறியாமையின் செயல். வேண்டாத பொருளையும் பெறமுடியாத பொருளை யும், அடையக்கருதும் எண்ண எழுச்சி அவா எனப்படும். பெற்ற பொருளினை விடமுடியாது இறுகப் பிடித்திருக்கும் எண்ணத்திற்குப் 'பற்று' என்று பெயர். அழிந்து போகிற உடலையும், உரிமையில்லாத உலகப்பொருள்களையும் நான் என்றும், எனது என்றும் பிடித்திருக்கிற உள்ளம் 'பற்றுள் ளம்'. இந்தப் பற்றுள்ளம் எப்பொழுது, இவை நிலை யாதன என்று அறிகிறதோ, இந்த உடல் நான் அன்று இந்தப்பொருள் எனக்கு உரிமை அல்ல என்று எப்பொழுது உணர்கிறதோ, அப்பொழுது நல்லறிவு தலைப்படுகிறது. அதனை, ஆசிரியர்,

''நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறிவாண்மை கடை''

என மறுதலைமுகத்தான் கூறினுர். இவ்வுண்மையை விளக்க வந்தபோது.

''யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.''

என்று அருளுகிறார். ''யான் எனது என்னும் செருக்கு'' அறியாமை. அறியாமை இரண்டு பிரிவினது. ஒன்று, பொருளைத் தெரிந்து கொள்ளாமல் இருப்பது, மற்றொன்று ஒன்றை மற்றொன்றாக அறிவது. உண்மைப் பொருளை அறியாமல் இருப்பதும் அறியாமை, அழிந்து போகும் பொருளை அழியாப் பொருளென்று மயங்கி அறிவதும் அறியாமை. அதனைத்தான் திருவள்ளுவர், 'மெய்ப் பொருள் காண்பது அறிவு' என்றும் நில்லாதவற்றை நிலை யின என்றுணர்வது அறியாமை என்றும் கூறினார். எனவே, அறியாமையானது, நிலையாதனவற்றில் உள்ளம் ஓடி, அவையே நிலைத்தன என்று பற்றி அதனை அடைய வும், அனுபவிக்கவும் முயன்று இறுதியில் துன்பத்துக்கு ஆளாக்குகிறது. ஆகையால் உயிர்கள், அறியாமையால் அவாவுட்பட்டுத் துன்பத்தினை இன்பமெனக் கருதிப் பிறவி யின்கண் வந்து பலபிறவிகளிலும் துன்பத்தையே அடைந்து இஃது இன்பமன்று இஃது இன்பமன்று என்று உணர்ந்து உண்மையான இன்பத்தை அறியவும் அடைய வும் முயன்று மனிதப்பிறவியைப் பெறுகின்றன. இந்த மனிதப்பிறவிதான், உண்மைப்பொருளையும், உண்மை இன்பத்தையும் அடைதற்குத் துணை செய்வதாகும். இந்த உண்மையினைத்தான் மணிவாசகப் பெருமான்,

'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்றும்
'மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்'

என்றும் கூறி அருளினார். எனவே பிறப்புப் பேதமை யால் வருவதென்பதும், பேதமை வினையைவிளைப்பதென் பதும் பெற்றாம். இனி, பிறப்பு பெருங்கடல் போன்றது. கடலைத் திருவள்ளுவர், நெடுங்கடல் என்றும், பெருங் கடல் என்றும், விரிநீர் என்றும் கூறுவார். ஒவ்வொன்றும்

ஒவ்வொரு பொருள் நுட்பமுடையது. பெருங்கடல், ஆழ முடையது, நெடுங்கடல், நீளமுடையது. விரிகடல் அகல முடையது, என்ற பொருளில் பெருங்கடல், நெடுங்கடல் விரிகடல் என்பார். இம்மூன்றனையும் கொண்டு ஒன்ருக முடிப்பின், கடலானது ஆழமும், நீளமும், அகலமும், உடையது என்ற பொருள் தருதலை யுணரலாம். அகலமும், நீளமும், கடலின் எல்லையிலாத் தன்மையை யுணர்த்தும். அதுபோல, பிறவியைக் கடலுக்கு ஒப்பிடுவோமானுல், பிறவியும் எல்லையிலாத் தன்மையினையும், அறியமுடியா நிலையினையும் உடையது என்றறிய முடியும். இப்பொருள் படத்தான் ' பிறவிப் பெருங்கடல், எனக்கூறினுர். உல கத் தோற்றம் சொல்ல வந்த சான்ருேர்கள் வானிலிருந்து காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலனும், முறையே தோன்றின என்பர். இவற்றின், கூறுபாட்டினை உணரும் போது, நுண்மை யிலிருந்து, சிறிது சிறிதாகப் பருப்பொருள் தோன்றி யுள்ளமை யறியமுடியும். எனவே, நீரிலிருந்து நிலந் தோன்றிற்று ஆகையால், நிலத்தினும், பெரிதாய நீர் என்பதனைப் பெருங்கடல் என்று கூறினுர் என்று கொள்ளினும் அமையும். அதுபோலவே, வினைகள், முத் திறத்தன. அவை, ஆகாமியம் பிராரத்துவம், சஞ்சிதம் என்பன. அவற்றுள், சஞ்சித கன்மங்களுள், பயனளிக்கும் நிலையிலுள்ள, பிராரத்துவ கன்மத்துக் கீடாய் வருவது, பிறவி யாகையால், அனைத்து வினைப் பயனையும், துய்த்தற்குரிய பிறவிகள் எண்ணில, என்று பிறவியின் அளப்பருந்தன்மையை விளக்கப் பிறவிப் பெருங்கடல் என்று கூறினுர் எனக்கொள்ளத் தகும். கடல் எவ்வளவு பெரிதாயினும், நீளமாயினும், அறிய முடியா நிலைத்தாயினும், உணவாகவோ, உணவை உண்டாக்கக் கூடிய நீராகவோ பயன்படுவதில்லை. உப்புத் தன்மையுடையது. அதுபோலவே, பிறவியும், எவ்

வளவு உயர்ந்த தாயினும், அளப்பரும் வியத்தகு தோற்ற முடையதாயினும், துன்பமேயாய உப்புத்தன்மை யுடையது என்பதனைக் குறிப்பாராய்ப் 'பிறவிப் பெருங்கடல்' என்று கூறினர் எனக் கொளலும் ஆம். கடலானது, கடத்தற்கரியது. கடலுட்பட்டான் பிழைத்தலும் அரிது. என் செய்வது? உழன்று உழன்று நீந்தமுடியாது அதனுள்ளேயே அழுந்தி அழிவதா? அன்றிக் கடலைக் கடக்க முயல்வதா? அறிவுடையான், ஆற்றுந்துணையும் நிலைத்து, வாய்ப்புக் கிடைத்தால் துணை கொண்டு கரையேறவே முயற்சிப்பான். அங்ஙனமே, பிறவியென்னும், கடலுட்பட்ட அறிவுடை மனிதன், ஆற்றுந்துணையும் அறவழியில் நிலைத்து, வாய்ப்பு வரும் போது இறைவனுடைய திருநாமப் புணைபற்றி, அவனடியாம் கரைகாண முயற்சிப்பான் என்பதனைப் பின் விளக்க, முன்னுகப் 'பிறவிப் பெருங்கடல்' என்றருளியுள்ளார் என அறியவும் கூடும். மணிவாசகனர் இத்திருக்குறள் உண்மையினை விளக்குவார் போன்று, திருச்சதகத்தில்,

> தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத் தெவ்வத்
> தடந்திரையால் எற்றுண்டு பற்ருென்றின்றிக்
> கனியை நேர் துவர் வாயார் என்னுங்காலால்
> கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
> இனியென்னே உய்யுமாறு என்றென் றெண்ணி
> ஐந்தெழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
> முனைவனே முதலந்தம் இல்லா மல்லற் கரைகாட்டி
> யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே.

என்றருளிய திருப்பாசுரத்தில் மிக அழகாகத் திருக்குறள் விளக்கம் செய்திருத்தலை அறியலாம்.

பொருளல்லாத பொருளைத் துணையாகப் பற்றிப் பிறவிப் பெருங்கடலைக் கடக்க எண்ணினுல், அவ்வோட்டைப்படகு இடையில் பாறையில் மோதி உடைந்து

போகப் பிறவி பாழாய் விடும் என்பதனையும் நம் சான்ரோர் பெருமக்கள் கூறியிருக்கின்றனர். திருநாவுக்கரசர் பெருமான், கடற்கரை ஊராய திருவொற்றியூருள் எழுந் தருளினபோது கடலும் பிறவியும் ஒரு சமமாய் இருப் பதனை உள்ளுணர்ந்து ஓதுவாராய்

மனமெனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச் செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாரைதாக்கி மறியும் போது அறிய ஒண்ணுது
உனை உனும் உணர்வை நல்காய் ஒற்றியூர் உடைய
கோவே'

என்றருளியுள்ளமையை உற்று நோக்கினுல், உண்மை யான சார்பு இருந்தாலன்றிப் பிறவிப்பெருங்கடலைக் கடத்தலரிது என்ற உண்மை புலனுகும். ஆகையால், திருவள்ளுவர் நம்மனோர்க்குப் பிறவியைப் பெருங்கடல் என்று கூறியதில், கடத்தற்கரிது என்ற பொருளும் தோன்றும்படியே கூறியுள்ளார் என்பதனையும் நாமறிதல் வேண்டும். மற்றும், திருவள்ளுவர் இப்பத்தாம் குறளில், இருநிலை ஓதுவாராய், உயிர்நிலை, இறைநிலையைக் குறிப்பிடுகிருர். உயிர்நிலை உயர்நிலை பெறுதற்குரியது. இறைநிலை என்றைக்கும் ஒருநிலையில் அமைந்திருப்பது என்பதனை நினைப்பூட்டி அறிவுறுத்த 'பிறவிப்பெருங்கடல் நீந்துவர்' எனக் குறிப்பிடுகிருர். பெரிய படுகுழியாகிய (கடல்) பிறவிப் பெரும் பள்ளத்தில் விழுந்து தவிக்கும் உயிர்கள் கரையாகிய உயர் இடத்தையடைய வேண்டிய நிலையில் உள்ளன. அவ்வாறு உயர்நிலை எய்தும் உயிர் களும் உள. அவை உயர்ந்தன என்பதனை யுணர்த்தவே, பிறவிப்பெருங்கடல் நீந்துவர் என உயர்திணைமேல் வைத்தும் உடன்பாட்டு முகத்தானும் கூறியருளினர். இதுவரை ஒன்பது திருக்குறள் களினுல், வழிவகுத்து வந்த ஆசிரியர், அம்முறை தவருது, ஒழுகும்

ஆற்றலுடையார் பிறவிப்பெருங்கடலில் அழுந்தியழியாது அவனுமப்புணை பற்றி, அவனடிக்கரையை அடைவர் என் றருளுவாராய், அதனருமை தோன்ற நீந்துவர் என்ற சொல்லால் குறிப்பிடுவாராயினர். இனி, இத்திருக்குறளில் ஒரு சிறப்புடைப்பொருளும் நுண்ணிதாய் உணரப்படும். என்னெனில், பிறவியெனும் பெரும் பவ்வத்தில் உழலும் உயிர்கள் உய்ய வேண்டுமாயின் பிறவியில்லாத பெரிய வனைச் சார்ந்தாலன்றிப் பிழைக்கமுடியாது. பிறவியில் உள்ளவன், பிறவா நிலையருளலும் இல்லை. இதனை உணர்ந்த பிறசமயத்தவரும் கூட, இறைவனைக் குறிப்பிடும் போது, பெரியோருக்கெல்லாம், அவனே பெரியவன் என் பதற்குக் காரணம், பிறவா நிலையுடையான் என்றும், அவனே பிறவியறுப்பான் என்றும் உணர்த்துவாராய்ப் 'பிறவாயாக்கைப் பெரியோன்' என்று கூறிப்போந்தனர். இந்த உண்மையை உய்த்துணர்ந்த பேரறிஞராய நச் சினார்க்கினியர் தாம்விரித்த உரைக்கண் எவ்விடத்தும், சிவபரம் பொருளைக்குறிப்பிடும் இடந்தோறும் 'இறைவன்' என்றே குறிப்பிடுவதையும் கற்றறிந்த நல்லறிஞர் காண்பர். ஆகையால் திருவள்ளுவர், பிறவாயாக்கைப் பெரி யோனைய, இறைவனடிச் சார்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என்றருளினர் எனக்கொள்க. இனி, இறைவன் என்ற சொற்பொருள் நுனித்தறியக்கூடிய ஓர் அருஞ் சொல்லாகும். கடவுள் வாழ்த்தில் பத்தாம் திருக்குறள் பயனுணர்த்தும் குறளாகும். மற்றை ஒன்பதில், ஐந்தாம் குறள் நடுநின்ற குறளாகும். அக்குறளில், இருள் சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு' என அருளியிருக்கிறர். மற்றை எட்டுக் குறள்களிலும், இறைவனுக்கு வேறு வேறு பெயர்கள் கொடுத்து வந்து, ஐந்தாவதாய நடுவிற் குறளில், இறை வன் என்று எடுத்து மொழிந்து, அப்பெயரையே பத்தாம் பயன்குறளிலும் அனுவதித்து, இறைவன் என்று கூறு

வதால் அப்பெயரின் அருமை உணரற்பாற்று. அல்லதூ உம் அவ்வைந்தாம் குறளிலும் இருவினை கடத்தற்கு, இறைவனடியே பற்றவேண்டும், அவனடிப் புணையைப் பற்றினுரை, இருவினைகள் சேரா என ஓதியமையும் உற்று நோக்கினுல், அவ்வினைகளால் வரும் பிறவிப் பெருங் கடலையும் நீந்துதற்கு அவனடிப் புணையே துணையாம் என் பதனையும் உணரமுடியும். இதனுல் காரண காரியத் தொடர்ச்சியாய், வினையும் பிறவியும் வருதலின் அவ் வினை அறுதற்கு, இறைவனடியே துணைஎன்பதும் பெறப் படும். பற்று என்பது உடற்பற்றும் உலகப்பற்றும் என்பது மேலே கூறப்பட்டது. அப்பற்று இரண்டும் உடையது பிறவி. பிறவியாம் உடற்பற்றையும், உலகப்பற்றையும் விடவேண்டுமானுல், உடற்பற்றும், உலகப் பற்றும், ஒருக் காலும் இல்லாதவனும் பெரியோனுய இறைவனடியைச் சார்ந்தாலன்றி முடியாது என்ற உண்மையைப் பின்னும் துறவில் கூறுவாராய்

‘பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்று முடிவு கூறியுள்ளமையும் அறியலாம். இறைவன் என்ற சொல், தங்கியிருப்பவன் என்ற பொருளை யுடையது. எங்கே? எப்போது? என்ற வினுஎழும்போது எவ்விடத்தும் எப்போதும், தங்கியிருப்பவன் என்று பொருள்படும். ஆகையால் தான் இறைவன் என்ற சொல் உலக பாலகனுய அரசனுக்கும், ஒருபுடை ஒப்புமை கொண்டு

‘முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை யென்று வைக்கப்படும்’

எனக் காட்டினர்.

‘உறங்குமாயினும் மன்னவன் தன்ஞெளி,
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்’

என்றபடி, அரசன் ஓரிடத்திருந்து, முறை செய்தானுயினும் எல்லா இடங்களிலும், இரவிலும் பகலிலும், அவனுணை சென்று மக்களை நல்வழிப் படுத்தலால், அவ்வரசனையும் இறை என்று சொல்லலாம்' என்ற பொருள்பட 'இறை யென்று வைக்கப்படும்' என்று கூறினுர். இக்கருத் தினையே பின் வந்த பெரியோரும்

'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்
டேனே என்னும்' என்று பணித்தனர்.

ஆகவே இறைவன் எவ்விடத்தும் எப்போதும் உள்ளான் என உணர்ந்து நல்வழிப்பட்டு அவனடிச்சார்தலே பிறவிப்பெருங்கடலைக் கடத்தற்குத்தக்க சாதனம் எனக் கூறிய வாருகக் கொள்க. இக்கருத்தினை, சுந்தரர் பெரு மான் திருக்கேதாரம் என்ற திருப்பதிப் பதிகத்து,

திருச் சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம் இது மண்ணுவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
தாழாது அறம் செய்ம்மின் தடங்கண்ணுன் மலரோனும்
கீழ்மேலுற நின்ருன் திருக்கேதாரம் என்னீரே

திருச் சிற்றம் பலம்

என்றருளுகிருர். இத்திருப்பாசுரத்தில், அடிகள் பிற வியைக் கடலென்றும், வாழ்வை மாயம் என்றும் கூறிய தோடமையாது, உடலை வினையாக்கிய நோய் பொதிந்த பறி யெனக் காட்டிச் சிறிதும் தாழ்க்காது அறவழி நின்று அரு ளாளன் எழுந்தருளியுள்ள திருக்கேதாரத்தை வழிபட்டு வாழ்த்துங்கள் என்று கூறியருளினுர். ஆகையால், அங்ஙனம் வாழ்த்தி வணங்கும் தொண்டர், பிறவியெனும் பெருங்கடலை நீந்திக் கரையேறுவர் என்று வள்ளுவர் 'பிறவிப்பெருங்கடல் நீந்துவர்' எனக்கூறினுர்.

உலகநிலை முழுதாகி ஆங்காங்குள்ள உயிராகி உயிர்க்குயிராய் இறைவன் இருந்தும் அவனடிச்சேர்ந் தார் மிகமிகச் சிலராய், அவனடிச்சார்புக்கு வழிநிற்பார் மிகமிக அரியராய் நிற்ப, உலகவழியே சென்று சென்று, வாழ்வைப் பாழாக்கும் நிலையினரே பலராய் வாழக் காண் கிறோம் ஆகையால், இறைவனடி சேராதார் நீந்தார் என முடித்துக்கொடுக்கிறார். விபரீத உணர்வு மிக்குள்ளமை யானும், உண்மையறிவு குறைந்துள்ளமையானும் மிக்கு இருக்கும் நிலையினைக்காட்டவே சேராதார் என முடித் தார். கண்டதைக்கொண்டு காணாததை முடித்தல் என்ற தற்கு ஏற்ப, உலகில் பிறவியில் பிறந்து உழலும், துன்ப வாழ்வினரைக்காட்டி இவரெல்லாரும் இறைவனடிச் சார்பு பெருமையால் பிறவிப்பெருங்கடலில் நீந்த முடியாது அமிழ்ந்து போகும் நிலையினர், இந்நிலை நீங்கிக் கரை சேர்ந்தார் உளர் என உணர்த்து வாராய், சேர்ந்தார் நீந்து வர் என உணரவைக்கிறார்.

இரண்டு வினைமுற்றுக்கு இரண்டு எழுவாய் வேண்டும். நீந்துவர், நீந்தார் என்பன இரண்டு வினைமுற்றுக் கள். நீந்தார் என்ற வினைமுற்றுக்கு, இறைவனடி சேரா தார் என்ற எழுவாய் அமைத்து, நீந்துவர் என்ற வினை முற்றுக்குச்சேர்ந்தார் என்ற எழுவாயைக் கொள்ளவைத்த தன் குறிப்பு அத்தகையோர் குறைவு என்பதும், அவர் களைக் காண்பதும் அரிது என்பதும், அவர்களும் உண்டு என்று உணரவேண்டும் 'என்பதுமே யாம். அல்லாமலும், இறைவனடி என்ற சொற்றொடர் இடை நின்று, சேரா தார், சேர்ந்தார், இருவர்க்கும் பொதுவாய்ப் பொருள் இயைபுபட நிறுத்தியமையும் உணரலாம். இலக்கணத் தில் நடுநின்ற சொற்றொடர் அழகாய் அமையினும் பொருட் செறிவுடைய சொற்றொடராகும். இறைவன் எங்கும் எப் போதும் உளன். அறிந்து அடைதலும், அடையாமையும்

உயிர்களின் செயல், அவன் அனைத்துயிரிலும், ஒரு தன்மையனாய் விளங்கிக் கொண்டிருக்கிறான். அவனடிச்சார் பிணைப்பெற்றுய்தலும், பெறாது பெருங்கடற்பிறவியுள் ஆழ்தலும், உயிர்களின் முயற்சியும் முயற்சியின்மையும் ஆகும், என்பதனை உணர்த்தவே இறைவன் என்ற சொல்லையே எடுத்து, அச்சொல்லையும் நடுவிற்பெய்து, இறைவனடி சேர்ந்தார் நீந்துவர் என உணர்த்தி, சேராதார் நீந்தார் எனமுடித்துக்கொடுத்த அழகினை நாம் என்றும் மறத்தலாகாது.

மேலும், அடி என்ற சொல், அருளையும், அறிவையும் குறிப்பன என்பது சான்றோர் கண்ட உண்மை.

'இணைமலர் நல்லார் புனைவர்'

என்ற சிவஞான போத வாழ்த்துக்கு விளக்கம் செய்த மாதவச் சிவஞான யோகிகள் உரையால் இது தெளியலாம். அன்றியும், திருத்தொண்டர் புராணத்து முதற்பாட்டாய 'உலகெலாம்' என்று தொடங்கும் அருட்பாட்டின் முடிவில், 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என்ற பகுதியில், சிலம்படி என்றது, அருளையும், மெய்யறிவையும் குறிப்பது என்பது யாவரும் உணர்வர். அங்ஙனமாகத் திருவள்ளுவர் கடவுள் வாழ்த்தில் பத்துத் திருக்குறள்களில், ஏழிடங்களில், தாள் என்றும் அடி என்றும் கூறியமைக்குக் காரணம் நாமறிதல் வேண்டும். இறைவன் திருவடி சேர்தல் என்பது அவனருளையும், பதியறிவாம் மெய்ஞ்ஞானம் பெறுதலையுமே குறிக்கும் என்பதனையே நமக்குக் குறிப்பான் உணர்த்தியவாறும். பல சமயங்கள், அடிமையாம் நிலையையும், ஒன்றும் நிலையையும், வேறு வேறு நிலைகளையும் வீடுபேறாக உணர்த்துவனவாய் நிற்க, திருவடிப்பேறு பெறுதலாய ஒன்றே உயிர்கள் அடையும் பேராவியற்கையெனக் கருதும் சைவசித்தாந்த உண்மையும், தாள், அடி, என்று பன்முறை

காட்டிய தோடமையாது, இறைவனடி சேர்ந்தார், பிறவிப் பெருங்கடல் நீந்துவர் எனக்கூறி இறைவனடிசேர்தலே வீடுபேறும் எனத் திருவள்ளுவர் காட்டும் உண்மை, அறிவோடு ஒன்றி நிற்றலை நாமறிதல் வேண்டும். இங் ஙனமே, ஆதிபகவன் உலகத்திற்கு முதல்வன் என்று தொடங்கி, அவனடிப்பேறு உயிர்கட்கு உய்வு என முடித்துக் கொடுக்கும் முறையினை உற்று நோக்கும் போது, உலகம் உயிர் கடவுள் என்ற முப்பொருளையும் அறிவான் அளந்தறிந்து காட்டிய முதற்பேராசிரியர் திருவள்ளுவர் என்று கோடலிலும் குறையின்று. அதனு லன்றே, அனுபவநிலையில் நின்ற அருளாளர்கள், பதிகப் பனுவலில், திருக்குறளின் சொல்லையும் சொற்றொடரையும், பொருளையும், கொண்டு காட்டியிருப்ப, சாத்திரங்களாகச் செய்தருளிய, சைவசித்தாந்த சந்தான குரவர்கள், திருக் குறளை, முதல் நூலாகக்கொண்டு, ஆசிரிய வசனமாகத் திருக்குறளையே எடுத்துக்காட்டி யுண்மைப்படுத்து வாரா யினர். இங்ஙனம், அரும்பெறல் அறிவுக்கருவூலமாய், அருளையடைய வழிகாட்டும் நன்னெறி விளக்காய இப் பத்தாம் திருக்குறள், ஞானசம்பந்தப்பெருமானும் சிறிய பெருந்தகையார் திருவாக்கில், அனுபவ அருள் மொழி யாய், அன்பு பெருக்கும் இன்ப இசைத்தமிழாய் நன் னெறிச் செலுத்தும் தோணியாய் அமைந்துள்ளமையை ஒரு சிறிது ஒரிரு திருப்பாசுரங்களில் காண்போம்.

சிவானுபூதிச்செல்வர்களில், 'காலந்தோறும் எவ் வளவோ நல்லோர்கள் தேவாரம் ஓதியருளிய மூவர் முதலிகளுக்கும் முன்னுக இருந்தனர் என்பதனைத் தேவா ரத்தைக் கொண்டும், திருத்தொண்டர் புராணத்தைக் கொண்டும், பிறநூல்களைக்கொண்டும் அறியலாம். எனினும், மூவர்முதலிகளே, தமிழோடு இசைபாடி, அன்பெனுஞ் சுவையை இன்பத்தமிழில் வடித்தெடுத்துக் கொடுத்துப் பன்னெறியானும் பாழ்பட்டுக் கிடந்த உலக

மக்களை நன்னெறிக்கே செல்லும் வண்ணம் நல்கினர். ஆதலின், சைவஉலகம் அம்மூவரையே முதல்வர்களாகக் கொண்டு, அவர்கள் அருளிய தீந்தமிழிசைப் பாடல்களை முறைப்படுத்தி, முதலில் வைத்துப் போற்றுவாராயினர். அம்மூவரும் போற்றிய பெரியோர்கள் அனுபூதி மான்களாய் அமைந்தனரே யன்றி, ஆசாரிய மூர்த்திகளாய் உலகுக்குப்பெருவிளக்கம் தந்தவராய், வழிவழி வாழும் மக்கட்கு வழிவகுத்துக்கொடுத்தவராய் அமையாத காரணத்தால், வணக்கத்துக்குரியராய அம்மாத்திரமே பெற்றனர். ஆயின், மூவராய, ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் பெருமானுய இவர்கள், அனுபூதிச் செல்வராய் வாழ்ந்த தோடன்றி வழிவழி வரும் மக்கட்கும், அனுபூதியைப்பெற வழி வகுத்தும், அன்பினுல் அகங் குழைந்து பாடிப்பெறலாம் என்று பாடிக்கொடுத்தும், பெருமை பெற்றனர். அம்மூவருள்ளும், சுந்தரர் பெருமான் குறை வினையால் இம்மானுடப் பிறவியில் வந்து சிறந்த கல்வியுடையராய்ப் புலவர் என்றும், நாவலர் என்றும் புகழப்படும் அத்தகு நிலையில் வாழ்ந்து, தடுத்தாட் கொள்ளப்பட்ட பெருமையுடையவர். திருநாவுக்கரசர் மனமுகிழ்த்த சுருள் மலரும் கல்விபயிலத் தொடங்கி, நில்லாத உலகியல்புகண்டு, நிலையாவாழ்க்கையல்லேன் என்று அறத்துறந்து, சமயங்களானவற்றின் நல்லாறு மிகத்தெளிந்து, நம்பர் அருளாமையால் கொல்லாமை மறைந்துறையும் சமண் சமயங்குறுகி, அங்குள்ள அனைத்துநூலையுங் கற்றுத் துறவொழுக்கந் தலைநின்று, சமண்சமயத் தொல்லாணை நல்லாசானுய், அரசனுக்கும் குருவாய், தரும சேனர் என்ற பெரும்பதவி வகித்த பெருமையாளர். ஆயின் திருஞானசம்பந்தர் சிவம் பெருக்கும் பிள்ளையாராய், உலக அறியாமை இருள் நீங்க மிகு சைவத்துறை விளங்கப் பூதபரம்பரைபொலியத் தமிழினிமை இசையோடு தேக்கெறியத் தென்தமிழ் நாடு

செய்த தவப்பயனுய்த் தோன்றியவர். மூன்ருண்டில், முற்றும் நிரம்பா உடல், உளம், உயிர் என்ற முறையில், திருவருளே தூண்ட உயிர்களின் குறை நீங்க அழுது, ஞானப்பாலுண்டு தேக்கி எம்செவி யமுதாய் வார்த்த பெருமானுய் விளங்கியவர். ஆகையால் அறிவனூற் பொருண்மையும் சொல்லும் சொற்ருெடரும், சுந்தரர், நாவுக்கரசர் இவர்களுடைய செஞ்சொல் தீந்தமிழ்ப் பாட்டுக்களுள் இடம் பெறுவன போன்று, இன்றி, அனுப வப்பொருளாய், ஆசிரிய வசனமாய், முதல் நூற் பொருளாய் வெளிவருவதே ஞானசம்பந்தருடைய திரு வாக்கின் போக்கு என்பதே நாமறிதல் வேண்டும். எப் போது ஜாக்கிரத்தே அதீதத்தில் இருக்கும் அனுபவி களாகையால், காண்பனவும், பேசுவனவும், அனைத்தும், இறையருளிற்ருேய்வின் காரணமாகவே வெளிவருவதால், அவர்களுடைய வாக்கு, இறைவன் வசனமாகவே அமை கின்றன. அதனுல் தான், அத்திருவாக்குகளை வேதம் என்று வழங்கும் வழக்கு வந்தது. அங்ஙனமாய பிள்ளைப் பெருந்தகையாரின் திருவாக்கில், திருக்குறட் கருத்துக்கள் வரும் போது, அவ்வாக்கின் அருமையும், திருக்குறளின் பெருமையும் நம்மனோர்க்குப் பேருவகையை யளிப்ப தோடு, பற்றுள்ளத்தையும் இயல்பாகவே உண்டாக்கு கின்றன. ஆகையால், ஞானசம்பந்தப்பிள்ளையாரின் திரு வாக்கில் அன்புள்ளங்கொண்டு கனிவோடு உருகிப்பாடும் போதும், அறிவுள்ளத்துக்கும் துணை செய்வதாய், அமைந்த திருப்பாசுரம் ஒன்றினைப் பார்ப்போம்.

திருச்சிற்றம்பலம்.

பிறவி யறுப்பீர்காள்
அறவ ஞூரை
மறவா தேத்துமின்
துறவி யாகுமே.

திருச்சிற்றம்பலம். (1-91-2)

திருச்சிற்றம்பலம்.

‘ இந்தணையுஞ் சடையார் இப்பிறப்பென்னை
அறுக்க வல்லார்
வந்தணைந்து இன்னிசை பாடுவார்பால் மன்னினர் மன்னி
இருந்த வூராம்
கொந்தணையுங் குழலார் விழவிற் கூட்டம் இடையிடை
சேரும் வீதிப்
பந்தணையும் விரலார்தம் ஆவூர்ப் பசுபதி யீச்சுரம்
பாடு நாவே ’

திருச்சிற்றம்பலம்

துன்பத்தொடக்காய பிறவியை அறுக்க வேண்டும் என்ற எண்ணமுடையாராய பக்குவிகளை யழைத்து உபதேசிப்பதாய் முன்னிலைப்படுத்திய முதல் திருப்பாசுரத்தில், பிறவிக் கடலைத் துறப்பதற்கு வழிகாட்டுகிறார் அடிகள். துறவியாகும், என்று அறுதியிட்டுக்கூறுகிறார். அதற்கு வேண்டுவது, மறவாது ஏத்துதல், மறவாது ஏத்துமின் ஏத்தினால், பிறவிக் கடலினின்றும் துறவியாகும் என்று உறுதி கூறுகிறார். ஆரூரில் உள்ள அறவனை மறவாது ஏத்துமின் என்றது இறைவனை அறவனைக் காண்கிற காட்சி வேண்டும் என்றருளியபடியாம். அறவன் என்றது ‘அறவாழி அந்தணன்’ என்ற சொற்றொடரின் சுருக்கம் என்றறிக. அறவாழி அந்தணனும் அறவனை மறவாது ஏத்தினால் துன்பக்கடலினின்றும் துறவியாகும் எனமுடித்துக்கொடுத்தலாக அருள் வாக்கினை அனுபவிக்கவேண்டும். அடுத்த திருப்பாசுரம், ஆவூர்ப் பசுபதீச்சுரத் திருப்பதிகத்துள்ளது. விரிந்த பொருளையும் திருக்குறள் பத்தாம் பாட்டின் பயனையும் உள்ளடக்கியது. அருட்பாசுரங்களைப் பாடிப் பயன் துய்க்க வேண்டும் என்ற கருத்தால் நம்முன்னைச் சான்றோர் உரை விளக்கம் செய்யாது போயினர். அன்றியும் அருட்குறிப்பால் எழுந்த திருப்பாசுரங்கட்கு அவ்

வருட்பேறு நிலை பெற்ருலன்றி, உயிரறிவினுல், இதுதான் பொருளென அறுதியிட்டும் கூறமுடியாது. கூறவும் கூடாது. ஆகையால் அருளாளர்களுடைய, அருளின் பாடல்களுக்கு, நம் முன்னேர் உரைவகுக்காது, உட் பொருள் காட்டாது, பாடினுல் பாட்டின்பயன் பெறலாம் என்றே கூறிப்போந்தனர். ஆனுல், மணிவாசகப் பெரு மான்,

> 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
> செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
> பல்லோரும் ஏத்தப் பணிந்து!

என்றருளுவதால் பொருளுணர்ச்சி நம்மை அனுபவத்துக்கு அழைத்துச்செல்லும் வழித்துணையாம். ஆனுல், பாட்டின் பொருளை அணுகும் போது, நாம் காணும் பொருளேதான் அப்பாட்டின் பொருளென அருட்பாடல்களைக் கருதி விடக் கூடாது. நம்மறிவுக்கு அவ்வளவுதான் அறிய முடிகிறது என்றே கொள்ளவேண்டும். அங்ஙனம் தொடர்வதால் இழுக்கின்று. அந்தமுறையில்தான் சேக்கிழார் பெரு மானும், ஞானசம்பந்தப்பிள்ளையாரின் திருப்பாசுரங்கட்கு உரைவகுக்கும் போது, பிள்ளையாரின் திருவருள் காட்டிய அளவே கூறித்தொழுதேன் என்றருளுகிருர். அங்ஙனமே, இத்திருப்பாசுரத்திற்கும் ஒருசிறிது திருக்குறள் தொடர்பு காணும் அம்மாத்திரத்தில் பொருள் காணமுற்படலாம்.

'இந்தணையுஞ் சடையார்' என்றருளியது பிறைச் சந்திரனை யணிந்தவர் என்பது. குற்றஞ்செய்தவர் பிழை யுணர்ந்து அடைக்கலம் புகுவராயின், அவரை அருளால் மேலாகச் செய்யும் அருளாளர் என்றதாம். அருளாளர் அந்தணர். 'விடையார்' என்றது, அறத்தைப் பணி கொண்டவர் என்ற குறிப்பாம். அறமே விடையாகக் கூறப்படுவது என்பது முன்னேயும் கூறப்பட்டது. 'அற வாணர் அருளாளர்' என்பதே இந்தணையுஞ் சடையார்

விடையார் என்பதாகக் கொள்ளுவோமாயின், அவரை அடைக்கலமாகப் புகுவோமாயின் 'என்னையிப்பிறப் பறுக்க வல்லார்' எனத் தன்மேல் வைத்துப் பிறவியறுத்துப் பேராவியற்கையளிக்க வல்லார் அவர் என்றருளியவாறும். அறவாணனும் அந்தணனே பிறவிப் பெருங்கடலினின்றும் நீக்கித்தன்னடிக்கரை சேர்க்கும் ஆற்றலுடையான் என்று 'அறுக்க வல்லார்' என்பதனுல் அருளினுர். அங்ஙனம் அவனடிச்சார்ந்து, அச்சார்பே நற்சார்பெனஉணர்ந்து இன்னிசையோடு உருகிப்பாடினுல் அப்பாட்டின் பொருளாய், அவ்வனுபவிகளது ஆன்மநாயகனுய் அவர்களிடத்திலேயே நிலைத்து நின்ற பொருளாயுள்ளார் என்பதனை,

'வந்தணைந்து இன்னிசை பாடுவார்பால் மன்னினர்'

என்றருளுகிறுர். இன்னிசை பாடுவார்பால் என்பது ஏழிசையாய் இசைப்பயனுய் இருப்பவன் இறைவன் ஆகையால், பாட்டின் பயனுய இறைவன் இசைப் பயனுயும் அமைந்துளான் என்பதனையுணர்த்தியவாறும். இசையெழும் போது, ஒலியாய் உள்ளிருந்து எழுந்து, இசைப்பவனையும் மகிழவைத்துக் கேட்பவரையும் மகிழ வைப்பது போல, இசைப்பயனும் இறைவன், இன்னிசை பாடுவார் பால் மன்னினராய் அவர்களையும் மகிழவைத்து, அவர்களது இனிய இசைப்பாட்டினைக்கேட்பவர்களையும் இன்பமடையச் செய்பவனுய் வெளிப்படுவான் என்ற பொருளை உணர்த்துகிறது. 'வந்து' என்றது உலக வழிகளில் ஓடுகின்ற உணர்ச்சிகளை ஒடுக்கி ஒருமுகப்படுதலை உணர்த்தியவாறும். அணைந்து என்பது, உள்ளிருக்கும் பொருளையறியாது நெடுங்காலம் வினையில் வீழ்த்திய நிலையினின்றும் நீங்கி, உண்மையாம் உள்பொருளைச்சார்ந்து என்றபடியாம். உயிர்ப்பாய்ப் புறம்போந்தும் உள்ளேயும் இருப்பவன் அவன் என்பதனை அனுபவத்தான் அறிந்து சார்ந்து என்ற குறிப்பினை, வந்தணைந்து என்ற தொடரா

லுணர்த்துகிருர். அங்ஙனம் அணைந்த போது, உயிரின் தன்மை சார்ந்ததன் வண்ணமாதல் ஆகையால், நற்சார் பால், நன்மை விளைகிறது என்ற தன்மையை, 'வந்தணைந்து இன்னிசை பாடுவார்பால்' என்ற அருளிப்பாட்டால் அறியலாம். அச்சார்பின் பயன் என்னையெனின், மன்னினர் இனிப் பிறவாமே காத்து நிற்பார் என்றருளியதால் அறிகிருேம். மன்னுதல்—நிலைபெறுதல். நிலையா வாழ்க்கையில் உழலாது, நிலைபெற்ற தன்மையை அருளுவார் என்பதாம். திருநாவுக்கரசர் பெருமானும், நிலைபெறுமாறு உணர்த்த வந்த போது, மனத்தை விளித்து 'நீவா' என உடன் கொண்டு சென்று, 'ஆருரா என்றென்றே அலறு நில்' என நிறுத்தினமையும், பிள்ளையார், 'வந்தணைந்து இன்னிசைபாடுவார் பால் மன்னினர்' என்றருளியமையும் ஒருதன்மையன என்பதை நாமறிய வேண்டும். இனி அவன் எத்தன்மையன் என்ற பொழுது, இறைவன் என்று வள்ளுவர் கூறிய இறைவன் என்ற சொற்பொருள் விரிப்பார் போன்று, மன்னினர் என்றருளினுர். பயன் கூறு முகத்தால், 'இப்பிறப்பு என்னையறுக்கவல்லார்' என்றருளிக்காட்டினுர். இதனுல், இறைவன் தன்னை வந்தடைந்தாரைத்தாங்கும் சங்கரன் ஆகையால், வந்தணைந்து இன்னிசை பாடுவார் பால் மன்னிநின்று எடுத்த பிறவியிலேயே, இனிப்பிறவாநிலையளிப்பான் என்பதனை, உணர்த்தியவாருேம். மேல் வரும், பகுதிகள் ஆவூர்ப் பசுபதீச்சுரத்தின் சிறப்பாகும். பசுபதி உயிர்கட்கு நாயகன். பசுபதீச்சுரம், உயிர்கட்கு நாயகன் எழுந்தருளியுள்ள கோயில். ஆவூர் ஊர்ப்பெயர். ஆவூரிலுள்ள உயிர்கட்கு நாயகனுடைய திருக்கோயிலை, நாவே பாடு என்று ஏவல் கொண்டமையைக் காட்டுகிறது பிற்பகுதி.

ஆவூரில் பசுபதி திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ளான் என்றது, உயிர்களிடத்தில் இறைவன் தங்கி

யுள்ளான் என்ற உண்மையையும், இறைவன் என்ற சொற்கு உயிரிடம் தங்கியுள்ளான் என்ற பொருளையும் தெளிவு செய்வனகாண்க. இவ்வாறு எங்கும் நிறை இறைவனை, தன்னுயிரிடம் தங்கியுளான் என்றறிந்தணைந்து, இன்னிசை பாடி யுருகுவார் உள்ளத்து ஒளியாய் அவன், வெளிப்போந்து அருள் செய்து ஆட்கொண்டு, அல்லற் பிறவியறுப்பான். என்று,

'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்'

என்ற திருக்குறட் செம்பொருளைத் தெளிவிப்பதாய் அமைந்துள்ளமையை நாமறிந்து இன்புறுகிறோம். இங்ஙனம், ஞானசம்பந்தப்பிள்ளையாரது உண்மையனுபவ உயர்மொழித் தீஞ்சுவைப்பாடல்களில் திருவள்ளுவனார் மெய்யறிவுக் காட்சியான் விளக்கிய செம்பொருளாம் கடவுள் வாழ்த்தின் பத்துத்திருக்குறளும், சொல்லாலும் பொருளாலும் இடம் பெற்றுள்ளமையை நாமறியும் போது, நம்பண்டைச்சான்றோர்கள் அறிவாலும், அனுபவத்தாலும் உணர்ந்து ஓதிய உண்மை ஒன்றே என்றறிந்து கடைப் பிடித்துத் தேறவழியேற்படுகிறது.

'நூல்பல கற்றனேனும் நுனித்தறிவில்லான் என்னில்
மாலோடு வாளா கத்தும் மாநிறக் காகம் போல்வான்'

என்றபடி, பலநூல் கற்கின்ற பழக்கம் மிகும்போதெல்லாம், நூற்பொருளை நுனித்து, ஒன்றும் இடங்களை உணர்ந்து அறிவு நலம் பெற்று அன்பு கனிந்து இன்னுயிர்க்குயிராய இறைவனடிபற்றி உய்தி பெறவேண்டும் என்பதே, சான்றோரின் முடிந்த கருத்தென உணர்ந்து, மாறுபடும் இடங்களை அறிந்து கழித்து நற்சார்புபெற்று நாம் உய்தி பெற வேண்டும்.

# முடிவு

தமிழ் நாடு பண்டைப்பழம் பெருநாடு. எப்படி நாடு பழமையும் பெருமையும் உடையதோ, அங்ஙனமே, நாட்டுமக்கள் பேசும் மொழியாம் கன்னித்தமிழ் மொழியும், பழமையும் பெருமையும் உடையது என்றால் அந்நாட்டு மொழியைத்தாய்மொழியாக்கொண்ட மக்களும் அங் ஙனமே, பழமையானதும் பெருமையுடையது மான தனித் தன்மையுடையர்களாகத்தான் இருக்கவேண்டும். ஆகை யால், இன்றையதமிழகமக்களிடம் காணும், சிலகுறை கள் காலத்தானும், கலப்பானும் அமைந்தன ஆயினும் பண்டைப்பெருமையும் அவர்களிடம் இல்லாமற் போ காது தமிழர்களின் பெருமைக்குப் பல சான்றுகள் பகர லாம். ஆயினும், பண்டுதொட்டும் இடைக்காலத்தும், இன்றும் நின்று நிலவுவது, தெய்வ வழிபாடு. அத்தெய்வ வழிபாட்டை ஒருமுகமாகச் செய்யவும், உண்மை காண வும் சான்றோர்கள் பெரிதும் பண்டுதொட்டே முயன்று வந்துள்ளனர். கருத்து வேறுபாடுகளைக் களைந்து, ஒன் றென வரையறுத்து அஃது இதுதான் என உறுதிசெய்து உணர்த்தியும் உள்ளனர்.

‘ஒன்றேகுலமும் ஒருவனே தேவனும்’
‘ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு’

என்பனபோன்ற உறுதி மொழிகள் நமக்கு அவ்வுண்மை யை உறுதி செய்கின்றன. அங்ஙனம் உறுதி செய்யப் பட்டபொருளை, எங்ஙனம் உணர்வது, எப்படித்தொடர் வது என்றபோது வழிவகுத்துக்கொடுத்த சான்றோர்கள் இருவகையாயினர். பொதுவில் வைத்து, உணர்த்தினா ரும், சிறப்பாகத்தெளிவுசெய்தாரும் என. அவருள், சம யாதீதப் பழம் பொருளைப் பொதுவில் வைத்து, அனைவரும் போற்றும்படி வழிவகுத்தவர் திருவள்ளுவர் என்பதும்,

சிறப்பில் வைத்து, வழிவகுத்தவர், நாயன்மார்களாய, ஞானசம்பந்தர் முதலாயினோர் என்பதும் உலகமறிந்த உண்மை. அதனாலேயே திருவள்ளுவரை, சமயக் கணக்கர் மதிவழி போகாது, உலகியல் கூறிப் பொருள் இது என்றவர் எனக்கூறினர். அங்ஙனம், கூறினாலும், சமயப் பிணக்குடையர் அல்லர் என்று கொண்டு, சமயங்கள் கூறும் நல்லன எல்லாம் கொண்டு பொருளிது என்று கூறியவர் என்றே கொள்ளவேண்டும். உலகம் பொய் உயிர்கள் பொய் என்று கூறும் சமயப்பிணக்குகளில் செல்லாது உலகம் உண்டு. ஆனால் நில்லாதது, உயிர்கள் உண்டு, ஆனால் குறையுடையன எனக்காட்டி, நிலைத்ததும், குறையில்லது மான ஒரு பொருளுண்டு, அதற்கு இறை என்று பெயர், அப்பொருள் உயர் பொருளாகையால் இறைவன் எனக்கொள்க எனக்காட்டிய மயக்கு ஒழித்த பேரறிஞர் திருவள்ளுவர் எனக்கொள்ளலே சாலச்சிறப்புடையது. அங்ஙனம் உண்மையை யறிவு வழியில் நிலைசெய்த திருவள்ளுவர் கொள்கையை அன்புவழியில் நின்று சுட்டிக் காட்டியும், உண்மையென உலகினர்க்கு அருட்செயலால் உண்மைப்படுத்தியும் இல்லாதாரை அறிவு வழியில் நின்று வாதஞ்செய்து அருள்வழியில் நிறுத்தியும், எல்லோர்க்கும் ஒப்ப, 'ஞால நின்புகழே மிகவேண்டும்' என்று தம் உள்ளக்கிடக்கையை ஓதியும், நல்லோர்கள் வாழவும் நாடு நலம் பெறவும், வேந்தன் கோல்கோடாது நிற்பவும், கொடுமைகள் நீங்கவும் தெய்வ உணர்வு ஓங்கவும் துன்பம் துடைக்கவுமே திருவுளம் பற்றிய திருவருட்குறிப்பினையுடையர் திருஞான சம்பந்தர் என்பதனையும் நாமறிதல் வேண்டும். அதனாற்றான், சமய உண்மையை நிறுத்த வந்த வாத முகத்தில், திருவருளை முன்னிறுத்தி,

திருச்சிற்றம்பலம்.

'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தியதெல்லாமரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே'

திருச்சிற்றம்பலம்.

என்றோதியருளியமையும் நாமறிகிறோம். அங்ஙனமாய அடிகளார் திருவாக்கையும், திருவள்ளுவர் வாக்கையும் ஒன்று எனக்கொண்டு, அறிவால் தெளிந்து, அன்பால் இருந்து வாழ்வை நலம் பெற்ற வாழ்வாக மாற்றி நம்ம ஞேர், நாளும் நாளும், நாட்டுக்கும், மொழிக்கும் ஏற்ற முடைய நல்வழியில் நின்று நிலவவேண்டும் என்ற எண்ணத்தால், திருமுறைகளில் முன்னின்ற மூன்று திரு முறைகளிலே திருவள்ளுவர் கடவுள்வாழ்த்தின் செம்மைப் பொருள் காணப்படுவதனை ஒருவாறு சுட்டப்பட்டது எனக் கொள்ள வேண்டுகிறேன். தொட்ட தொட்ட இடந்தொறும் தெய்வமணமே கமழும் ஞானப்பிள்ளையாரின் திருவாக் கில், யாண்டும் திருக்குறட் கருத்துக்களைக்காணலாம் ஆயி னும், பானைசோற்றுக்கு ஒரு சோறு பதம் போலக் காட்டப் பட்டதேயன்றி, அனைத்தையும் தொகுத்துக்கூறியதும் அன்றெனவும் அறிக. மனிதனுடைய உள்ளம், எந்த எந்தத் தொடர்பால், எந்த எந்தப் பொருளைப் பற்று கிறதோ, அதனையே பெரிதெனவும் உண்மை யெனவும் விடாப்பிடியாகப் பற்றிவிடும் என்பது உண்மையாகலின், என்னுடைய எண்ணமும் அவ்வுண்மைக்கு விலக்கு அன்ருகலின், உயர்ந்த உண்மையான பொய்யாமொழி யாம் திருக்குறளிலும், தெய்வத் தமிழ் மறையாம், முதல் மூன்று திருமுறைகளிலும், அறிந்த அளவு சென்று பற்றினதையே எழுதினேன் என்பதனைத் தமிழுலகம் படித்து இன்புறவேண்டுகிறேன்.

'பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்பது இடர்'

காரைக்கால் அம்மையார்

(முற்றும்)



Printed at Super Power Press, Madras-1.